# இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்

தொகுதி 2

பதிப்பாசிரியர்

**இ. சுந்தரமூர்த்தி**

**மா. ரா. அரசு**

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**தரமணி, சென்னை 600 113**

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **IndhiyaViduthalaikku Munthaiya Thamil Idhalgal, Part - II** |
| Editors | : | **E. Sundaramoorthy**<br>**M. R. Arasu** |
| Publisher | : | **International Institute of Tamil Studies,** C.I.T. Campus, Taramani, Chennai - 600 113. |
| Publication No | : | 349 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 1999 |
| Edition | : | First |
| Paper Used | : | TNPL Maplitho XL 18.6 kg |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 10 points |
| No.of Pages | : | 288 |
| Price | : | Rs. 65/- (Rupees Sixty Five only) |
| No.of Copies | : | 1200 |
| Wrapper Design | : | V. Karunanithy |
| Printed by | : | ***The PARKAR***<br>293, Ahamed Complex, 2nd Floor, Royapettah High Road, Chennai - 600 014. Ph : 8215684 |
| Subject | : | Studies on Tamil Journalism |


---

**இதழியல் ஆய்வு – தொகுதி 2**

**ச. சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை.

# அணிந்துரை

இந்திய விடுதலைப் பொன்விழா ஆண்டில் இதழியல் பற்றிய இரண்டாம் கருத்தரங்கினை 1997ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனமும் டாக்டர் மா. இராச மாணிக்கனார் இதழியல் ஆய்வு மையமும் இணைந்து நடத்தின.

இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் அன்றைய கால கட்டத்தின் பல்வேறு அரசியல், மொழி, பண்பாட்டு நிலைகளை நன்கு எடுத்துரைக்கின்றன. அன்றைய காலச் சூழலுக்கு ஏற்ப மக்களுக்கு அரசியல் அறிவியல் விழிப் புணர்வை ஊட்டிய இதழ்களின் பன்முக ஆளுமை இத் தொகுதியில் அமைந்துள்ள ஆய்வுக் கட்டுரைகளால் நன்கு தெளிவாகின்றது. எளிதில் இன்று காண இயலாத பல்வேறு இதழ்களையும் ஆய்வாளர்கள் நன்கு தேடித் தொகுத்தளித் துள்ளனர். அரிய கட்டுரைகளை வழங்கிய அறிஞர் பெரு மக்களுக்கும், அமர்வுத் தலைமைப் பொறுப்பேற்று அரிய உரைகளை வழங்கிய அறிஞர்கட்கும் நெஞ்சு நிறைந்த நன்றி.

இருநாள் கருத்தரங்க நிகழ்ச்சிகள் பச்சையப்பன் கல்லூரி யில் நடந்தேறுவதற்கு இசைவு அளித்த கல்லூரி முதல்வர் முனைவர் ஆர். எஸ். இராகவன் அவர்கட்கும் எங்கள் நன்றி.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் மொழித்துறைப் பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி அவர்களும் டாக்டர் மா. இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மைய இயக்குநர் பேராசிரியர் மா.ரா. அரசு அவர்களும் இக்கருத்தரங்கு நன்கு நடைபெறப் பல்லாற்றானும் உதவி புரிந்தார்கள். இவ்வரிய தொகுதியினைப் பதிப்பித்து உதவிய அவர்கள் இருவருக்கும் எங்கள் அன்பு நிறைந்த நன்றி. நன்கு நூலுருவாக்கம் செய்துதவிய திரு. வே. கருணாநிதி அவர்கட்கு நன்றி.

ஒளிப்படம் எடுத்து இத்தொகுதியில் இணைப்பதற்கு இதழ்களைத் தந்துதவிய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக மேலாண்மை இயக்குநர் திரு இரா. முத்துக்குமார சாமி அவர்கட்கு நன்றி. நிறுவனச்சார்பில் நடைபெறும் இதழியல் கருத்தரங்குகளில் ஆய்வுரை, அமர்வுத் தலைமையுரை, கருத்துரை, சிறப்புரைகள் வழங்குவதற்கு அறிஞர்களைத் தேர்வு செய்யும் குழுவினர் பேராசிரியர் முனைவர் பொற்கோ, முனைவர் இரா. இளவரசு, முனைவர் இ. சுந்தரமூர்த்தி, திரு மா.ரா. அரசு ஆகியோருக்கு நிறுவனத்தின் சார்பில் எங்கள் நன்றி.

நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத் தலைவர் தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறைச் செயலர் திருமிகு த. இரா. சீனிவாசன் இ.ஆ.ப. அவர்களுக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.

**இயக்குநர்**

# பதிப்புரை

## அறிவுவேட்கை

பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ்இதழ்கள் மக்களுக்கு அறிவு வேட்கையை ஊட்டுவதைத் தங்கள் நோக்கமாகக் கொண்டிருந்தன. மக்கள் நல்லொழுக்கம், பல்துறை அறிவு, மொழிப்புதுமை ஆகியவற்றைப் பெற்றிருக்கவேண்டும் என்பதில் இதழ்கள் உறுதியாய் இருந்தன. 1895ஆம் ஆண்டில் வந்த லோகோபகாரி என்னும் இதழ் பின்வருமாறு தன் நோக்கத்தைப் புலப்படுத்தும்:

> இந்த லோகோபாரி என்னும் பத்திரிகை யாதொரு இலக்கணப் பிழையுமின்றி நல்ல தெளிவான செந்தமிழ் நடையில் ஒரு அக்ஷரமேனும் பயனற்றதாயிராமல் அர்த்த புஷ்டியும் - ஜனங்களுக்கு அவசியமான விஷயங்களும் இராஜாங்க சமாசாரங்களே முக்கியமாயிருக்கப்பெற்றதாயும், படிப்பவர்களுக்கு நன்னடத்தையும் லௌகீக யுக்தியும், பாஷாஞானமும், சர்க்கார் விஷயங்களும் சிவில் கிரிமினல் விவகாரஞானமும், ஈசுவர பக்தியும் ஆழ்ந்த யோசனையும் உண்டாக்கக்கூடியதாய் இங்கீலிசும் தமிழும் நன்றாகக் கற்ற பண்டிதர்களால் நடத்தப்பட்டுத் தமிழ் ஜில்லாக்கள் முழுவதும் ஜொலிக்கும் படியாயிருக்கும்.[1]

இவ்வாறு கூறும் இதழின் நோக்கத்தால் அன்றைய இதழியலாளர்களின் நோக்கம் நன்கு தெளிவாகின்றது. ஆங்கிலமும், தமிழும் கற்ற அறிஞர்கள் மக்களைப் புதிய விழிப்பிற்கு இட்டுச் செல்ல வேண்டும் என்னும் வேட்கையும், செந்தமிழில் அனைத்தையும் கொண்டு வரவேண்டும் என்னும் அவாவும் இதழ் ஆசிரியர்களுக்கு இருந்ததைக் காட்டுகின்றன. இதே காலகட்டத்தில் யாழ்ப்பாணத்தில் தோன்றிய சைவ உதயபானு[2] (1884) என்னும் இதழும் இக்கருத்தியல் நோக்கங்களுக்கு முன்னோடியாய் விளங்குவதையும் காணலாம். கலாநிதி கைலாசபதி அக்காலச் சூழலை அவ்விதழில் வெளிவந்த செய்தி கொண்டே இதனைத் தம்நூலில் (ஈழத்து இலக்கிய முன்னோடிகள் பக்.70 -71) குறிப்பிடுவார். இவ்விதழ் யாழ்ப்பாணத்திலிருந்தும் மதுரையிலிருந்தும் ஒரே காலத்தில் வெளியிடப் பெற்றது. 1884ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற இவ்விதழில் (மதுரை, 21.4.1884)

உரைநடையின் எளிமை பற்றிய சிந்தனையை இதழாசிரியர் வலியுறுத்தி உரைப்பதனைக் காணலாம்:

> சைவ உதயபானு என்னும் இப்பத்திரிகையை நாம் இம்மதுராபுரியிலிருந்து வெளிப்படுத்தும் நோக்கத்தை நமது முதல் விஷயத்திலே தெளிவாக விளக்கியிருக்கின்றோம். நாம் இயன்றளவு நமது சித்தாந்த சைவத்துக்கு மாறுபடாமலும் வாசிப்போர் கேட்போராகிய இருபாலார் மனமும் குளிர்ந்து முகமும் மலர்ந்து களிகொள்ளத்தக்க இனிய மொழிகளையே புணர்த்திப் பலருக்கும் பிரயோசனப்படத்தக்கதாக இப் பத்திரிகையை நடத்தி வருவேமென்று எண்ணுகிறோம். அவ்வாறு இதனைச் சோர்வடையாது நடத்துதற்குச் சைவ சமயாபிமானமுள்ள பிரபுக்கள் வித்துவான்களாகிய இருபாலார் உதவியும் வேண்டப்படும். அதற்கு இவ்விந்தியா இலங்கை முதலிய இடங்களிலுள்ள கனவான்கள் பின்னிடமாட்டார்களென்று நம்புகின்றோம்.
>
> இப்பத்திரிகைக்காக எழுதப்படும் கடிதங்களும் பத்திரிகைகளும் பத்திரகிரயமும், "மதுரைப் புதுத்தெரு வாணி விலாச யந்திரசாலையின் சைவ உதயபானு பத்திராதிபர் சு. சரவணமுத்துப் பிள்ளைக்கு" என்று எழுதி நமக்கே அனுப்பப்படல் வேண்டும். கடிதமெழுதுவோர் இயன்றளவு கடுஞ்சொற் புணர்த்தலையும் கொடுந்தமிழ் மொழிகளையும், நியாயமின்றிப் பிறரைத் தாக்கத்தக்க வன்மொழி புணர்த்தலையும் நீக்கிப் பலர்க்கும் பிரயோசனப்படத்தக்க நல் விஷயங்களைத் தெளிவான எழுத்தில் எழுதி அனுப்புக

என்று இதழின் நோக்கங்களாக இனிமையான மொழிநடை, பிறரைப் புண்படுத்தத்தக்க செய்திகள் இல்லாமை என்பனவற்றை இதழாசிரியர் சுட்டி, செய்தி அமைய வேண்டிய நல்ல மொழி நடையையும் குறித்துச் செல்வது உளங்கொளத்தக்கது. பாரதி விரும்பிய மொழி நடையை அவர் காலத்திற்கு முன்பே இதழாசிரியர் சரவணமுத்துப் பிள்ளை வலியுறுத்துவது நடையியல் வளர்ச்சியில் குறிக்கத்தக்கதாகும்.

அவ்வாறே தமிழ் மொழியின் வளத்தை விரும்பாதவர்களையும் இதழ்களை வாங்கிக் கல்வியறிவைப் பெருக்கிக் கொள்ளாத செல்வர்களையும் அவர் சாடும் குரலில் உணர்ச்சி ஓங்கி ஒலிப்பதைக் காணலாம்:

> நமது தமிழ்ப்பாஷையை விருத்தியாக்கத் துணிபவர் ஒருவரை நாம் காணவில்லை. நமது தமிழர்களிலே பணம் வந்தவுடன்

> கல்வியை இழந்து தள்ளிவிடுதல் வழக்கம். தங்கள் பிள்ளை களையாதல் படிப்பிக்கின்றார்களில்லை. சொல்லுவதற்கஞ்சு வானென், பெரும்பான்மை செல்வப்பிரபுக்களெல்லாம், கல்வி யறிவிலே சூனியந்தான். பின்னர் அவர் கல்வியை விருத்தியாக்கு வதெவ்வாறு? பத்திரிகைகளையே வாசிக்க நேரமில்லை என்கி றார்கள். தாசிகளின் நடன சங்கீதங்களைக் கேட்க மாத்திரம் நேர முண்டு. பத்திரிகைகளுக்குக் கொடுக்கப் பணமில்லை. அவர்க ளுக்குக் கொடுக்கப் பணமுண்டு. இவர் விதியிருந்தபடி என் னையோ? யாமறியோம். (5.5.84, சைவ உதயபானு)

மொழியையும், இதழியலையும் வளர்க்க வேண்டும் என்னும் ஆரா வேட்கை ஆசிரியர்க்கு இருந்ததை நன்கு உணரமுடிகின்றது. ஒரு நூற்றாண்டிற்கு முன்னர் இத்தகு சிந்தனைகள் இருந்தமை எண்ணிப் பார்க்கத்தக்கது.

'சைவஉதயபானு' இதழை ஒரே சமயத்தில் யாழ்ப்பாணத்திலி ருந்தும் மதுரையிலிருந்தும் நடத்திய பத்திராதிபர் சரவணமுத்துப் பிள்ளை ஆறுமுகநாவலர்பால் பேரன்பு பூண்டவர். தம்முடைய இதழில் பல்வேறு நிலைகளில் நாவலரைப் போற்றிப் பாராட்டியவர். தமிழகத் திலும் அக்காலத்திய அறிஞர் பெருமக்களிடத்தும் பெரிதும் நட்புக் கொண்டிருந்தவர். 1909ஆம் ஆண்டில் மேலைச்சிவபுரியில் சன்மார்க் கசபை நிறுவப்பெற்றபோது பண்டிதமணி கதிரேசனாரின் அழைப்பை யேற்றுக் கலந்து கொண்டார். சைவச் சொற்பொழிவுகள் நிகழ்த்து வதில் வல்லவராய் விளங்கிய அவர் கதிரைவேற்பிள்ளை, சுன்னாகம் இராமசாமிப் புலவர், உடுப்பிட்டி சு. ஆறுமுகப்பிள்ளை, சபாபதிநாவ லர், பாஸ்கரசேதுபதி என்னும் புகழ்பெற்ற தமிழறிஞர்களின் தொடர்பு கொண்டவர். இதழியல் துறைக்கு அருந்தொண்டாற்றிய பத்திராதிபர் சரவணமுத்துப் பிள்ளையின் பணியைத் தொடர்ந்து 'இந்துசாதனம்' 'வித்தாரம்' முதலிய இதழ்கள் அக்காலத்தில் வெளிவந்தன. எனவே இலங்கையிலும் இந்தியாவிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட மறுமலர்ச்சிக்கு இதழ்களும் பேரளவிற்குத் துணை நிற்கின் றன. சைவத்திரு ஆறுமுக நாவலர் 'இலங்கை நேசன்' இதழில் 'பத்தி ரிகையின் கடமை சனங்களுக்குப் பொதுநன்மை' எனச் சிறப்பித்துக் கூறுவது பெரிதும் கருதத்தக்கது.

இக் காலகட்டத்தில் இந்தியா இலங்கை ஆகிய இருநாடு களிலும் மொழியுணர்வு, நாட்டுணர்வு, சமூகவுணர்வு ஆகியவை

மிகுந்திருந்த சூழலை அவ்வக்கால இதழ்கள் வெளிப்படுத்துவதை உணர முடிகின்றது.

## புதிய விழிப்புணர்வு

இதழ் சார்ந்த இயக்கம் நாட்டு விடுதலைஉணர்வை ஊட்டியது போலவே மொழிசார்ந்த இயக்கங்களும் அவ்வுணர்வை மேலும் வளர்த்தன. சென்ற நூற்றாண்டில் தோன்றிய 'உபயோகமான அறிவைப் பரவச் செய்யும் சபை' (1883), தென்னாட்டுத் தமிழ்ச் சங்கம் (1890), திராவிட பாஷா சங்கம் (1899) போன்ற அறிவியக்கப் பேரவைகள் காலத்திற்கேற்ற தொண்டாற்றின. இந்திய விடுதலை இயக்கத்தின் விளைவாக நாடு முழுவதும் மக்களிடையே புதிய விழிப்புணர்வுகள் தோன்றின. மக்கள் நாடு, மொழி, சமயம் பற்றிய தங்களின் பெருமையை உணர்ந்தனர். அவ்வாறு உணர்ந்து செயலூக்கம் பெறுவதற்குத் தமிழ் இதழியல் துறை பெருந்தொண்டாற்றியது.

## ஞானபோதினி

இந்திய விடுதலை இயக்க முன்னோடி இதழ்களுள் ஒன்றாகத் திகழ்வது ஞானபோதினி (1897). எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளையும் (1866 - 1947), வி.கோ. சூரியநாராயணசாஸ்திரியாரும் (பரிதிமாற்கலைஞர் 1870 - 1903) இவ்விதழின் வளர்ச்சிக்கு உறுதுணையாய்நின்று மேம்படுத்தினர். ஆங்கிலமும் தமிழும் அறிந்த இவ் அறிஞர் பெருமக்களால் பொதுமக்களுக்கு இவ்விதழ் மூலம் புதிய பார்வைகள் கிடைத்தன. பிறநாட்டு இலக்கியங்களை மொழியாக்கம் செய்து ஞானபோதினி இதழ் மூலம் வழங்கினர். அறிஞர் சி.வை. தாமோதரம்பிள்ளை இத்தகைய முயற்சிகளைப் பாராட்டி வரவேற்று ஞானபோதினி இதழில் குறிப்பிட்டு எழுதியதும் கருதத் தக்கது.

ஞானபோதினி இதழின் மேலட்டையிலேயே திருக்குறள் அச்சிடப்பெற்றுள்ளமையும் குறிப்பிடத்தக்கதாகும். 'தாமின்புறுவ துலகின் புறக் கண்டு காமுறுவர் கற்றறிந்தார்' என்னும் அக்குறட்பாவினால் இதழின் நோக்கமும் நன்குபுலனாகும். இவ்விதழுக்கு முன்னர் வெளிவந்த 'ஞானாமிர்தம்' என்னும் இதழ் சைவசமய ஞானத்தை மட்டுமே முதல் நோக்கமாகக் கொண்டு வெளிவந்தது. ஆனால் ஞானபோதி

னியோ பல்வகை ஞானங்களையும் மக்களுக்குத் தரவிழைந்தது எனத் தாம் நிறுவிய இதழின் நோக்கத்தையும் இதழாசிரியர் தெளிவுறுத்தி யுள்ளனர். 'செந்தமிழில் எழுதப்பட்டு வருகின்றபடியால் நீடியாது என் றார் சிலர்' என்று மூன்றாம் ஆண்டில் (1899) குறிப்பிட்டு எழுதுவ தால் அக்காலத்திய மொழிப்பற்றும் சூழலும் நமக்குத் தெளிவாகும். வரலாறு, இலக்கணம், பொருளியல், உடலியல், மருத்துவஇயல், தத்துவம், இசை, நாடகம், கல்வி, சமயம் எனப் பல்வேறு பொருள் குறித்த கட்டுரைகளும் ஞானபோதினி இதழில் வெளியாகியுள்ளன.

மொழியில் எளியநடையும் தெளிவும் பேணப்படவேண்டும் என்னும் கருத்தும் இருந்தமை இதழாசிரியர்கள் கூறும் கூற்றால் தெளிவா கின்றது. இதழின் உள்ளடக்கம் எவ்வாறு அமையப் பெற வேண்டும் என் பதிலும் கருத்திருத்தி அதுகுறித்தும் வாசகர்கட்கு விளக்கம் தந்துள் ளனர். பத்தொன்பதாம் நூற்றாண்டு முடிவுற்று இருபதாம் நூற்றாண்டு தொடங்குவது குறித்து எழுதிய தலையங்கம் (புதுநூற்றாண்டு) ஒருநூற்றாண்டுச் செய்திகளின் மீள்பார்வையாகத் தோற்றமளிக்கின்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் சமூக சீர்திருத்தம் நிறைந்து போலி ஆசாரங்கள் கழிவது குறித்த வரலாற்றுப் பதிவு இதழாசிரியரின் சமூக உணர்வைக் காட்டுகின்றது.

மிருச்சகடிகை, விக்கிரமோர்வசீயம், பர்த்ருஹரி, முத்திராராட்ச சம், காதம்பரி முதலாய வடமொழி இலக்கியங்கள் பற்றிய கட்டுரை களும் ஞானபோதினியில் வெளிவந்துள்ளமை இருமொழிப்புலமை யாளர்களுக்கு பெரும்பயன் தருவதாய் அமைந்துள்ளது. அவ்வாறே ஆங் கிலக் கவிதைகள் பலவும் தமிழாக்கம் செய்து வெளியிடப் பெற்றுள் ளன. 'The Nightingale and Glow Worm' என்னும் கவிதை 'இராப்பாடியும் மின்மினியும்' என்னும் தலைப்பில் தமிழாக்கம் செய்யப்பெற்றுள்ளது. Bacon's Essay - பேகனார் சிற்றுரை என்று மொழிபெயர்த்துள்ளனர்.

அரிய அனைத்துத் துறைகளிலும் வல்லாரைக் கொண்டு படைப் புகளை உருவாக்கித் தமிழ் வாசகர்களிடையே அறிவு வேட்கையை ஞானபோதினி உருவாக்கியது எனலாம்.

## மாதர் மனோரஞ்சனி

சென்ற நூற்றாண்டிலேயே பெண்ணின் உரிமைக்குரல் கொடுக் கத் தொடங்கிய இதழ்கள் பலவாகும். அமிர்தவசனி (1860),

சுகுணபோதினி (1883), மாதர்மித்திரி (1887), பெண்மதிபோதினி (1891), மஹாராணி (1883) போல்வன ஒரு நூற்றாண்டிற்கு முன்னரேயே பெண்கல்வி, பெண் முன்னேற்றம் குறித்துத் தங்கள் இதழ்களில் பல்வேறு சிந்தனைகளை மக்கள் முன்வைத்தன. கல்விச் செல்வத்தை அவர்களுக்கு அளிக்க வேண்டும் என்பதே இவ்விதழ்களின் தலையாய குறிக்கோளாகும். இவ்விதழ்களின் வரிசையில் சி.எஸ். இராமசாமி ஐயரால் வெளியிடப் பெற்ற மாதர் மனோரஞ்சனி (1899) குறிப்பிடத் தகுந்தது. கல்விச்சிந்தனை, விவாகச் சீர்திருத்தம், சமஉரிமைக் கோரிக்கை, இல்லறதர்மம், அடிமைப்பட்டுக் கிடந்த பெண்களைக் கல்விமூலம் எழுச்சிபெறச்செய்தல் முதலாயன மாதர் மனோரஞ்சனியின் நோக்கங்களாகத் திகழ்ந்தன. பெண் கல்வியே இவ்விதழின் முக்கிய நோக்கம் (மார்ச் 1889) என்று இதழ் ஆசிரியர் கூறுவதும் எண்ணத் தக்கது. (A Monthly Illustrated Journal - Devoted to Female Education) என்று ஆங்கிலத்தில் குறிப்பும் தருவார். 'இந்தப் பெண்களில் பெரும் பான்மையோர் நெற்றியிலும் கைகால்களிலும் பலவிதமாய்ப் பச்சை குத்திக் கொள்கின்றனர். அதனால் பணச்செலவு, கஷ்டம் உண்டு. அன்பான தெய்வம் தரும் தேகத்தைக் கெடுப்பது அழகுக்காக என்கின்றனர். இது தவறு. தேசத்தை அலங்கரிக்க வேறுவழிகள் உண்டு. அது செவ்வையாய்ப் படித்து, கல்வியால் தங்களை அலங்கரித்துக் கொள்வது' (1899, செப்டம்பர்) என்று குறிப்பிடுவதால் இதழின் முதன்மையான நோக்கம் பெண்கல்வியே என்பது தெளிவாகும்.

## ஞான சாகரம்

தமிழின் வளமையையும், தமிழ்ச்சமய உண்மையையும், தமிழ்ச் சமுதாய மேன்மையையும் மக்களுக்கு உணர்த்த அருந்தொண்டாற்றியவர் மறைமலை அடிகளார். அவர் வெளியிட்ட ஞானசாகரம் (1902) இதழில் சமய சாத்திர தத்துவசாத்திர இலக்கண இலக்கியப் பொருள் விரிக்கும் மாதாந்தரப் பத்திரிகை எனக் குறிப்பிடப்பட்டுள்ளமை இதழின் நோக்கத்தைத் தெளிவுறுத்தும். சமயக் கோட்பாடுகளை அனைத்து வகையானும் ஆராய்ந்து, கடல்போல் உண்மைகளைக் காட்டுதலானும், உள்ளமெனும் கொள்கலத்தில் கொள்வார்க்கு அறிவமுது ஊட்டுங் கடலாக விளங்குதலானும், ஆன்ம அறிவினால் எல்லையற்ற பெருங் கடலாக விளங்குதலானும் இவ்விதழ் 'அறிவுக்கடல்' என்னும் பெயர்த்த தாயிற்று எனத் தம்முணர்வு சார்ந்த நிலையில் இதழ்பெற்ற பெயர்ப்

பொருத்தத்தைக் குறிப்பார். பெரும்பாலும் அடிகளாரின் எண்ணங்களையும் எழுத்துக்களையும் பெற்று விளங்கியது. ஞான சாகரத்தில் மாகறல் கார்த்திகேய முதலியார், மு. இராகவையங்கார், சோழவந்தான் சண் முகம்பிள்ளை முதலாய அறிஞர் பெருமக்களும் தம் பங்களிப்பினைத் தந்துள்ளனர்.

## விவேகபாநு

இந்திய வரலாற்றின் புகழ்மிக்க ஒருகாலகட்டத்தின் அடையாளச் சின்னமாக விளங்கும் இதழ் விவேகபாநு (1902). பாரதியின் கவி தையை முதன்முதலில் அச்சில் வெளிப்படுத்தி அறிமுகப்படுத்திய பெருமைக்குரிய இதழ் விவேகபாநு. மூன்று கட்டமாக விவேகபாநு வின் வளர்ச்சிநிலையை ஆராயமுடியும் என்பர். கணபதியானந்தசுவாமி கள் (1900), கந்தசாமிக்கவிராயர் (1902), எஸ். சாமிநாதையர் (1909) என இதழ் ஆசிரியர்கள் அமைந்து விவேகபாநுவை வளப் படுத்தினர். 1900ஆம் ஆண்டு குற்றாலத்தில் தொடங்கிய தனது பய ணத்தைத் தூத்துக்குடியிலும், மதுரையிலும் விவேகபாநு தொடர்ந்தது. இறுதியில் 1924ஆம் ஆண்டில் டர்பனில் நிறைவு செய்தது. 'முற்கால, தற்கால சாஸ்திர ஆராய்ச்சி சம்பந்தமான அரிய விஷயங்களையும், இலக்கிய இலக்கண சம்பந்தமான பாஷாவிஷயங்களையும், முடிபுனை வேந்தர், குறுநிலமன்னர் செந்தமிழ்ப்புலவர் முதலிய தக்கார் சரித்திரங் களையும், வியக்கத்தக்க நவீனக்கதைகளையும், சிற்பம் சித்திரம் முதலியவற்றால் உணரப்படும் விஷயங்களையும் இதுகாறும் அச்சு விமானம் ஏறப்பெறாத பழைய புதிய நூல்களில் சிலவற்றையும் அவ்வப் போது தேச நன்மைக் கடுத்த நற்காரியங்களையும், மற்றும் விவேக விருத்திக்கான பற்பல விஷயங்களையும் செவிக்கு இன்பம் பயக்கும் செந்தமிழ்நடையில் அளித்தலே இதழின் நோக்கம் எனப் புலப்படுத் துவர். பழையன போற்றிப் புதியனவற்றை வரவேற்கும் போக்கு இதனால் தெளிவுறுகின்றது.

உடுமலைப்பேட்டையில் தமிழாசிரியராக விளங்கிய தமிழறிஞர் கந்தசாமிக் கவிராயர் இதழின் ஆசிரியராக விளங்கி விடுதலை இயக்க வுணர்வுகளுக்கு வித்திட்ட பெருமையையும் பெற்றார். வ.உ.சி., பாரதி, சுப்பிரமணிய சிவா ஆகியோரின் நெருங்கிய நண்பரான இவர் வ.உ.சி. கைது செய்யப்பட்டதை எதிர்த்துக் குரல் எழுப்பியவர். வித்தி யாபாநு என்னும் இதழையும்(1909 - 1916) நடத்தியவர். வ.உ.சி.

யின் அரியபடைப்புகள் பலவும் விவேகபாநுவில் வெளிவந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். தமிழில் 'வந்தே மாதரம்' பற்றிய முதல் கட்டுரை இவ்விதழிலேயே வந்திருக்க வேண்டும் எனக் கட்டுரையாளர் குறிப்பிடுவது பெரிதும் எண்ணத்தக்கது. கவிராயர் பாடிய 'வந்தேமாதரச் செய்யுள்' இவ்விதழில் வெளிவந்து தனிமுத்திரையைப் பதித்தது. பாரதி பாராட்டிய இப்பாடல் வரலாற்றில் குறிப்பிடத்தகுந்தது ஆகும். விவேகபாநு இதழ் அரசியலறிஞர்களையும், தமிழறிஞர்களையும், கலைஞர்களையும் உருவாக்கியது என்பதில் மிகையில்லை.

## பஞ்சாமிர்தம்

உண்மை, அன்பு, அறிவு, ஒற்றுமை, உழைப்பு என்னும் ஐந்தையும் வலியுறுத்தும் நோக்கமாகக் கொண்ட பஞ்சாமிர்தம் இதழ் (1924) ஆசிரியர் அ. மாதவையா அவர்களால் தொடங்கப்பெற்றது. 'சித்திர சகித மாதப்பத்திரிகை' என்னும் குறிப்போடு வெளியானது. மானுடம் போற்றும் இதழாக மலர்ந்தது. அரசியல், இலக்கியம், சமயம், வரலாறு, தத்துவம், சட்டம், கல்வி, கூட்டுறவு, கைத்தொழில் எனப் பல்வேறு துறைச் செய்திகளைத் தாங்கி வெளிவந்த இதழ் பஞ்சாமிர்தம். மொழி பெயர்ப்புத்துறையில் தனி ஈடுபாடுகாட்டி 'இருமொழியாளன்' என்னும் பெயரில் ஆசிரியர் பல அரிய செய்திகளைத் தந்துள்ளமை குறிப்பிடத் தக்கது.

## ஊழியன்

தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கம் அவர்களால் தொடங்கப் பெற்ற ஊழியன் (1925) இதழ் தனவைசிய ஊழியனின் (1920) தொடர்ச்சியாக மலர்ந்து தன்னுடைய நோக்கத்தை விரிவுபடுத்திக் கொண்டது. இந்திய மக்களுக்காக, அரசியல் சமூக விடுதலைக்காகக் குரல் கொடுத்தது. பாரதமாதாவின் இலக்கினையுடன் தொடங்கும் முகப்பிதழ் அதன் நோக்கத்தைக் காட்டும். காந்தியத்தைப் போற்றும் இதழாக விளங்கியது. 'மகாத்மாவின் புதிய வாழ்க்கை' எனும் பகுதியில் அண்ணலின் எளிய வாழ்க்கையை மக்களுக்கு எடுத்துக்காட்டியது. சமூகசீர்திருத்த நோக்கத்திலும் 'ஊழியன்' இதழ் இளம்பெண் மறுமணத்தை ஆதரித்து எழுதியமை குறிப்பிடத்தக்கது. பாரதி, பாரதி தாசன் பாடல்களை ஊழியன் வெளியிட்டுப் பெருமைபெற்றது. விளம்பரக் கொடையாளர்களைப் பெற்று வளமாகத் திகழ்ந்த ஊழியன் இதழ்

காந்தியம், அரசியல், இலக்கியம், அறிவியல், வாணிகம், பிறதுறை அறிவு எனப் பல்வேறு துறை களிலும் குறிப்பிடத்தக்க அளவில் தொண் டாற்றி இதழியலுக்கு வளம் சேர்த்தது.

## ஜெயபாரதி

சுதேச வெறியோடு வந்த தேசிய நாளேடான ஜெயபாரதி (1933) திரு எஸ். வெங்கடராமன் அவர்களால் தொடங்கப் பெற்றது. காந்திய, காங்கிரஸ் இயக்கத்தை வளர்க்கும் நோக்கத்தோடு ஜெயபாரதி இதழ் செயல்பட்டது. 'காலணா' விலையில் விற்கப்பட்ட இவ்விதழ் தேசிய இயக்கத்தில் பெருந்தொண்டாற்றியது.

## ஜோதி

அறிஞர் சாமிநாதசர்மா அவர்கள் தமிழுக்கு அளப்பரிய தொண் டாற்றியவர். பல்வேறு புதிய துறைகளின் அரிய செய்திகளைத்தந்த வர். தேசபக்தன், நவசக்தி, சுயராஜ்யா, குமரிமலர் எனப் பல்வேறு இதழ் களில் பணிபுரிந்தவர். ஜோதி இதழ் சர்மா அவர்களால் 1937ஆம் ஆண்டு தொடங்கப்பெற்றது. 'ஜோதி இறந்த காலத்தோடு நிகழ்காலத்தைப் பிணைக்குஞ் சங்கிலி. நிகழ்காலத்திலிருந்து வருங்காலத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும் ஏணி; உலக வீரர்களின் யுத்தமேடை; காவியரசிகர் களின் உத்தியானவனம்; உலகத்தாரோடு நம்மை ஒப்பிட்டுக் காட்டும் தராசு; முன்னேற்ற வழிகளையெல்லாம் சுட்டிக்காட்டும் கலங்கரை விளக் கம் என்று ஜோதி இதழின் நோக்கைப் புலப்படுத்துவர் ஆசிரியர். ஐம்பதிற்கும் மேற்பட்ட புனை பெயர்கள் பல்வேறு தலைப்புகளில் ஜோதி இதழில் எழுதிய ஆசிரியரின் கட்டுரைகள் அவர்தம் பல்துறைப் புலமையைக் காட்டுவனவாய் அமைந்துள்ளன.

## பாரததேவி

தமிழ் இதழாசிரியர்களுள் குறிப்பிடத்தக்கவராய் விளங்கும் வ. ராமசாமி அய்யங்கார் (வ.ரா.) அவர்களை ஆசிரியராகக் கொண்டு விளங்கிய பாரததேவி இதழ் (1939) காந்தியக் கருத்துக்களைப் பரப்பும் நோக்கத்தைக் கொண்டது. 'பாரததேவியில் காந்திஜியின் தத்துவமும் செயல்முறையும் விளக்கிச் சொல்லப்படும்' என்று முதல் இதழிலேயே நோக்கத்தைத் தெளிவுறுத்தியுள்ளார். இதழ் அனைத்துத் துறைகளைப் பற்றிப் பேசினாலும் 'சுயராஜ்யமே அதன் மூச்சுக்காற்று'

எனக்குறித்துள்ளமை கருதத்தக்கது. காங்கிரஸ் என்ற வெகுசனங்களின் கட்சியை அம்மக்களிடம் தொடர்பு படுத்தும் ஊடகமாகத் தமது இதழ்ப் பணியை அமைத்துக் கொண்டார் என்று கூறுவது பொருத்தமேயாகும். புனைகதை உருவாக்கத்தில் பல எழுத்தாளர்களைப் பாரததேவி அறி முகப்படுத்தியது. புதிய உரையாடல் வடிவத்தைப்பாரததேவி தொடர்ந்து வெளியிட்டு மொழி நடையில் எளிமையையும், புதுமையையும் உருவாக் கியது. பல்வேறு சோதனை ஆக்கங்களைப் படைப்பில் உருவாக்கு வதற்குப் பாரததேவி களமாக அமைந்தது என்பது பொருத்தமே. கட்டுரையும் கதையும் கலந்த கட்டுரைக்கதை வடிவமும் பாரததேவி மூலம் உருவாயிற்று. இவ்வகையில் பாரததேவி இதழியல் துறையில் ஒரு புதிய பரிமாணத்தைப் பெற்றது எனலாம்.

## சக்தி

விடுதலை உணர்ச்சியை மக்களிடையே எழுப்புவதையே தனது நோக்கமாகக் கொண்டு 'சக்தி' பிறந்தது (1939). பதிப்புத்துறை யில் புகழ் பெற்று விளங்கியவை. கோவிந்தன் இதன் ஆசிரியர். அரசி யல் சித்தாந்தங்களை எளிய தமிழில் அறிமுகப்படுத்தியது சக்தி இதழ். அண்ணல் காந்தியடிகளின் கருத்துகளைப் பரப்பியது. 'அவர் (மகாத்மா) நில் என்றால் நிற்போம்; செல் என்றால் செல்வோம். அதுவே நமது கடமையாம்' என்று சக்தி முழங்கியது. காந்தியின் எழுத்தோ பேச்சோ அல்லது அவர் பற்றிய செய்தியோ வராத சக்தி இதழே இல்லை என்று கூறுவதால் சக்தியின் காந்தியப் பற்று நன்கு தெளிவாகும். மொழிக் கொள்கையில் ரோமன் எழுத்தை வலியுறுத்திப் புதிய முறை யைக் கொண்டுவர எண்ணியது சக்தி இதழ். நாட்டின் புதிய முன்னேற்றம் கருதிச் சிறந்த அறிஞர்களின் கூட்டுறவில் சக்தி பல துறைகளிலும் தன்னால் இயன்ற பணியைச் செய்யும் என்று சக்தி தன் நோக்கத்தை வெளியிட்டது. இதழியல் துறையில் ஒரு புதிய சக்தியாக உரு வெடுத்தது சக்தி இதழ்.

## தொகுப்புரை

இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் பலவும் மக்களுக்கு அறிவையும், சமூக, மொழி விழிப்புணர்வையும் உரு வாக்க முனைந்ததை இவ்விதழியல் ஆய்வுகள் நன்கு புலப்படுத்து கின்றன. அரசியல் சார்ந்த இயக்கங்களின் வழிப் பன்முக விடுதலை

யைப் பெற இவ்விதழ்கள் துணைநின்றன. மொழிநடையில் எளிமை யையும் இனிமையையும் உருவாக்க இவ்விதழ்கள் முயற்சிசெய்தன. மேலைநாட்டு இலக்கியத் தாக்கத்திற்கேற்பப் புதிய புதிய தளங் களை உருவாக்கிப் புதிய சோதனைகளை மேற்கொண்டன. நாட்டு மக்களுக்குத்தம் பழம்பெருமையை அறிவுறுத்திப் புதிய நம்பிக்கை யையும், அணுகுமுறையையும் உருவாக்கித்தந்தன. பல்வேறு மொழி களின் அறிவுக் களஞ்சியங்களையும் தம் மக்களுக்குத் தர விழைந் தன. பல்வேறு இடையூறுகளுக்கிடையேயும் இதழாசிரியர்கள் இவ் வரிய பணியை மேற்கொண்டனர் என்பது இவ்வாய்வுக் கட்டுரை களால் நன்கு புலனாகும். இத்தகைய இதழியல் ஆய்வுத் தொகுதி கள் மேன்மேலும் இதழ்களைப் பற்றி ஆராய்வதற்கு ஊன்று கோலாக அமையும் எனலாம்.

## குறிப்புகள்

1. அ.மா. சாமி, 19ஆம் நூற்றாண்டுத் தமிழ் இதழ்கள், ப.205.

2. 'சைவ உதயபானு' 1884ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் சரவண முத்துப்பிள்ளை அவர்களால் தொடங்கப்பெற்றது; ஆறு ஆண்டுக்காலம் அவ்விதழ் வெளிவந்தது.

## பொருளடக்கம்

# ஞானபோதினி

## ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்—திருக்குறள்.

சம்புடம் VI } 1903ஆம் ஜனவரிமீ 20உ. { இலக்கம் 6.


## DELHI DURBAR.
## டெல்லி தர்பார்.

---

நமது இந்தியாவிலுள்ள மாநகரங்களுள் டெல்லி சரித்திர சம்பந்தமாக மிகப் பேர்படைத்ததென்பது யாவருமுணர்ந்த விஷயம். இம்மாநகரம், மொகலாய வரசாட்சிக் காலத்தில் தலைநகராயிருந்தது. இந்நகரமே தர்பார் நடத்துவதற்குத் தக்கதெனக் கண்டு ஏற்படுத்தினது மிகவும் உசிதமே. முன்னரே இயற்கையழகு மிகுந்துள்ள இந்த டெல்லிமாநகரம் செயற்கையழகும் உடன்பெற்றால் அதன் சிறப்பை யெடுத்துச் சொல்ல யாவரான் முடியும்?

தர்பார் நிகழ்ச்சிக்கென வகுத்த நாள் ஜனவரிமாதம் முதல் தேதியாயினும், நமது தேசாதிபதியும் இராஜப்பிரதிநிதியுமாகிய கர்ஸான் பிரபுவவர்கள் இரண்டு தினங்கள் முன்னரே டெல்லிக்கு வந்து நகரைப் பரிசுத்தப் படுத்தினார்கள். அவர் வரக்கண்ட வளவில், யாவும் ஒழுங்கும் அமைதியுமடைந்து சித்தமாயிருந்தன.

### உலா.

இராஜப் பிரதிநிதியவர்களின் ஊர்கோலம் டெல்லியில் 'வெள்ளி வீதி' என்னும் பெயருடையதோர் பெருவீதியின் வழியாய்ச் சென்று

# ஞானபோதினி

## பெ. சு. மணி

தமிழ் இதழியல் துறையின் மூலவரும் தமிழ்நாட்டின் புதிய விழிப்பிற்கு ஆதிகர்த்தாக்களுள் ஒருவருமான ஜி. சுப்பிரமணிய ஐயர் (1855 -1916), 'ஞானபோதினி' இதழைப் பற்றிப் பின்வருமாறு 1902இல் பாராட்டியுள்ளார்:

'சுதேசமொழி இதழியல்துறையில் கடந்த இரு ஆண்டுகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. செய்திப் பத்திரிகைகள் பல தோன்றின. அவற்றுள் பல ஏறக்குறைய மதிக்கத்தக்க அளவில் விற்பனைப் பரப்பைக் கொண்டுள்ளன. இவற்றுள் குறைந்தது இரு இதழ்கள் பட்டதாரிகளால் நடத்தப்படுகின்றன. 'ஞானபோதினி' எனும் மாத இதழ் சமய, சமூக, இலக்கியத் தலைப்புகளில் சிந்தனை நிறைந்த கட்டுரைகளைக் கொண்டுள்ளது. இந்த இதழ் முழுவதும் நமது பல்கலைக்கழகத்தின் பட்டதாரிகளால் நடத்தப்படுகின்றது.'[1]

### தமிழ்ப் பண்டிதர்கள் – ஆங்கிலப் பட்டதாரிகள்

மேற்காணும் பாராட்டுரையில் 'பட்டதாரிகளால் நடத்தப்படுகின்றன' எனும் கருத்து குறிப்பாகக் கவனிக்கத்தக்கது. ஞான போதினியின் முதல் ஆசிரியரான எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளையும் அடுத்து ஆசிரியராக இணைந்த வி.கோ. சூர்ய நாராயண சாஸ்திரியும் பட்டதாரிகளாவர்.

ஜி. சுப்பிரமணிய ஐயர் தமது ஆங்கில முன்னுரையில் தமிழ்ப் பண்டிதர்கள் - ஆங்கிலப் பட்டதாரிகள் எனும் இரு வகுப்பாரைப் பற்றியும் குறிப்பிட்டுச் சில கருத்துகளை வெளியிட்டுள்ளார்.

'பண்டிதர்கள் ஐயமற பெருமதிப்பிற்குரியவர்கள். ஆனால், பரவலான கல்விக்குரிய, மக்கள் முன்னேற்றத்திற்குரிய, சுதேச இலக்கியம் வளர்ச்சிபெறப் பண்டிதர்களால் உதவ முடியாது. நவீன வாழ்க்கைப் பயன்பாட்டுக்குரிய கல்வியை அவர்கள் பெறவில்லை. பழங்காலக் கல்வி முறையின் பிரதிநிதிகள் அவர்கள். நடைமுறைக்குச் சற்றும் பயனற்ற கல்விமுறை அவர்கள் கல்வி முறை.' இவ்வாறு ஜி. சுப்பிரமணிய ஐயர் ஒரு கருத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழைக் காலத்தேவைக்கேற்ப நவீனமயப்படுத்தவேண்டும் எனும் ஆராவேட்கையால் கூறப் பெற்ற கருத்தே முற்கூறிய கருத்து. தமிழ்ப் பண்டிதர்களிடம் ஜி. சுப்பிரமணிய ஐயர் காட்டிய பரிவும் பற்றும் 'நம் பண்டிதர்கள்' எனும் தலைப்பில் 9-8-1898இல் சுதேசமித்திரனில் வெளிவந்த தலையங்கத்தில் வெளிப்பட்டுள்ளன.

தமிழ் வளர்ச்சியில் ஆர்வம் காட்டாமல் இருந்த ஆங்கிலம் கற்றவர்களை 1906 செப்டம்பர் சுதேசமித்திரனில் பின்வருமாறு சாடியுள்ளார் ஜி. சுப்பிரமணிய ஐயர்:

'தமிழ் மட்டுமே தெரிந்த ஜனங்களில் சிறுபாலோர் தமிழ் விஷயத்தில் ஒருவித மூடபக்தியாவது வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஆங்கிலம் கற்றுணர்ந்தவர்கள் இவ்விஷயத்தில் தமது கடமையை முற்றும் மறந்துவிடுகிறார்கள். இவர்கள் தமிழ் பாஷை விஷயத்தில் கொண்டிருக்கும் எண்ணத்தையும், இவ்விஷயத்தில் இவர்கள் வகிக்கும் அசிரத்தையையும் டாக்டர் போப்பைப் போன்ற ஆங்கிலேயர்கள் அறியும் பக்ஷத்தில் இவர்கள் இருக்கும் திசையை நோக்கிக் காறியுமிழும் வண்ணமாக நம்மவர்கள் நடந்து கொள்கிறார்கள்.'[2]

## இருபோக்குகள்

1902இல் எழுதிய முன்னுரையில் காலத்தேவைக்கேற்ற பயனுள்ள புதிய இலக்கியத்தின் மூலகர்த்தாக்களாக விளங்கும் பட்டதாரிகளையும் பல்கலைக்கழகம் உருவாக்கி வருகின்றது எனும் கருத்தையும் வெளியிட்டு 'நமது இளைய தலைமுறையினரான பட்டதாரிகள் பழைய மரபில் இருந்து விலகிப் பொதுமக்கள் தேவைகளுக்காகப் புதிய சிந்தனையைத் திட்டமிட்டுக்கொண்டு வருகின்றார்கள்' என்பதையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

பிரிட்டிஷ் காலனியாதிக்கத்தில் தோன்றிய ஆங்கிலக் கல்வி முறை, மரபு-நவீனத்துவமிடையே பொதுவிவரத்தைத் தோற்றுவித்தது. ஆங்கிலக் கல்வியால் முளைத்தெழுந்த புதிய மத்தியதரவருக்கத்தில் தோன்றிய பட்டதாரிகளிடையே இரு போக்குகள் கிளைத்தன. ஆங்கிலத்தில் எல்லாம் இருக்கின்றன; தமிழில் என்ன இருக்கின்றது என்பதாக ஒரு போக்கும், ஆங்கிலத்தின் துணையோடு தமிழ் மொழியையும் வளர்க்க வேண்டும் என்பதாக மற்றொரு போக்கும் தோன்றின.

ஆங்கிலம் தமிழ் இரண்டிலும் புலமை பெற்றோர்களில் சிலர் 'உபயோகமான அறிவைப் பரவச் செய்யும் சபை' (1883), 'தென்னாட்டுத் தமிழ்ச் சங்கம்' (1890), 'திராவிட பாஷா சங்கம்' (1899) பெயர்களில் அமைப்புகளை நிறுவினார்கள்.

இந்தப் பின்னணியில் ஞானபோதினி 1897இல் தோன்றியதைக் குறிப்பிட வேண்டும். ஆங்கிலம் கற்றோரில் தமிழ் வளர்ச்சியில் பங்கேற்றவர்களும் அடங்குவர் என்பதை ஞானபோதினி பின்வருமாறு உணர்த்தியுள்ளது:

'நமது பத்திரிகைக்கு விஷயங்களையெழுதி விடுக்குநருள் இரண்டொருவரைத் தவிர்த்து மற்றைய யாவரும் ஆங்கிலம் முதலிய பிறபாஷைகளிற் பாண்டித்யம் பெற்றவர்களாகவேனும், பெறுகின்றவர்களாகவேனுமிருக்கின்றரென்பது யாமெடுத்துச் சொல்லாமலே நுமக்கு விளங்கும். ஆகவே யாங்கிலம் பயிலுநரனைவருந் தத்தம் சுயபாஷைகளைக் கவனிக்கின்றிலர் என்று கூறும் ஆராய்ச்சிக் குறைவுடைய சில்லோரர் போன்று வாய் கூசாது யாம் ஒன்றுங் கூறுவே மல்லேமென்பதும் நீவீரறிமின்.'[3]

திராவிட பாஷா சங்கம் தோன்றியதை வரவேற்று 1900இல் ஞானபோதினி பின்வருமாறு எழுதியதும் அந்த மாத இதழின் பணியை ஒருவாறு அறியத்தருகின்றது.

'தமிழ்ப் பண்டிதர்கள் கர்நாடக நடையிலேயிராமல் தற்காலத்திற்குத் தகுந்தவாறு தாங்கள் விருத்தியடைந்து மேனாட்டார்களின் திறத்திலும் அவர்கள் கற்பிக்கும் முறையிலும் கொஞ்சம் தெரிந்திருந்தால் தமிழகத்திற்கும் மாணவர்களுக்கும் இவர்கள் இப்போது கற்பிப்பதைப் பார்க்கினும் நன்றாய்க் கற்பிக்கக் கூடுமென்பது இச்சபையோரும் வகிக்கும் அபிப்பிராயம்.'[4]

ஞானபோதினியின் உருவம், உள்ளடக்கம் பற்றி அறிவதற்கு முன் அதன் ஆசிரியர்கள், அவர்தம் வாழ்க்கைக் குறிப்புகள் சில வற்றை அறிவோம்.

## எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை (1866–1947)

திருநெல்வேலி மாவட்டத்தில் முந்நீர்ப்பள்ளம் என்னும் ஊரில் 24-5-1866இல் பிறந்தவர். முன்னீர்ப்பள்ளம் சிவசுப்பிரமணிய பிள்ளை பூர்ணலிங்கம் பிள்ளை ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற் றியவர். பி.ஏ., எல்.டி. பட்டப் படிப்புப் படித்தவர். கோயமுத்தூர் புனித மைக்கேல் கல்லூரி, திருச்சிராப்பள்ளி பிஷப் ஹீபர் கல்லூரி, சென்னை கிறிஸ்துவக் கல்லூரி முதலியவற்றில் ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றியவர்.

ஆங்கிலத்தில் 27 நூல்களையும் தமிழில் 16 நூல்களையும் எழுதிப் பதிப்பித்துள்ளார் பேரறிஞர் மு.சி. பூர்ணலிங்கம் பிள்ளை.[5]

எட்டயபுரத்தில் இருந்தபொழுது 1892இல் அவருடைய **A Prima of Tamil Literature** எனும் நூலின் பெரும் பகுதி எழுதப்பட்டு விட் டது.[6] இந்நூல் 1904இல் அவர் கோயமுத்தூரில் பணியாற்றிய பொழுது வெளிவந்தது. 'தமிழிலக்கிய வரலாற்றை விரிவாக ஆங்கி லத்தில் முதன் முதல் எழுதிய பெருமைக்கு உரியவர் மு.சி. பூர்ண லிங்கம் பிள்ளையாவார்' எனும் பாராட்டையும் பெற்றார்.[7] கி.பி. முத லாம் நூற்றாண்டு வரையிலான சங்க காலம், பௌத்த சமணக் காலம், சமய மறுமலர்ச்சிக் காலம், இலக்கிய மறுமலர்ச்சிக் காலம், மடங்கள் அல்லது சமய நிறுவனங்களின் காலம், கி.பி. 17 முதல் கி.பி. 19 வரையிலான ஐரோப்பிய பண்பாட்டுக் க்ாலம் எனும் ஆறு தலைப்பு களில் 22 மாதங்களில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் 1985இல் இந்நூலின் மறு பதிப்பை வெளியிட்டது.

இவருடைய **Tamil India** எனும் நூலும் பல பாராட்டுதல்களைப் பெற்றுள்ளது. 1927 நவம்பர் 2இல் இந்நூல் பின்வருமாறு பாராட் டப்பட்டுள்ளது: 'மூலச்சான்றுகளைக் கொண்டுள்ள குறிப்பிடத்தக்க ஆய்வுநூல் இந்நூல். பழங்காலத் தமிழர்கள், அவர்களுடைய

பண்பாடு, மொழி, இலக்கியம், தத்துவம், சமயம், சமூக வாழ்க்கை, பொருளாதார முயற்சிகள், அரசியல், போர்முறை, கலை, விஞ்ஞான அறிவு, கல்வி முதலானவற்றை விளக்கும் முதல் நூலான இது ஒவ்வொருவரிடமும் இருக்க வேண்டியதாகும்.'[8]

Ravana The Great King of Lanka என்னும் இவருடைய மற்றொரு நூல் 1928இல் இவராலேயே வெளியிடப்பட்டது. ஆரிய ஆதிக்கத்தை எதிர்த்தவனாகவும், சிறந்த சிவபக்தனாகவும், ஆட்சி நிருவாகத் திறன் பெற்றவனாகவும் இலங்கை அரசன் இராவணன் விளங்கியதாக இந்நூல் எடுத்துக்காட்டுகின்றது. இந்நூலை மீண்டும் 1996இல் சேக்கிழார் அடிப்பொடி டி.என். இராமச்சந்திரன் பதிப்பித்துள்ளார். இந்நூலின் முதற்பதிப்பு 'ராவணப் பெரியார்' எனும் தலைப்பில் தமிழாக்கம் செய்யப் பெற்று 1936இல் ஈரோடு ஈ.வெ. கிருஷ்ணசாமி அவர்களால் வெளியிடப்பட்டது. முன்னுரையில் உள்ள பின்வரும் வாசகங்கள் கவனத்திற்குரியன:

'... இலங்கை மன்னனான ராவணன் ஒரு திராவிட அரசன். ஆரியப் புலவர்கள் அவனைக் கொடியன் எனச் சித்திரித்துக் காட்டியுள்ளார்கள். அதை மறுத்து ராவணனுடைய உத்தம குணங்களை விளக்கிக் காட்டுவதே இந்நூல்.'

1929இல் ஆங்கிலத்தில் வெளிவந்த இவருடைய Critical Studies in Kural எனும் நூலும் குறிப்பிடத்தக்கது. The Ten Tamil Saints, History of India, History of England, Socrates and Plato and Evolutional Pecheam எனும் நூல்களும் பாராட்டப்பட்டன. மாணவர்களுக்கான ஆங்கிலப் பாட நூல்கள் பலவற்றையும், திட்ட விளக்க நூல்கள் (A Digest of Roman Law உட்பட 5 நூல்கள்) முதலான பலவகைப்பட்ட நூல்களையும் படைத்துள்ளார் மு.சி. பூர்ணலிங்கம் பிள்ளை.

தமிழில் வெளிவந்துள்ள இவருடைய 16 நூல்கள் பின்வருவன: அவ்வைகுறள், செய்யுள் கோவை, விவேக விளக்கம், வாசகத் திரட்டு, தமிழரும் தமிழ்ப் புலவர்களும், நவராத்திரி விரிவுரைகள், இரு சிறுகதைகள், தப்பிலி, காமாட்சி என்ற நவநகை நாடகம், ஐரோப்பியப் போர், கதையும் கற்பனையும், தமிழ்க் கட்டுரைகள் அல்லது சிற்றுரைகள், பன்னிரு பெண்மைகள், சூரபத்மன், வயிர மணி மாலை, நகைச்சுவைக் கதைகள்.[9]

1896இல் வெளிவந்த "வாசகத் திரட்டில் ஷேக்ஸ்பியரின் King Lear கதையைச் 'சாதுமதி சரிதை' என்னும் கதையாகவும் (மொழி பெயர்த் தவர் கல்குளம் குப்புசாமி முதலியார்), கவிஞர் டென்னிசனின் Princess எனும் கதை 'மனோகர வல்லி' கதையாகவும் (மொழி பெயர்த்தவர் பூர்ண லிங்கம் பிள்ளை), ஹெர்பர்ட் ஸ்பென்சரின் Principles of Ethics என்பது 'தற்காப்பு நியமம்' என்றும் (வி.கோ. சூர்ய நாராயண சாஸ்திரி எழுதியது சில மேலைநாட்டுப் படைப்புகள் இடம்பெற்றுள்ளன. இவை யாவும் பிறநாட்டுக் கலைச் செல்வங்களைத் தமிழில் கொண்டுவந்து சேர்க்கவேண்டிய அன்றைய கடப் பாட்டைக் குறித்தனவாகும். 1897 ஆகஸ்டில் இவர் தொடங்கிய ஞானபோதினியில் இத்தகைய மொழி பெயர்ப்புகள் வெளிவரத் தொடங்கின என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

சென்னை கிறித்துவக் கல்லூரியில் பணியாற்றியபொழுது, வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியின் அருமைத் தோழமை இவ ருக்கு வாய்த்தது. இருவரும் இணைந்து ஆங்கிலப் பட்டதாரிகள் தமிழிற்கு எவ்வாறு தொண்டாற்றி வளர்ச்சி காண முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்கினார்கள்.

ஆங்கில ஞானம் கொண்டு தமிழ் ஞானத்தை வளர்க்க ஞான போதினியைத் தொடங்கித் தமிழ் இதழியல் துறைக்கும் பாடுபட்ட எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை 16-6-1947இல் சிவபதம் அடைந்தார்.

## வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் (1870–1903)

முப்பத்து மூன்று வயதளவே வாழ்ந்த 'வி.கோ.சூ' தமிழ் மரபை, நவீனத்துவத்தில் இணைத்தவர். தனித்தமிழ் இயக்கத்தின் வரலாற் றில் போற்றப்பட்டவர். பாவேந்தர் பாரதிதாசன்,

இந்த நூற்றாண்டில் இருவர் பார்ப்பனர்
செந்தமிழ்ப் பற்றுடை யார்கள்
முந்து பாவலன் பாரதி மற்றவர்
முத்தமிழ் வல்லவன் பரிதி மாற்கலைஞர்

என்று அவருடைய பாணியில் போற்றியுள்ளார்.

வி.கோ.சூ.வை 'முத்தமிழ் வல்லவன்' என்று பாவேந்தர் சுட்டிக் காட்டியதற்கேற்ப முத்தமிழிலும் புதுமை நூல்கள் படைத்த சாதனை யாளர் வி.கோ.சூ.

தமது சமகாலத்தின் பேரறிஞர்களால் பெரிதும் மதிக்கப்பட்டவர். டாக்டர் ஜி.யூ. போப், பூர்ணலிங்கம் பிள்ளை, சி.வை. தாமோதரம் பிள்ளை, வ.சு. செங்கல்வராயப் பிள்ளை முதற்கொண்டு பலராலும் பாராட்டப்பெற்றவர். பூர்ணலிங்கம் பிள்ளை ஆங்கிலத்தில் எழுதிய தமது தமிழ் இலக்கிய வரலாற்று நூலை வி.கோ.சூ விற்கு உரிமை யாக்கிப் பெருமைசேர்த்தார். சி.வை. தாமோதரம் பிள்ளை, வி.கோ. சூ.வின் தமிழ்ப் புலமையைச் சோதித்துத் 'திராவிட சாஸ்திரி' எனப் பட்டமளித்தார்.[10]

தமிழ்ப் பாவின வரலாற்றில் மேலை நாட்டுப் பாவினமான 'ஸானெட்' (Sonnet) என்பதைப் புதிய வரவாகப் படைத்த புதுமை யாளர் வி.கோ. சூ.

'தனித்தனி பதினாலடி யளவினவாய்ப் பலவேறு வகைப் பொருள் பொதிந்த' பாடல்கள் புதிய யாப்பு முறையில், 'தனிப்பாசுரத் தொகை' எனும் தலைப்பில் முதன்முறையாக ஞானபோதினியில் 1898 சனவரி யில் வெளிவரத் தொடங்கின. இந்த இதழில், 'கடவுள், அறிவு, அன்பு, துயில், மலர்' எனும் தலைப்புகளில் அமைந்த பாடல்கள் வெளி வந்தன. 1899 செப்டம்பர் 30 இதழில் நாற்பதாவது பாடல் வெளி வந்து தனிப்பாசுரத் தொகை தொடர் முற்றுப்பெற்றது. உடனடியாகத் தனிநூலாகவும் நான்கணா விலையில் வெளியிடப்பட்டது. முதல் இதழில் பாடல்களை வெளியிட்டு, ஞானபோதினி ஆசிரியர் பின் வரும் அடிக்குறிப்பையும் எழுதியுள்ளார்:

'இப்பாசுரத் தொகையின் ஒவ்வொரு பாசுரத்திலும் ஆங்கிலேய, ஆரிய, திராவிட பாஷைகளிலுள்ள அருமையான பன்னூல்களிலும் ஆங்காங்குச் சிதறி மறைந்து கிடக்கும் நுண்ணரிய பொருள்களைத் திண்ணிதாய்ச் சேர்த்துத் தீம்பாவணிகளிற் பாங்காயமைத்துப் பகர்ந்த பரிதிமாற் கலைஞன் எடுத்த முயற்சியிற் பின்னடையாது மாதந் தோறும் இத்தகைய பாசுரங்கள் இப்பத்திரிகையிற் தோன்றும்படி வரைந்தனுப்பின் அவற்கு யாமும் எமது நண்பர்களுமாகிய இப் பத்திரிகா அபிமானிகள் அனைவரும் பாராட்டும் நன்றிக்குக் கணக் கிலாதென்பதை ஒருவாறு ஈண்டுத் தெரிவிக்கின்றோம்'.[11]

1895 சனவரியில் வெளிவந்த ஞானபோதினி இதழில்தான் மேற்காணும் பாடல்களை யாத்தவர் எனும் குறிப்பு விளங்க முதன்

முறையாகத் தமது பெயரைப் 'பரிதிமாற் கலைஞன்' என்று குறிப் பிட்டார்.

ஞானபோதினியில் தமிழ்ப்பாசுரத் தொகைப் பாடல்கள் தொடர்ந்து வெளிவந்தன. ஆங்கிலத்திலும் தமிழிலும் புலமை பெற்றோர் பலர் கருத்தைக் கவர்ந்தது தனிப்பாசுரத் தொகை. ஞானபோதினியில் வெளிவந்து கொண்டிருக்கும் பொழுதே அதைப் படித்து வந்த பேறறிஞர் சி.வை. தாமோதரம் பிள்ளை ஞானபோதினி ஆசிரியருக்குப் பாராட் டுக் கடிதம் எழுதினார். இந்தக் கடிதம் 1900 சூன் 20இல் பின்வரு மாறு வெளிவந்தது:

> I read with great pleasure the sonnets in Tamil which appeared in your valuable magazine. The thoughts of oriental poets of old are so Judiciously grafted in those of the western writers that the sonnets may well be composed to splendid ornaments of eastern gems skilfully set by an expert artist in full refined occidental Gold polished admirably by Euphomic language plain and chaste.
>
> Works of this direction is a great desideratum now. I wish the graduates of our university would follow the track of Parithimar Kalaijnar and bring out works containing European and Indian ideas in a fit manner so as to attract the minds of the Indian public which are not prefered to read more translations of English books. An Indian garb seems to be very necessary.

ஞானபோதினியின் சந்தாதாரராகவும் சேர்ந்து, தனிப்பாசுரத் தொகைப் பாடல்களின் பன்னிரண்டு பிரதிகளைத் தமக்கு அனுப்பி வைக்குமாறும் எழுதியவரிடம் தெரிவிக்குமாறும் தாமோதரம் பிள்ளை இறுதியில் குறிப்பிட்டுள்ளார்.

பரிதிமாற் கலைஞர், காலத்தேவைக்கேற்ற நூல் இல்லாத குறையை நிறைவு செய்தாரென்றும், அவருடைய இந்த வழியை நமது பல்கலைக்கழகப் பட்டதாரிகள் பின்பற்ற வேண்டும் என்றும் குறிப்பிட்டு, இனிய மொழி நடையையும், பாடலின் சிறப்பாற்றலை யும் மேலே சுட்டிக் காட்டியுள்ளார் தாமோதரம் பிள்ளை.

டாக்டர் ஜி.யூ. போப் (1820-1908) தனிப் பாசுரத் தொகையைப் படித்து, அவற்றை ஆங்கில மொழியாக்கம் செய்தனுப்பினார். 1899இல் முதற்பதிப்பு வெளிவந்தது. 1901இல் வெளிவந்த மறுபதிப்பில் போப்பின் ஆங்கில மொழியாக்கப் பாடல்களும் 41 தமிழ்ப் பாடல்களுடன் இணைக்கப்பெற்று வெளியிடப்பட்டது.

போப் அவர்கள் 1901ஆம் பதிப்பிற்கு எழுதிய முன்னுரையில், `Whole Collection gave clear indication of a new departure in Tamil poetry' என்று குறிப்பிட்டுள்ளார்.[12]

அக்காலத்தில் 'நவீன நூல்'களை வழங்கியதில் பேராசிரியர் மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையோடு (1855-1897) வி.கோ. சூ.வையும் இணைத்துப் போப் கூறியதாவது :

> 'தமிழ் சரசுவதியின் சிறந்த மறு தோற்றம், புத்துடையில் ஏற்படுவதற்கான அறிகுறிகள் காட்டும் நவீன நூல்கள் இரண்டைத் தவிர வேறொன்றும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. 'மனோன்மணீயம்' ஆசிரியர் சிறந்து விளங்கிய திரு. சுந்தரம் பிள்ளையவர்கள் நமது துரதிர்ஷ்டவசத்தால் அதிவிரைவில் மறைந்து விட்டனர். 'தொடர் தனிப்பாசுரத் தொகை - முதற் பகுதி' என்ற ஆக்கியோன் பெயர் குறிப்பிடப்படாச் சிறுநூல். நாம் மனமார எதிர் கொள்ளத்தக்க புதிய மரபினர் வருகையின் முன்னோடியாகத் தோற்றுவிக்கிறது.'[13]

மேலே போப் சுட்டிக் காட்டிய 'நவீன நூல்கள்', 'புதிய மரபினர் வருகை' எனும் இவையிரண்டையும் ஊக்குவிப்பதில் ஞானபோதினி தனது பங்களிப்பை வழங்கியுள்ளது. ஆங்கிலம் கற்றோர், தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபடவில்லை எனும் 'வசைமொழி'யை நீக்குவதில் வி.கோ.சூ. குறியாய் இருந்தார் என்பதை அவர் தனிப்பாசுரத் தொகைக்கு எழுதிய முகவுரையின் பின்வரும் பகுதி விளக்குகின்றது:

> ஆங்கில நூற்பயிற்சியுடைய தமிழ் மக்கள் தமிழ் மொழியைப் பெரிதும் கவனித்தலின்றிக் கைசோர விடுகின்றனர் எனப் பலருங் கூறும் வசைமொழி எம் செவிப்படலும் மனம் பொறோம். புதுமை வழியால் ஏதேனும் செய்ய வேண்டுமென்று புகுந்தோம்.

1870 சூலை 7இல் மதுரை நகருக்கு அருகே விளாச்சேரி என்னும் கிராமத்தில் படித்த வி.கோ.சூ, இளமையில் கொண்ட கல்வி

நாட்டம் அவரை முன்னேறச் செய்தது. 1890இல் சென்னை சர்வகலா சாலையில் எம்.ஏ. தேர்வில் முதன்மையாகத் தேறிப் பாஸ்கர சேதுபதி மன்னரின் உபகாரச் சம்பளத்தையும் பெற்றார். 1892இல் பி.ஏ. தேர்வில் தமிழ் மொழியிலும், வேதாந்தத் தத்துவ சாத்திரத்திலும் மாநிலத்தி லேயே முதன்மையாகத் தேறிப் பாஸ்கர சேதுபதியின் பொற் பதக்கத் தையும் பெற்றார்.[14]

அக்காலத்தில் கிறித்துவக் கல்லூரியின் தலைவர் டாக்டர் மில்ல ரைச் சூழ்ந்த அறிஞர்கள் வட்டத்தில் ஒருவரானார் வி.கோ.சூ. 1893 இல் சென்னை கிறித்துவக் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற் றத் தொடங்கினார். பின்பு தலைமைத் தமிழாசிரியரானார்.

நவீனப் படைப்பிலக்கிய வரலாற்றிலும் இவருடைய பங்களிப்பு பதிவாகியுள்ளது. நாடகம், புதினம், கவிதை, கட்டுரை, வரலாறு முத லான பல்வேறு துறைகளில் நூல்களைப் படைத் துள்ளார் வி.கோ.சூ. இவருடைய நூற்பட்டியல் வருமாறு :

1. கலாவதி (நாடகம்) (ஏழங்கமுள்ளது. கதையினடியாய்ச் சிறப்பு வாய்ந்த நீதிகள் பல கட்டுரைப்பது)

2. நாடகவியல் (சம்சுகிருதம், ஐரோப்பிய இலக்கிய இலக்கணங் களை உட்கொண்டு நாடகத்திற்கு முதன்முதலாகச் செய்யப் பட்ட நூல்)

3. பாவலர் விருந்து (இனிமையும் புதுமையும் வாய்ந்த பதினொரு சிறிய செய்யுணூல்கள் கொண்டது. ஆங்காங்குச் சில புதிய கருத் துக்கள் அடங்கியது)

4. உமை திருமணம் (சம்சுகிருதத்தில் காளிதாசன் இயற்றிய குமார சம்பவத்தின் முதலேழு சருக்கத்தின் மொழி பெயர்ப்பு)

5. அவ்வைக் காட்சி (இது புது வழியால் யாக்கப்பட்டுள்ளதோர் இனிய செய்யுணூல். மெய்க்கோள் பல விளக்குவது)

6. ரூபவதி அல்லது காணாமற்போன மகள் (இஃது ஒரு புதிய தமிழ் நாடகம்; ஐந்து அங்கமுள்ளது; கதையின் மூலமாய்ச் சிறந்த நீதிகள் பல கற்பிப்பது)

7. சூர்ப்பணகை (இது பிரகசனம் என்னும் ஒரு வகை நாடகம்; ஈரங்கமுள்ளது. நகைச்சுவை பெரிதும் வாய்ந்தது)

8. மானவிஜயம் (இஃது அங்கம் என்னும் ஒரு வகை நாடகம்; ஓரங்கமுள்ளது. அவலச்சுவை யாற்றவும் வாய்ந்தது)

9. முத்திரா ராட்சஸம் (இது வடமொழியினின்றும் தமிழில் மொழி பெயர்த்ததோர் நாடகம்; ஏழங்கமுள்ளது)

10. மதிவாணன் (இது மிகவும் உயரிய நடையினியன்றதோர் புது மையான செந்தமிழ்க் கதை)

11. இன்னுமா (இஃது இனிமையும் புதுமையும் வாய்ந்ததோர் தமிழ்க் கதை; எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டது)

12. இழிசினர் வழக்குரை வரையறை (இஃது ஆந்திர மொழியில் வேதம் வேங்கடராய சாஸ்திரியாரவர்கள் செய்ததினின்றும் மொழி பெயர்த்துச் செய்யப்பட்டது; நாடகங்களில் இழிசினர் வழக்குரை வழங்குமாற்றைத் தெளிவுறக் காட்டுவது)

13. வித்தியாவிருத்தி (இஃது சில வித்தையைத் தெளிவுறக் கூறு வதோர் அரிய ஞான நூல். வடமொழியினின்று மொழி பெயர்க் கப்பட்டது)

14. தமிழ் மொழியின் வரலாறு

15. தமிழ்ப் புலவர் சரித்திரம்

16. தமிழ் வியாசங்கள்

17. மணிய சிவனார் சரித்திரம் (வி.கோ.சூ.வின் தந்தையின் குரு வான மாங்குடி சுப்பிரமணிய சிவாவின் வாழ்க்கை வரலாறு, வடமொழி மேற்கோள்களுடன் சைவமதத்தின் உண்மை பல தெரிவிப்பது)

வி.கோ.சூ. ஞானபோதினியில் பூர்ணலிங்கம் பிள்ளையோடு இணைந்து நான்கு ஆண்டுகள் நடத்தினார் என்று ஒரு செய்தி கூறப் படுகின்றது.[15]

ஆனால், ஞானபோதினியில் 1901 ஆகஸ்ட் இதழில் முதன் முறை யாகப் 'பத்திராதிபர்' எனும் குறிப்பில் எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை

யுடன் 'வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் பி.ஏ.' எனும் பெயரும் அச்சிடப்பட்டுள்ளது. 1900 அக்டோபர் இதழில் ஞானபோதினியின் 'மானேஜர்' ஆக வி.கோ.சூ.வின் பெயர் உள்ளது.

## ஞானபோதினியின் உருவம்

பூர்ணலிங்கம் பிள்ளையின் ஞானபோதினிக்கு முன்பாக 1891 சனவரியில் சென்னையில் இருந்து மாத இதழாக ஒரு ஞானபோதினி வெளிவந்துள்ளது. 24 பக்கங்கள் கொண்ட இந்த இதழின் ஆசிரியர் வேங்கடம் என்பவர்.[16]

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஞான போதினியின் தோற்றத்திற்குச் சற்று முன்னும் பின்னும் வெளிவந்த தமிழ் இதழ்களில் குறிப்பிடத்தக்கன பின்வருவன:

திரிசிரபுரத் தமிழ்ச் செல்வன் - வார இதழ் - 1890, நாகை நீல லோசனி - வார இதழ் - 1890, திருச்செங்கோட்டு விவேக திவாகரன் - வார இதழ் - 1894, லோகோபகாரி - வார இதழ் - சென்னை 1895, பிரபஞ்சமித்திரன் - வார இதழ் - சென்னை - 1898, உதயதாரகை - திங்கள் இருமுறை இதழ் - யாழ்ப்பாணம் - 1841, பிரம்மவித்தியா - திங்கள் இருமுறை இதழ் - சிதம்பரம் - 1887, ஞானாமிர்தம் - திங்கள் இருமுறை இதழ் - சென்னை - 1888, தத்துவ போதினி - திங்கள் இதழ் - பிரம்ம சமாஜ வெளியீடு - சென்னை - 1864, கோயமுத்தூர் கலாநிதி - கோயமுத்தூர் - திங்கள் இதழ் - 1880, விவேக சிந்தாமணி - திங்கள் இதழ் - 1892, சித்தாந்த தீபிகை - சென்னை - திங்கள் இதழ் - 1897.[17]

1897 ஆகஸ்டில் தோன்றிய ஞானபோதினியின் அளவு 20.5 செ.மீ. x 12.5 செ.மீ.; மொத்தப் பக்கங்கள் 40; ஆண்டு கையொப்பம் இரண்டரை ரூபாய், தனி இதழ் விலை நான்கணா.

'ஞானபோதினி ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை' எனும் பெயருடன் சென்னை தாம்ஸன் கம்பெனியாரால் பதிப்பிக்கப் பெற்று வந்தது. மேலட்டையில் 'தாமின் புறுவ துலகின்புறக் கண்டு, காமுறுவர் கற்றறிந்தார்' எனும் குறட்பா அச்சிடப் பெற்று வந்தது. 'சம்புடம்', 'புத்தகம்' எனும் வரிசையால் இதழின் வெளியீடு குறிக்கப்பட்டு வந்தது. ஆங்கில ஆண்டும், மாதமும் மட்டும் குறிப்பிடப்பட்டிருந்தன.

பக்கங்கள் பத்திகளாகப் பகுக்கப்படவில்லை. இதழ் அலுவலகம் 99/2 லிங்கிச் செட்டித் தெருவில் இருந்தது. ஸம்புடம் அதாவது, தொகுதி ஆகஸ்டில் இருந்து அடுத்த ஆகஸ்டு வரையில் கணிக்கப் பட்டது.

## முதல் இதழ்

முதல் இதழ் 'ஸம்புடம் 1-1897 ஆகஸ்ட் புத்தகம் 1' என்று அறிவித்துக் கொண்டு வந்தது. முதல் பக்கத்தில் பத்திராதிபரின் 'விஞ்ஞாபனம்' வெளிவந்தது. இதில் இதழின் பெயர்க்காரணம் பற்றிப் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது:

> 'சில வருடங்களுக்கு முன்னர் கல்வி ரசங்கொண்டு கேட்டவர்க்கும் பார்த்தவர்க்கும் இன்பம் அளித்துதவிய ஞானாமிர்தம் என்னும் பத்திரிகையில் ஸ்ரீ சபாபதி நாவலரவர்கள் பெரும்பாலும் சைவ சமயத்தைக் குறித்து மட்டும் எழுதிக் கொண்டிருந்தமையால் அப்பத்திரிகை சைவ சமயிகளால் மட்டும் ஆதரிக்கப் பெற்று நாளடைவில் அவர்களும் கைவிடவே விளங்காதொழிந்தது. ஆகையால் முன்னோர் அநுபவத்தைச் சிரமேற் கொண்டு பன்னாட் சிந்தித்துப் பலவகை ஞானங்களே ஓருருவமாய் விளங்கா நின்ற சரஸ்வதியினடி பணிந்து அடியேன் பிரசுரிக்கும் பத்திரிகைக்கு 'ஞானபோதினி' என்னும் நாமகரணமிடத் துணிந்தனம்'

மேற்காணும் ஞானாமிர்தம் எனும் இதழ் 1888 மே மாதம் முதல் சென்னையில் இருந்து வெளிவந்தது. சென்னை சித்தாந்த வித்தியானுபாலன அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளிவந்தது. இதன் அளவு செ.மீ. 43+28, பக்கங்கள் 4. 'இவ்விதழ் சைவ சமய வளர்ச்சியை நாடி வெளியாகியது. இவ்விதழில் வைதிக சித்தாந்தப் பிரகரணம், பரமதம் பிரகரணம் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன.'[13]

தமிழ் இதழ்களின் வளர்ச்சிக் கட்டங்களின் ஒரு கட்டத்தில் சமயச் சார்புடன் பூசலிட்ட இதழ்கள் பெருகியிருந்தன. ஞானபோதினி 'பத்திரிாதிபர்' எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை சமய ஞானத்தை மட்டும் முன்நிறுத்தார். 'பலவகை ஞானங்'களை வாசகர்கள் பெறத் திட்டமிட்டு இதழை நடத்த விரும்பினார்.

'பலவகை ஞானங்கள்' என்று அவர் குறிப்பிட்டதில் தமிழ் மொழி, இலக்கிய வளர்ச்சி, ஆங்கில இலக்கிய மொழி பெயர்ப்பு, நாடகங் கள், புதினங்கள் முதலானவைகள் அடங்குவன.

முதல் இதழிலேயே வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியாரின் புதினமான 'மதிவாணன் கதை' தொடராக வெளிவரத் தொடங்கியது. இந்தக் கதையை எழுதச் சி.வை. தாமோதரம் பிள்ளையின் தூண்டு தல் ஒரு காரணமாகும். இதன் நடை 'இனிய செந்தமிழ்' நடையில் அமைந்தது. பக்கம் மூன்றிலிருந்து பக்கம் எட்டு வரையில் இக் கதை வெளியிடப்பட்டது. அடுத்து வந்தது 'தமிழின் நிலைமை' எனும் கட்டுரை. பக்கம் 8 முதல் பக்கம் 16 வரையில் வெளியிடப்பட்டது. இதை எழுதியவர் ம. முத்துராமலிங்கம் பிள்ளை. மூன்றாவதாகப் பக்கம் 17இல் இருந்து 24 வரையில் திருமயிலை சண்முகம் பிள்ளை யால் தொடர்கட்டுரையாக 'சில இலக்கண விவாதங்கள்' வெளிவந் தது. 'கலாசாலை' யின் மாணவர்களுக்கான திராவிட பாஷாபிவிர்த்தி சங்கத்தின் புரவலர்களில் ஒருவர் தலைமைத் தமிழ்ப் பண்டிதராகப் பணியாற்றிய வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார். திராவிட பாஷாபிவிர்த்திச் சங்கத்தில் வாசிக்கப்பட்ட கட்டுரைகள் சில ஞான போதினியில் வெளிவந்துள்ளன. 1898 சூலை இதழில் 'பெரிய திருமொழி' எனும் தலைப்பில் வெளிவந்த கட்டுரை, 1902 மே மாத இதழில் வெளிவந்த 'விளையாட்டின் இன்றியமையாமை' எனும் கட் டுரை, திராவிட பாஷாபிவிர்த்திச் சங்கத்தில் வாசிக்கப்பட்டவை யாகும்.

முதல் இதழில் நான்காவது கட்டுரையாகச் 'சிவப்பிரகாச சுவாமிகள் - சிறு நூலாராய்ச்சி' பக்கம் 25 முதல் 32 வரையில் வெளி வந்தது. இதை எழுதியவர் சருக்கை இராமசாமி ஐயங்கார். இவரு டைய கட்டுரைகள் ஞானபோதினியில் வெளிவந்து கொண்டிருந்தன. இறுதிக் கட்டுரையாகப் பக்கம் 33 முதல் 40 வரையில் பூர்ணலிங்கம் பிள்ளை எழுதிய 'ஒரு விநோத சம்பாஷணை' வெளிவந்தது. பெண்கள் முன்னேற்றம் பற்றிய உரையாடலாக அமைந்த கட்டுரை இது.

இக்கட்டுரையில் கூறப்பட்ட சில கருத்துகள் பின்வருவன :

> 'இக்காலத்துப் பெண்கள் முற்காலத்தவரைவிட மிகவும் ஆநந்த சுதந்தரர்களாயிருக்கின்றனர். அவர்கள் புருடர்கட்கு அளிக்கு

மின்ப சுகம் அதற்குத் தக்கபடி நாளடைவில் விருத்தியாயிருக்கிறது.' (ப.37)

'மனைவிகள் புருடரையும் பிள்ளைகள் பெற்றோரையும் சார்ந்திருப்பது அன்பிற்குரிய கடமைகளைச் செய்வதற்கே யொழிய வேறு உதரத்தின் பொருட்டன்று' (ப.39)

'நான் நூறியாண்டுகட்கு முன்னர் ஏழை ஸ்திரீகள் பட்ட மன வருத்தத்தையும் அவமானத்தையும் பற்றி மிகவும் சுருக்கமாகச் சொன்னேன்.' (ப.40)

பெண்கள் நலன் நாடும் 'ஞானபோதினி'யின் மற்றும் சில கட்டுரைகளைப் பற்றி 'பெண்ணியம்' எனும் தலைப்பில் மேல்வரும் பக்கங்களில் பேசப்படும்.

முதல் இதழில் அக்காலத்தில் இதழ்களில் வெளிவந்த 'வர்த்தமானங்கள்' (செய்திக் குறிப்புகள்) 'சமாசாரக் குறிப்புகள்', 'பத்ராதிபர் குறிப்புகள்' முதலானவை இடம் பெறவில்லை. ஆனால் இவையெல்லாம் இதழின் இரண்டாம் ஆண்டிலிருந்து இடம் பெற்றன. பக்கங்கள் நாற்பது மட்டும் எவ்வித மாறுதலும் இல்லாமல் ஆண்டு தோறும் அமைந்து வந்தன.

1897 ஆகஸ்டு முதல் 1902 சூலை வரையில் வெளிவந்த ஞானபோதினி இதழ்கள் எமது பார்வைக்குக் கிடைத்தன.

## ஆண்டறிக்கைகள்

ஞானபோதினி வெளியீட்டின் ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்டில் இருந்து தொடங்கியது. ஒவ்வொரு ஆண்டின் முதல் இதழில் கடந்த ஆண்டின் ஞானபோதினி வெளியீட்டைப் பற்றிப் 'பத்ராதிபர்' எழுதி வந்தார். இவை ஆண்டு அறிக்கைகளாகக் கருதத்தக்கன. இவை பெரும்பாலும் 'விஞ்ஞாபனம்' எனும் தலைப்பில் 'பத்ராதிபர்' எனும் பெயரில் வெளிவந்தன. இவை சுயவிமர்சனங்களாகவும் திகழ்ந்தன. இவற்றுள் சிலவற்றைப் பார்ப்போம்:

## மூன்றாம் ஆண்டில் வெளிவந்த 'விஞ்ஞாபனம்'

ஆகஸ்டு 20, 1899இல் 'ஞானபோதினி' மூன்றாம் ஆண்டு தொடங்கியது. 'விஞ்ஞாபனம்' எனும் தலைப்பில் 'வேது பிராயம்

ஆரம்பமாகின்றது' எனும் குறிப்புடன் வெளிவந்த கட்டுரையின் ஒரு பகுதி பின்வருவது:

> இப்பத்திரிகையை முதல் முதலில் ஆரம்பஞ் செய்தபொழுது இதற்குக் கையொப்பக்காரர்கள எவரேனுமிருந்திலர். ஆயினும் கைப்பணம் செலவிட்டு ஊக்கம் விடாமற் நடத்தினம். செந்தமிழில் எழுதப்பட்டு வருகிறபடியால் இப்பத்திரிகை நீடியாது என்றார் சிலர். வேறு சிலர் ஞானபோதினிக்கு இறுதி வந்துற்றதென்றார். சென்ற இரண்டு வருடங்களில் தமிழ்ச் சரிதம், இலக்கணம், பொருணூல், உடல் நூல், வைத்தியம், தத்துவம், கானம், நாடகம், கல்வி, சமயம் முதலான விஷயங்களைப் பற்றிப் பலர் எழுதினர்.

மேற்காணும் கட்டுரையில் ஞானபோதினி இதழின் உள்ளடக்கம் பற்றிய குறிப்புகள் தெளிவாகின்றன. இதழை விடாமல் நடத்துவதில் காட்டப்பெற்ற உறுதிப்பாடும் தெரிகின்றது.

இக்கட்டுரையில் அதாவது 'விஞ்ஞாபனத்தில் 'இப்பத்திரிகைக் கெழுதுங் கனவான்கள் தயை கூர்ந்து கவனிக்க வேண்டிய விஷயங்கள்' எனும் குறிப்பில் கூறப்பட்டுள்ள பின்வரும் கருத்துகள் இதழின் உள்ளடக்கம், தமிழ் நடையில் ஞானபோதினியின் கோட்பாடு ஆகியவற்றைப் புலப்படுத்தும்.

> பத்திரிகைக்கெழுதும் விஷயங்கள் கதாரூபமாகவும் நாடக ரூபமாகவும், சாஸ்திர ரூபமாகவும் பல் திறத்தினுமெழுதப்படலாம். இவற்றுட் கதையும் நாடகமும் அந்நிய பாஷையிலிருந்து தமிழிற் சுயபாஷைப் போக்கிற்கு மொழி பெயர்க்கப்பட்டனவாதல், தமிழிலேயே யுள்ளவாறோர் நூல்கள் வேறுரூபப்பட்டுத் தோன்றியாதல் இருப்பின் மிக்க நலமுடையவாம். அன்றி எழுதுவோர் யாரும் யாவராயினும் எழுதப்படாததொரு கதையியற்றுவேமென்று புகுதல் சாலாதன்றே! மொழி பெயர்த்தலும் ஆன்றோர் நூல்களை யாசரித்தெழுதலும் இகழ்வுடையாவென்று கொள்ளுவோர் இவ்விருவகை யொழிந்த பிற வகைகளிற்றம் மதியைச் செலுத்தி நல் விஷயங்களெழுதுக. சாஸ்திர விளக்கஞ் செய்வோர் பாமரர்க்கும் விளங்குமாறு எளிய நடையிலெழுதக் கடவர். சமய விஷயங்கள் சமரசமாயிருத்தலே சால்பு. இனி, செய்யுள் ரூபமாகச் சிறு நூல்கள் செய்தனுப்புவோரும் அவை யாவர்க்கும் விளங்கு மெளிய நடையிலெழுதப் படல் வேண்டுமென்றறியக் கடவர். பழைய வழக்கம் பற்றி

> யமகந் திரிபில் யாத்த செய்யுட்கள் பத்திரிகைக்குப் பயன்படா வாகலின் அவையொதுக்கப்படுமென்று முணரக் கடவர்கள்.[19]

'பாமரர்க்கும் விளங்குமாறு எளியநடை', "யமகந் திரிபில் யாத்த செய்யுட்களின் பயனின்மை - இரண்டும் ஞானபோதினியில் வலி யுறுத்தப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது. புலமை நடையைப் பேணு பவர்கள் கூடப் பாமரர் நடையின்பால் கருத்து செலுத்திய காலத்தை ஞானபோதினி காட்டுகின்றது.

இங்கு வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியாரின் தமிழ் மொழி நடைவேறுபாட்டைக் குறித்த ஒரு கருத்தையும் நினைவுகூரல் வேண் டும். இந்தக் கருத்து ஞானபோதினியில் 1902 சூலை இதழில் வெளிவந்துள்ளது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் முதலாம் ஆண்டு விழாவில் வி.கோ.சூ. உரையாற்றியபொழுது, 'இக்காலத்தில் பண்டி தர் தமிழும், சாமானியர் தமிழும் பெரிதும் வேறுபடுகின்றனவென் றும், அவ்வேறுபாடு நாளாவர்த்தியில் மிகுகின்றதென்றும், அது மிகாமைப் பொருட்டு நேரிய வழிகளை நாட வேண்டுமென்றும்' குறிப் பிட்டார்.[20]

ஞானபோதினியில் வெளிவரும் எழுத்துகளின் நடை எப்படி அமைய வேண்டும் என்பதைப்பற்றி ஞானபோதினியின் நான்காம் ஆண்டின் 'விஞ்ஞாபன'த்திலும் மீண்டும் பின்வருமாறு வலியுறுத்தப் பட்டது:

## ஞானபோதினியின் தமிழ்நடைக் கொள்கை

1900 ஆகஸ்டு 20இல் 'திருந்திய தமிழமுதருந்து நன்மாந்தர் காள்' எனும் தலைப்பில் நான்காம் வருட இதழ்த் தோற்றத்தைப் பற்றி எழுதப் பெற்றதில் ஒரு பகுதி பின்வருவது :

> விஷயங்கள் இதுவரை கடின நடையும் எளிய நடையுங் கலந்த தமிழ் நடையில் எழுதப்பட்டு வந்தனவாகலின் சில விஷயங் கள் பெண்கள், பாமரர், சிறுவர் என்றும் எண்ணப்பட்ட சிலர்க் குப் பயன்படாவாயின. இனி வருவனவெல்லாம் இலக்கண வழுவில்லாத எளிய இனிய செந்தமிழ் நடையில் எழுதப்படல் வேண்டுமென்பதே எமது கொள்கை.

கொள்கைக்கேற்ப எளிய தமிழ் நடையை ஆள்வதில் ஞான போதினியில் எழுதுவோர் பலர் அரும்பாடுபட வேண்டியதாயிற்று.

அப்படியிருந்தும் ஞானபோதினியின் கொள்கை முற்றிலுமாக நடை முறைப்படுத்தப்பட்டது என்று கூறுவதற்கில்லை.

வி.கோ.சூ.வின் 'மதிவாணன்' கதையின் பதினோராவது அத்தியா யத்தின் பின்வரும் பகுதி கதையின் தமிழ் நடையை விளக்கவல்லது.

> சிறிது நேரத்திற்கெல்லாம் மடைப் புழையின் கண் நுழைந்து மாயவனை தேடிச் சென்ற காவலனுடலம் வெளியே போந்து விழுந்தது. யாவரு மதனை யுற்று நோக்கிச் சென்ற காவல னிறந்து விட்டனனென் றெண்ணியுளங் கவன்றனர். இதற்கிடை யில் முருகன் நெடிய தோரிரும்புச் சலாகை தருவித்து அதனை மடையினும் செலுத்திக் குத்துவான் புக்கனன். புக்கவளவில் உள்ளிருந்த மாயவன் மறுபுறஞ் சென்று வெளியேறினன். உடனே யாண்டு அவனை யெதிர் பார்த்து நின்ற காவலரிரு வரும் ஒய்யெனக் கறுப்பினிற் புடைத்து மல்லினிற் கொண்டு பிடித்துப் போர் புரிந்துழிக் காவலனொருவன் காலொடிந்து வீழ்ந்தனன்.[21]

## பத்திராதிபரின் தமிழ்நடை

ஞானபோதினியில் மற்றவர்கள் தமிழ் நடையைக் காட்டிலும் பத்திராதிபர் பூர்ணலிங்கம் பிள்ளையின் தமிழ் நடையில் புலமை நடையின் ஆதிக்கம் குறைந்தே காணப்படுகின்றது. 1900 சனவரி 20இல் அவர் எழுதிய "இராஜ விசுவாசம்" எனும் தலையங்கத்தின் பின்வரும் பகுதி முற்கூறிய உண்மையை விளக்கவல்லது :

> 1877ஆம் வருடத்தில் இந்தியாவைச் சுற்றிப் பார்க்க வந்த மேற்றிசை உயர்குல நிபுணர் ஒருவர் சுயதேசஞ் சேர்ந்த பின்னர் அவருடைய இனத்தார் இந்தியாவைப் பற்றிப் பலப் பல வினாக்கள் எழுப்பியதில் ஒன்றாகிய இந்தியர் எத்தன்மை யுடையர் என்பதற்கு அவர் 'வங்காள தேசத்திலுள்ளார் நமக் குறவினராவார்: பம்பாய் இராஜதானியிலுள்ளார் நமக்கு நண்ப ராவர்; சென்னை இராஜதானியிலுள்ளார் நம்மைச் சுற்றி வாலைக் குழைக்கும் ஞமலிகளாவர்' என்ற மறுமொழி கொடுத்ததாய் யாம் சிறுபிராயத்திலே கேள்விப்பட்டனம். இவ்விடையை நன் றாய்க் கவனிக்குமளவில், சென்னை இராஜதானியிலுள்ளார்க்கு இரண்டு விசேட குணங்கள் ஏற்படுகின்றன. அவையாவன கீழ்ப்படிதல், விசுவாசமுடைமை.[22]

எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளையும் வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியாரும் ஆசிரியர்களாக இருந்த காலத்தில் ஞானபோதினி யில் 'பத்திராதிபர்' என்னும் பெயரில் வெளிவந்த தலையங்கம் இரு வருள் எவர் ஒருவரால் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளி வாகவில்லை.

## 'நமது ஐந்தாம் ஆண்டு'

'Our Fifth year - நமது ஐந்தாம் ஆண்டு' எனும் தலைப்பில் 1901 ஆகஸ்டு 20ல் வெளிவந்த தலையங்கத்தில், ஞானபோதினி யின் நான்காம் ஆண்டில் பூர்ணலிங்கம் பிள்ளை 'உத்தியோக முறை மையை யனுசரித்து வேற்றூருக்கு போகவேண்டி நேர்ந்த காலத்தில்' பத்திரிகையை ஒரு குழுவினர் நடத்திப் 'பலரும் வியக்கத்தக்க வண் ணம் அவ்வருஷத்தைப் பூர்த்தி செய்தார்கள்' என்று குறிப்பிடப்பட் டுள்ளது. ஞானபோதினியில் வெளிவந்த 'விஷயங்களிற் சிலவற்றைப் பள்ளிக்கூடங்கட்கும் பாடப் புத்தகமாக ஏற்படுத்தியிருக்கின்றனர்' என்ற செய்தியும் தலையங்கத்தில் கூறப்பட்டுள்ளது.

1901இல் வி.கோ.சூ. பத்திராதிபரான செய்தியும் "இஃதன் றிப் பத்திராதிபர் ஒருவருக்கு இருவராய்க் கலந்துழைக்கப் புகுந் தனர்" என்றும் சொற்றொடரால் விளக்கமுறுகின்றது.

பத்திரிகையின் உள்ளடக்கம் தொடர்ந்து எவ்வாறு அமையும் என்பதைப் பற்றியும் பின்வரும் விளக்கம் தரப்பட்டுள்ளது :

> நமது ஞானபோதினிப் பத்திரிகையிற் பாஷாபிவிருத்தியை நாடிய கட்டுரைகள் மாத்திரமேயன்றி நமது தேச ஷேமத்தைக் கருதிய பல வித்தியா விஷயங்களும், நீதி போதனைகளும், மனப்பயிற்சி, உடற்பயிற்சி, ஞானாபிவிருத்தி, மன்பதைச் சீர் திருத்த விஷயங்கள், பௌதிக சாஸ்திரவாராய்ச்சி, கைத் தொழிற்பயிற்சி, தேகாரோக்கியம், வியாபாரம், விவசாயம் முத லிய பல விஷயங்களைப் பற்றிய வியாசங்களும்; குறிப்பு களும் அப்போதைக்கப்போது வரையப்படும்.

ஞானபோதினியின் ஆறாம் ஆண்டு அறிக்கையைக் குறித்து அறிய முடியவில்லை. ஞானபோதினியின் இறுதி இதழ் எப்பொழுது வெளிவந்தது என்பதையும் அறிந்திட வாய்ப்பில்லை.

பத்திரிகையின் வளர்ச்சியில் ஆண்டுதோறும் எழுதப்பெற்று வந்த தலையங்கத்தைப் போன்று, மற்றுமோர் குறிப்பிடத்தக்க தலையங்கம் 'புது நூற்றாண்டு' எனும் தலையங்கமாகும்.

## புது நூற்றாண்டு

பத்தொன்பதாம் நூற்றாண்டு முடிவுற்று இருபதாம் நூற்றாண்டு 1901 சனவரியில் மலர்ந்ததைப் பத்திராதிபர் வரலாற்றுணர்வுடன் எழுதிய தலையங்கம்தான் 'புது நூற்றாண்டு' ஆகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் விளைந்த நன்மைகள் பற்றிப் பத்திராதிபர் விரிவாகக் கூறியுள்ளார். அவற்றுள் சில பின்வருவன :

1. பல ஆங்கில முறைகளும் கல்வி, தொழில் முதலிய விஷயங்களில் அனுசரிக்கப்பட்டு வருகின்றன. மேற்புல வாணரது கலை பயிற்று முறைகளைத் தழுவியே மாணாக்கருக்குத் தாம் மேற்கொள்ளும் கல்வியில் ஆர்வம் பிறக்குமாறு இனிய வழியிற் கல்வி கற்பிக்கப்படுகின்றது.

2. சன சமூகச் சீர்திருத்தங்களும் அறிவுடையோர் மகிழத்தக்க வழியிற் செய்யப்படுகின்றன. பயனின்றியும் பொருளின்றியும் இருந்த போலி ஆசாரங்களுள் அநேகம் கழிவனவாயின.

3. பாலிய விவாகம் அதிகமாய் நிகழ்கின்றிப் புனர் விவாகமும் ஆங்காங்கு நடக்கின்றன. நெடுந்தூரங் கடற்பிரயாணம் செய்து வந்தவர்கள் சாதியுட் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர்.

4. சுதேசாபிமானமும் சுபாஷாபிமானமும் மிகுந்து வருகின்றன.

5. ஆங்கில நூற்பயிற்சி மிக்குடைய நம்மவருள் அநேகர் நம் தமிழ்மொழியை அலட்சியஞ் செய்யாது கவனிப்பாராயினார்.

6. நாடோறும் புதுமையான கதைகளும் நாடகங்களும் பத்திரிகைகளும் செய்யுட் பிரபந்தங்களும் நடந்து வருகின்றன.

7. தமிழ்ப் பிரசங்கங்களும் தமிழ்ச் சங்கங்களும் நடந்து வருகின்றன.

இந்தப் பின்னணியில் இருபதாம் நூற்றாண்டை வரவேற்று 'கருணை மழைப்பொழிவை' வேண்டினார் பத்திராதிபர்.

## பத்திரிகை மரபு

1901 டிசம்பரில் ஞானபோதினியில் வெளிவந்த 'பத்திரிகை மரபு' எனும் தலையங்கம் ஆசிரியர்களின் இதழியல் அநுபவத்தையும் ஆற்றலையும் வெளிப்படுத்தியது. The Law of Journalism எனும் ஆங்கிலத் தலைப்புடன் வெளிவந்தது 'பத்திரிகை மரபு'.

'பத்திரிகை மர'பில் ஞானபோதினி கண்ட விழுமிய கருத்துகளில் சில பின்வருவன:

> பத்திராதிபரும் காவற் சாகாடு உழைப்பார் போலப் பெருங் கவலையோடு பத்திரிகையை நடத்துதல் வேண்டும்.
>
> பத்திராதிபர் பலர் விரும்புமாறு பத்திரிகையை நடத்துதல் கூடுமேயன்றி, யாவரும் விரும்புமாறு நடத்துதல் முடியாது.
>
> "நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு புல்லிதழ் பூவிற்குமுண்டு" என்று நாலடியாரினும் ஓராற்றல் உற்று நோக்குமிடத்துப் பத்திராதிபர் நிலைமை பரிதபிக்கத் தக்கதே. எவர் எது கூறினும் கூறுக; மேற்கொண்ட கடமையைக் கைசோரவிடாது கடைக்கூட்டி முடிக்கத்தக்க உள்ளக் கிளர்ச்சியோடெழுதல் வேண்டும்.
>
> பத்திரிகையை யொழுங்கு பெற நடத்துவதிற் சர்வாதிகார முடையவர் பத்திராதிபராதலின் அவர்க்கு விஷயதானஞ் செய்வோர்களது விஷயங்களில் தாம் விரும்பியபடி சில திருத்தங்கள் செய்து கொள்ளுஞ் சுதந்திரமுண்டு.
>
> பத்திரிகையில் போதிய இடமில்லா வழிச் சில விஷயங்கள் சுருக்கியும் இடைவிட்டும் குறைத்தும் பதிப்பிக்கப்படும்.
>
> எவ்வாற்றானும் பத்திராதிபர் பார்வைக்கனுப்பிய புத்தகங்களாதல், பத்திரிகைக்கு அனுப்பிய விஷயங்களாதல், திரும்பியனுப்பப் படுவனவல்ல. அவ்வவற்றின் ஏற்றத் தாழ்வு கருதி நடத்தவே வழக்காறன்றி மற்று அவற்றைக் குறித்து ஒன்றும் முற்படக் கூறுதற்கில்லை யென்பதும் அறிக.

## ஞானபோதினியின் உள்ளடக்கம் – ஒரு பார்வை

முன்பக்கங்களில் ஞானபோதினி, பலவகை 'ஞானங்'களை அவாவி நின்றது கூறப்பட்டுள்ளது. இதுவே சற்று மேலும் விளக்கமுற இங்கு விரித்துரைக்கப்படுகின்றது.

கட்டுரைத் தலைப்புகள் பலவிடங்களில் ஆங்கிலத்திலும் தமிழிலும் இணைத்துத் தரப்பட்டுள்ளன. அரசியல் தமிழ் இதழ்களில் இந்த முறை நிலவியிருந்தது. ஆனால் இலக்கிய இதழ்களுக்கு இம்முறை தேவைதானா? எனும் கேள்விக்கும் இடமுண்டு. ஞானபோதினியின் பெரும்பான்மையான வாசகர்கள் ஆங்கிலம், தமிழ் இரண்டிலும் ஈடுபாடு உடையவர்களாக இருந்திருப்பார்கள் போலும். ஆங்கிலத் தலைப்புகள் கட்டுரையாளர்களால் குறிப்பிடப்பட்டனவா அல்லது ஆசிரியரால் தரப்பட்டனவா என்பதும் ஆய்விற்குரியது.

## விஷயதானஞ் செய்தோர்

ஞானபோதினியில் அக்காலகட்டத்தில் வாழ்ந்த தமிழறிஞர்கள், சம்சுகிருத அறிஞர்கள், ஆங்கில அறிஞர்கள் பலர் விஷயதானஞ் செய்துள்ளனர். இவர்கள் பட்டியல் மிக நீண்டுள்ளது என்றாலும் தகவலறியப் பின்வரும் பட்டியல் தரப்படுகின்றது:

விருதை சிவஞானயோகிகள், அனவரத விநாயகம் பிள்ளை எம்.எஸ்., பூர்ணலிங்கம் பிள்ளை பி.ஏ., பிரணதார்த்தி ஹர சிவன் பி.ஏ., வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் பி.ஏ., கல்குளம் குப்புசுவாமி முதலியார் பி.ஏ., தி.மி. சேஷகிரி சாஸ்திரியார் எம்.ஏ., நாகப்பட்டினம் வேதாசலம் பிள்ளை, கா. கோபாலாசாரியர், ந. கதிரைவேற்பிள்ளை, ந. பலராமையர், சருக்கை வரதாசாரியார், பி.ஏ., மாகறல் கார்த்திகேய முதலியார், எல்.வி. கள்ளபிரான் பிள்ளை பி.ஏ., திருமயிலை சண்முகம் பிள்ளை, மு. முத்துராமலிங்கம் பிள்ளை, தி. லக்ஷ்மண பிள்ளை, திருமணம் செல்வ கேசவராய முதலியார் பி.ஏ., அசலாம்பிகையம்மை, பி.எஸ். சுப்பிரமண்ய ஐயர், சி. சுப்பிரமணியாசாரி பி.ஏ., எல்.டி., பண்டித ச.ம. நடேச சாஸ்திரியார், கா. நமச்சிவாய முதலியார்.

1899 ஆகஸ்டு முதல் 1900 ஆகஸ்டு வரையில் வெளிவந்த கட்டுரைகளை எழுதியவர்களில் பட்டதாரிகள் எண்ணிக்கை பதினெட்டு. பட்டதாரிகள் அல்லாதாரின் எண்ணிக்கை பன்னிரண்டு.

தமிழ்ப்புலவர்கள், இலக்கியம், இலக்கணம், கவிதை, புதினம், வரலாறு, நாடகம், சிறுகதை, மருத்துவம், பொருளாதாரம், அரசியல், இதிகாசம், தத்துவம், பெண்ணியம் முதலான பல நோக்குகளில் கட்டுரைகளை வகைப்படுத்தலாம்.

## தமிழ்ப் புலவர்கள் பற்றிய கட்டுரைகள்

1. அந்தகக்கவி வீரராகவ முதலியார் - கல்குளம் குப்புசாமி முதலியார்
2. ஒளவையார் - சி. சுப்பிரமண்யாசாரியார் பி.ஏ., எல்.டி.
3. தமிழ்ப் புலவர் சரிதம் - பத்திராதிபர்
4. தமிழ்ப் புலவர் பொறாமை - பத்திராதிபர்
5. திருவள்ளுவர் - திருமணம் செல்வக்கேசவராய முதலியார்
6. வறுமையுந் தமிழ்ப் புலமையும் - பத்திராதிபர்
7. மாறன் பெருமை - வை. இராமசாமிப் பிள்ளை பி.ஏ.
8. தமிழ்க் கவிசரிதம் - தி.மி. சேஷகிரி சாஸ்திரியார்
9. தமிழ்ப் புலவர் நிலைமை - மாகறல் கார்த்திகேய முதலியார்

பத்திராதிபரின் 'தமிழ்ப் புலவர் சரிதம்' 1902 பிப்பிரவரி 20இல் வெளிவந்தது. இதில் யாழ்ப்பாணம் காசிசெட்டி ஆங்கிலத்தில் எழுதியது, யாழ்ப்பாணம் ஆ. சதாசிவம் பிள்ளையின் பாவலர் சரித்திர தீபம், உ.வே. சாமிநாதய்யர் பதிப்பித்த நூல்களில் உள்ள தமிழ்ப் புலவர் சரிதம், முருகதாச சுவாமிகளின் புலவர் புராணம், அஷ்டாவதானி வீராசாமி செட்டியாரின் விநோதரச மஞ்சரி முதலானவை புலவர் சரிதமாகக் கொள்ளப்படுகிறது என்பதைக் குறிப்பிட்டுவிட்டு "ஆராய்ச்சியுடன் சரிதம் என்று வருமோ?" என்று வினாயெழுப்பியுள்ளார்.

மாகறல் கார்த்திகேய முதலியார் (1857 - 1916) எழுதிய 'தமிழ்ப் புலவர் நிலைமை' எனும் கட்டுரை ஞானபோதினியில் 1901 மார்ச்சில் வெளிவந்தது. இதில் ஒரு பகுதி வருமாறு :

> ஆங்கில மொழியிற் சிறிது பயின்ற தமிழ் நாடர்கள், தமிழ்ப் புலவர்கள் வித்தியாசாலைகளுக்குச் சிறந்ததோருடையும் உடுப்பும் இன்றி வருகிறார்கள் எனக் கூறியதை யாமும் செவி மடுத்தோம். அஃதுண்மையே... ஆயின் வித்தியாசாலை நடாத்து பவர்க்கு அனுகூலமாகக் கருதியோ, நகை செய்து இகழல் வேண்டுமெனக் கருதியோ, தமிழ்ப் புலவர் வினை தடை செய்த தனாலேயோ இன்றியமையாததாகிய ஒன்று மாத்திரம் எடுத்துக் கூறாது விடுத்தனர். பாவம், பாவம்... இவை போன்றவற்றைச் சிறிதாராயின் எல்லாவற்றுக்கும் பொருளே இன்றியமையாததா

> யிருக்கின்றது... தக்கதோர் மாத வேதனமின்றி மிகப் பரிதாப நிலையில் நின்று வருந்துகின்ற தமிழ்ப் புலவர்கள் என்ன செய் வார்கள்.

மேற்படி கட்டுரையை வெளியிட்ட சில மாதங்களுக்குப் பிறகு ஞானபோதினி ஆசிரியரே `Poverty and Tamil Scholarship - வறுமை யும் தமிழ்ப்புலமையும்' எனும் தலைப்பில் எழுதிய கட்டுரையில் (ஞான போதினி, நவம்பர், 1901) தமிழ்ப் புலவர் களின் வறுமைப் பிரச்ச னைக்குத் தீர்வு காணவேண்டுமென எழுதினார். உணர்ச்சிப் பெருக் கெடுத்தோடும் இந்தக் கட்டுரையில் சில வரிகள் பின்வருவன :

> முற்காலத்தில் தமிழ்ப் புலமைக்குச் சிறந்ததோர் கருவியா யிருந்த வறுமை இக்கால்த்தில் தமிழ்ப் புலமைக்குப் பெருங் கேடாய்ப் பொருந்தி யந்தோ! இன்னும் சின்னாளில் உள்ள தமிழ்ப் புலவர்களது வறுமையும் இன்னே களையப் படாதொழி யின் அஃது அருந்தமிழ்ப் புலமையெனும் ஆரமிழ்தில் வீழ்ந்து அதனை நஞ்சாக்கி விடுங்காண்! தமிழ்ப் புலமை மாட்சியுறச் செய்ம்மின்! தமிழராய்ப் பிறந்த நீவீர் ஒவ்வொருவரும் சிறி தேனும் பாஷாபிமானமுடையராய்த் தமிழ்ப் புலமை யொழிந்து படாது அதனைப் போற்றுவீராக.

## தமிழின் நிலைமை பற்றிய கட்டுரைகள்

1. தமிழுலகம் - வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார்
2. தமிழின் நிலைமை - ம. முத்துலிங்கம் பிள்ளை
3. தமிழும் சர்வகலாசாலையும் - திரவியம் பிள்ளை
4. சுதேச பாஷை நீக்கம் - பத்திராதிபர்

'தமிழின் நிலைமை' எனும் கட்டுரை 1897 செப்டம்பரில் வெளி வந்தது. 'இருக்கின்ற தமிழ் சமஸ்தானம் அனைத்தினும் ஒருவாறு தமிழ் முன்னிற்க வேண்டுமென எண்ணமுடையது இராமநாதபுரம் ஒன்றே' எனக் கட்டுரையாளர் மிகச் சரியாகவே குறிப்பிட்டுள்ளார். 'Abolition of Vernaculars - சுயபாஷை நீக்கம்' எனும் தலைப்பில் எழுதப் பட்ட கட்டுரையில் 'சென்னை வித்தியா விசாரணைத் தலைவர்' பல் கலைக்கழகத் தேர்விற்குச் சுதேச மொழிகளை நீக்கிவிட வேண்டும் எனும் கருத்தை வெளியிட்டார். இதற்கு மறுப்பு தெரிவித்து எழுதப் பெற்ற கட்டுரை இது.

## நாடக விமர்சனங்கள்

1900ஆம் ஆண்டில் எப்.ஏ. பரீட்சைக்குப் பாடமாக வைக்கப் பட்ட சரசாங்கி நாடகத்தை ந. பலராமையர் 1898 மார்ச்சு மாத ஞான போதினியில் விமர்சனம் செய்துள்ளார். நாடகத்தை இயற்றியவர் சலசலோசனச் செட்டியார். இந்த நாடகம் ஷேக்ஸ்பியரின் சிம்பலின் நாடகக் கதை அமைப்பைக் கொண்டது.

பம்மல் சம்பந்த முதலியாரின் 'லீலாவதி சுலோசனை' எனும் நாடகத்தை அ. திருமலைக் கொழுந்து பிள்ளை அவர்கள் 1898 பிப்பிரவரி இதழில் விமர்சனம் செய்துள்ளார். இந்த விமர்சனத்தில் நாடகத்தமிழ் பற்றிப் பின்வரும் கருத்து கூறப்பட்டுள்ளது:

> 'ஆரிய மொழியின் நாடகவிலக்கணமும் தமிழ் மொழியின் நாடக விலக்கணமு மொருபடியானவல்ல. தற்காலம் நாடகத் தமிழ் எழுதுவோர் முன்னரேயேற்பட்டுள்ள இலக்கணங்களைத் தழு வாது, ஆரியம், ஆங்கிலம் முதலான பாடைகளின் நாடகவியலி னையே தழுவியெழுதுகின்றனர். ஆதலின் அன்னோர் நாடகங் களினின்றும் ஆதியில் வழங்கிய நாடகத்தமிழ் வேறென்பதை மறவற்க!'

> 'லீலாவதி சுலோசனை' நாடகம் பல்கலைக் கழகத்தில் பாடமாக வைக்கும் அளவிற்குத் தகுதியுடையதன்று என்று விமர்சனத் தில் நுட்பமாகக் கூறியுள்ளார் விமர்சகர்.

தி. இலக்ஷ்மண பிள்ளையின் மொழிபெயர்ப்பு நாடகமான வீல நாடகத்தை அனவரதவிநாயகம் பிள்ளை விமர்சனம் செய்துள்ளார் (ஞானபோதினி, பிப்ரவரி, 1898). நாடகத்தின் யாப்பமைப்பு விமர்ச னத்தில் பாராட்டப்பட்டுள்ளது. கிரேக்க நாடகமான 'வீலக்டீற்றிஸ்' தமிழில் 'வீல' நாடகமாகக் கவிதை நடையில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது.

## பெண்ணியம் தொடர்பான கட்டுரைகள்

1. பெண்கல்விக் கும்மி - சிவகாமி
2. பெண் கல்வி விவாதம் - என்.ஸி. சுந்தரராம் ஐயர் பி.ஏ.
3. காக்கைப் பொன்னிலுங் கல்லிழைப்பதா - அசலாம்பிகை யம்மையார்

4. பெண் கல்வி - சு. ஆதிமூலம் பிள்ளை
5. பெண் கல்வி - சாமுவேல் பிள்ளை
6. ஸ்திரி சரிதம் - டி.எம். கிருஷ்ணசாமி ராவ்
7. மாதர் சுதந்திரம் - சருக்கை இராமசாமி ஐயங்கார்

'பெண்கல்விக் கும்மி' 41 பாடல்களைக் கொண்டது. இவற்றுள் இருபாடல்கள் வருமாறு :

இத்தனை நாளும் படித்த படிப்பை
இகழச்செய் தேநம்மை யேய்த்துவிட்டு
புத்திகெட் டார்கள்பெண் களென்றும் நந்தாய்
பேயென்றும் பேசிப் புறக்கணித்தார்

இந்த விதம்பல துன்ப மடைகின்ற
இந்திய மாத ரினிச் சுகிக்கச்
செந்தமி ழேனுஞ் சிறக்கச் சிறுமிகள்
சீருடன் கற்கச் செயம்பெறுவோம்

## கதைகள்

1 மதிவாணன் கதை - வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார்
2. கமலினி - சருக்கை இராமசாமி ஐயங்கார்
3. கோமகள் - எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை
4. லீலை - ந. பலராமையர்
5. இராசாராணி - தி.சு. சுவாமிநாத ஐயர்

## வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரைகள்

1. அனுயாதேவி - தி.சு. சுவாமிநாத ஐயர்
2. அனிபெசண்ட் அம்மையார் சரித்திரம் - சமுத்திரபுரவாசி
3. இராமானுஜாசாரியர் சரிதம் - தி.கோ. ஸ்ரீரங்காச்சாரியார்
4. சந்தானகுரவர் - அனவரத விநாயகம் பிள்ளை
5. சோமசுந்தரநாயகர் - நி. தங்கவேலு முதலியார்
6. ருக்மணி சரித்திரம் - கு.ரா. ஸ்ரீநிவாச ஐயங்கார்
7. விக்டோரியா ராணியார் - கல்குளம் குப்புசுவாமி முதலியார்
8. காளிதாசர் - எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை

## அரசியல் கட்டுரைகள்

1. காங்கிரஸ் மகாசபை - கல்குளம் குப்புசாமி முதலியார்
2. இராஜ விசுவாசம் - எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை

இதுகாறும் எடுத்துக்காட்டப் பெற்ற பலவகையான கட்டுரைகள், ஞானபோதினியின் பன்முகப்பொலிவை விளக்க வல்லன. ஆங்கிலம் கற்ற தமிழறிஞர்கள் இதழியல் பணியில் எவ்வாறெல்லாம் வழிகாட்ட முடியும் என்பதற்கு ஞானபோதினி ஒரு சான்றாக விளங்குகின்றது.

ஞானபோதினியின் ஆசிரியர்களில் ஒருவரான 'பரிதிமாற் கலைஞர்' வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியாரின் அகால மரணம் தமிழ் இதழியல் வரலாற்றில் அவருடைய பங்களிப்பைக் குறுக்கிவிட்டது. மற்றொரு ஆசிரியரான எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை 1917 சூனில் தோன்றிய 'திராவிடன்' நாளிதழில் எழுதியும் 'ஜஸ்டிஸ்' ஆங்கில நாளிதழின் உதவி ஆசிரியராக இருந்தும் தமது இதழியல் பணியைத் தொடர்ந்தார்.

## குறிப்புகள்

1. முன்னுரை (ஆங்கிலம்), மானவிஜயம், 1902, வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார், ப.xvii
2. புதிய விழிப்பின் முன்னோடி ஸ்ரீ. சுப்பிரமணிய ஐயர், 1987, பெ.சு. மணி, பூரம் பதிப்பகம், சென்னை, ப.29
3. 'விஞ்ஞாபனம்' - ஞானபோதினி, ஆகஸ்டு 1898, ப.2
4. ஞானபோதினி, சூலை 1900, ப.480
5. Preface, Sekkizhar, Adippodi, T.N. Ramachandran, Ravana the Great: King of Lanka, M.S. Purnalingam Pillai, Reprint 1996, Kala Samrakshana Sangkam, Thanjavur, p.iii
6. Foreword, A Tamil Literature, 1904, M.S. Punalingam Pillai, B.A.
7. நூற்றாண்டுகளில் தமிழ், 1961, கா.பொ. இரத்தினம், இன்ப நிலையம், சென்னை, ப.273
8. Some Opinions, இலங்கை அரசன் இராவணன் பற்றிய முன்கூறப் பெற்ற நூல், ப.iii

9. சேக்கிழார் அடிப்பொடியின் முற்கூறிய முன்னுரை
10. வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார், பி.ஏ. (பரிதிமாற் கலைஞன்), வி.சூ. நடராஜ சாஸ்திரி, ப.11
11. ஞானபோதினி, சனவரி 1898, ப.214
12. `Preface to the English Echoes', G.U. pope, dated 11th July 1901, தனிப்பாசுரத்தொகை, முதல்வரிசை, 1901, ப.xiii
13. முற்கூறிய வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் பற்றிய நூல், ப.5
14. மேலது, ப.10
15. மேலது, ப.17
16. 19ஆம் நூற்றாண்டுத் தமிழ் இதழ்கள், 1992, அ.மா. சாமி, நவமணி பதிப்பகம், சென்னை, ப.183
17. நாள், கிழமை, திங்கள் இதழ் விளக்க வரிசை, 1961, சு.அ. இராமசாமிப் புலவர், கழகம், சென்னை
18. மேலது, ப.47
19. ஞானபோதினி, ஆகஸ்டு 20, 1899, ப.5
20. ஞானபோதினி, சூலை 1902, ப.463
21. ஞானபோதினி, ஆகஸ்டு 20, 1899, ப.44
22. ஞானபோதினி, சனவரி 20, 1900, ப.204

# மாதர் மனோரஞ்சினி.

எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்.—ஔவையார்.

VOL. 2. | MADRAS: JULY 1900. | No. 5.
புத்த. ௨. | சென்னப்பட்டணம், 1900 - ௵ ஜூலை-மீ. | இல. ௫

## கரடி.

முதல் ஏட்டிலுள்ள படத்தில் பாடசாலையில் கரடிகள் விளையாடுதலைக் காட்டியிருக்கிறது. பையன்களிலொருவன் ஸ்தம்பத்தின் மேல் உட்கார்ந்திருக்கும் ஒரு கரடியைக் குச்சியால் விளையாடத்தூண்டுகிறதைப் பாருங்கள். நம்மிந்தியாவில் சாதாரணமாக கரடியைப் பிடித்துக்கொண்டுவந்து தெருவில் ஜனங்களுக்கு வேடிக்கை காட்டி சிலர் பிழைக்கிறார்கள். இவர்கள் பாடசாலைகளிலும் கரடிகளை அழைத்துக்கொண்டுபோய் பிள்ளைகளும், பெண்களும், பார்த்து ஆநந்திக்கும்படி அநேகவித ஆட்டங்களை ஆடும்படி செய்வித்து வெகுமானம் பெறுவதும் உண்டு. கரடியானது நாய், பூனை இவற்றைப்போல வீட்டில் சகஜமாய் வைத்துவளர்க்கும் மிருகமல்ல; இது சிங்கம், புலி, ஓநாய் இவைகளைப்போல் கொடியமிருகங்களில் ஒன்று. ஆனால் அவைகள் மாமிசங்களைப் புசிக்கும். இக்கரடி ஜாதியில் பெரும்பான்மையானவை மாமிசங்களைப்புசியாமல் காய் கிழங்குகளைத் தின்று ஜீவிக்கும். இது அதிக சுறுசுறுப்புள்ள ஜெந்துவல்லவாகையால் அதிக வேகமாக ஓடாது. புலி, பூனை நாய் முதலிய ஜெந்துக்கள் குதிகாலால் நடக்கின்றன. கரடியோ மனிதனைப்போல் பாதம் முழுவதும் பூமியில் பொருந்தும்படி நடக்கும். இப்படி நடப்பதால் தான் இவைகள் மிருகங்களையோ மனிதர்களையோ எதிர்க்கும்போது முன்னங்கால்களால் அழுத்தப்பிறண்டும். இதனுடைய கால்களில் கத்தியைப்போன்ற கூர்மையான நகங்கள் உண்டு. மழை காலத்தில் இந்நகங்களின் உதவியால் பூமியில் ஓர் குகையைப்போலத் தோண்டிக்கொண்டு அதில் வசிக்கும். இது ஒரு மரத்திலிருந்து இன்னொருமரத்துக்கு அதிகவிரைவாகத்தாவும் படியான அவ்வளவுபலம் பொருந்தியது. மனிதர்கள் இதைத்தொந்தரை செய்தாலன்றி இது ஒருவரையுந் தொந்தரை செய்யாது. இது மனிதரைக் கொல்லவேண்டி நேரிட்டால் தன் முன்னங்காலால் தலையில் ஒரு அறை

# மாதர் மனோரஞ்சனி

## மா.ரா. சிவஅரசி

### அறிவொளி பரப்பும் இதழ்கள்

இதழ்கள் காலத்தின் கண்ணாடிகள்; சமுதாயத்தைச் சீர்படுத்தும் ஒளி விளக்குகளாக விளங்குவன. சாதி, சமயப் பூசல்களை அகற்றி, மூடப் பழக்கவழக்கங்களையும் நம்பிக்கைகளையும் விலக்கி, மக்களிடையே அறிவொளி பரப்பிடும் மக்கள் தொடர்புச் சாதனங்களாக அமைவன.

பெரும்பாலும், விடுதலைக்கு முன்பு இருந்த தமிழ் இதழ்கள் அரசியல், சமுதாய, பண்பாட்டு விடுதலையை நோக்கங்களாகக் கொண்டு வெளிவந்தன.

பெண்கள், கல்வி கற்றுச் சிறக்க வேண்டும்; வெறும் அலங்காரத்திலும் வீண் வம்புப் பேச்சுகளிலுமே தங்கள் காலத்தைக் கழித்துவிடக்கூடாது; தாங்களும் உயர்ந்து, தங்கள் குழந்தைகளையும் குடும்பத்தையும் உயர்த்தி, சமுதாயத்தில் நனிசிறக்க வாழ வேண்டும் என்பன போன்ற கருத்துகளை அடித்தளமாக்கிப் பல இதழ்கள் தோன்றின.

### பெண்களுக்கெனத் தோன்றிய இதழ்கள்

பெண்களுக்கெனத் தோன்றிய இதழ்களை, பெண்களுக்கென்றே நடத்தப்பெற்றவை, பெண்களால் நடத்தப்பெற்றவை, இதழின் பெரும் பகுதி பெண்களுக்குரிய செய்திகளாக வெளியிடப் பெற்றவை என்ற மூன்று பிரிவுகளுக்குள் அடக்கலாம்.

சுகுண போதினி (1883), பெண்மதி போதினி (1891), மாதர் மனோரஞ்சனி (1899), மஹாராணி (1887), சக்கரவர்த்தினி (1905), ஸ்திரீ தருமம் (1917), கல்பதரு (1917), சிந்தாமணி (1924), தர்ம ஜோதி (1930), தமிழ் பெருமாட்டி (1934), கிரக லட்சுமி (1937) முதலானவை சுதந்திரத்துக்கு முன்பு பெண்களுக் கென்று நடத்தப் பெற்ற மாதர் இதழ்களாவன.

அமிர்தவசனி (1860), மாதர் மித்திர (1887), பெண்கல்வி (1900), தமிழ்மாது (1906), மாதர் போதினி (1911), தமிழ் மகள் (1926), இதகாரினி (1909), தமிழரசி (1929), கிரகமணி (1936), மாதர் மறுமணம் (1936), மங்கை (1947), புதுமைப் பெண் (1947) என்னும் இதழ்கள் பெண்களால் நடத்தப் பெற்றவை. இன்று மங்கையர் மலர், பெண்மணி, இராஜம் போன்ற பல்வேறு மகளிர் இதழ்களும் வெளிவருகின்றன.

சமுதாய - பண்பாட்டு - பொருளாதார அரங்குகளில், அடிமைப் படுத்தப்பட்டு இரண்டாந்தரக் குடிமக்களாக நடத்தப்படும் பல பெண்களின் நிலையினை மாற்றி, கல்விச் செல்வத்தை அவர்களுக் குக் குறைவற அளித்திடத் தோன்றிய பல்வேறு மாதர் இதழ்களுள், காலத்தால் அழிக்கவொண்ணாதது 'மாதர் மனோரஞ்சனி'.

## இதழின் தோற்றம்

திரு C.S. இராமசாமி ஐயர் என்பவரால் திருவல்லிக்கேணியி லிருந்து வெளியிடப்பெற்றது இந்த இதழ்.

'பெண்களைச் சிறுவயதிலேயே திருமணம் செய்து கொடுத்து விடுவதால் பெண்கள் படிக்க வாய்ப்பில்லை.' பெரும்பாலும் ஏழை மக்கள். அதனாலும் படிக்க இயலவில்லை. பெண்கள் படித்து விட் டால், பிறரை ஒரு பொருட்டாக மதிப்பதில்லை என்ற எண்ணம் உண்டு. இது காலப்போக்கில்தான் மாறவேண்டும். ஏறத்தாழ, 70,000 பெண் கள் கிராமப் பள்ளிகளில் படிக்கின்றனர். ஆனால், அது அரைகுறைப் படிப்பாகி விடுகிறது. கல்வித் தேர்ச்சியால் பெண்கள் புருஷர்களைப் போல் பொருள் தேடப் போவதில்லை. நற்குண நற்செய்கைகள் கற் பிக்கக் கல்வி முக்கிய சாதனம். கல்வியறிவு இருந்தாலல்லது நற் குணப் பெண்டிராகவும் நல்ல மனைவியராகவும் தாயராகவும் நம் பெண் கள் எங்ஙனம் ஆவர்? வீட்டிலிருந்தபடியே படிக்கவும் வசதி இல்லை.

பெண்களுக்கென ஒரு தேசாபிமானி தெலுங்கில் பத்திரிகை வெளியிடுகின்றார். அவரும் இன்னும் சில நல்ல நண்பர்களும் பெண் களுக்கெனப் பத்திரிகை வேண்டும் என்று வற்புறுத்தியமையால் - தூண்டியமையால் இப்பத்திரிகை தொடங்கப்பெற்றது.

> 'இப்பத்திரிகையில் பெண்கல்வி, நற்குண நற்செயல்கள் போதிப் பது, பிள்ளை வளர்ப்பு, உடல் நலம், சமையல் என்று அநேக விஷயங்கள் எழுதி அறிவை வளர்க்க விருப்பம். அவ்வப் போது பெரியோர்களும் தேசாபிமானிகளும் கல்விமான்களும் பெண்களுக்குச் சொல்லும் கருத்துரைகள் இதில் பிரசுரிக்கப் படும். பெண் கல்வியே இதன் முக்கிய நோக்கம். பெண்கள் தம் சகோதரிகளுக்காக நிறைய எழுத வேண்டும். அவர்தம் எழுத் துக்கே முதலிடம். இப்பத்திரிகையால் தமிழ்நாட்டுப் பெண்கள் என்னளவேனும் கல்வியும் விவேகமும் அடைந்தனர் என்றால் அதுவே எமக்குப் பெரிய பரிசு' (மார்ச் 1899) என்று, இந்த இதழின் தோற்றத்துக்குரிய காரணத்தையும் இதழால் விளைய வேண்டிய பெரும்பயன்களையும் தெள்ளிதின் புலப்படுத்தி விட்டார் ஆசிரியர் திரு C.S. இராமசாமி ஐயர்.

## இதழின் நோக்கம்

கல்விச்சிந்தனை, விவாகச் சீர்திருத்தம், சமஉரிமைக் கோரிக்கை, இல்லற தர்மம், அடிமைப்பட்டுக் கிடந்த பெண்களைக் கல்வி மூலம் எழுச்சி பெறச் செய்தல் என்பன மாதர் மனோரஞ்சனியின் அடிப்படைக் கருத்துகளாக அமைந்தன.

புதுமைப் பெண்களைப் படைத்து உலவவிட்ட பாரதியாருக்கு முன்பே, கல்வியாலும் கடமையுணர்வாலும் நற்குண நற்செயல்களா லும் புதுமைப் பெண்களாகத் திகழ்வதெப்படி என்பதைப் பெண்களுக் கெனத் தோன்றிய மேலே கூறப்பெற்ற பல்வேறு இதழ்கள் விளக்கிச் சென்றுள்ளன.

இங்கு இவ்விதழின் முதல் ஐந்து ஆண்டுகளுக்குரிய இதழ்கள் மட்டுமே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. இவற்றுள், இரண் டாம் ஆண்டுக்கான இதழ்கள் பார்வைக்குக் கிடைக்கவில்லை. எனவே 1, 3, 4, 5 என்ற நான்காண்டு இதழ்களே இங்கு எடுத்துக் கொள் ளப்பட்டன.

## அமைப்பு

'மாதர் மனோரஞ்சனி' மாத இதழாக வெளிவந்தது. ஓர் இதழ் 16 பக்கங்களைக் கொண்டதாக விளங்குகிறது. ஓர் ஆண்டு இதழ்கள் அனைத்துக்கும் தொடர்ச்சியாகப் பக்க எண்கள் தரப்பட்டுள்ளன. முதல் இதழ் 1899 மார்ச்சில் வெளிவந்துள்ளது.

1902 மே மாத இதழில், 'பெண் கல்வி விருத்திக்காக ஆரம்பித்த இப்பத்திரிகை, இப்போது மூன்று பக்கங்கள் அதிகம் ஆகிறது. ஆனால், சந்தா அதிகம் ஆகவில்லை' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

ஒவ்வொரு ஆண்டு முடிந்தபிறகும் இதழ்களைத் தொகுத்து, தனித்தொகுதியாக வெளியிட்டுள்ளனர். இரண்டாம் ஆண்டுக்குரியன கிடைக்கவில்லை. மூன்றாம் ஆண்டுக்குரியன தனியாகவும் நான்காம், ஐந்தாம் ஆண்டுகளுக்கான இதழ்கள் ஒரே புத்தகமாகவும் அமைக்கப்பட்டுள்ளன. இடையிடையே ஒன்றிரண்டு இதழ்கள் வெளிவரவில்லை.

## முதல் பக்கம்

இதழில் முதல் பக்க அட்டையில், 'மாதர் மனோரஞ்சனி' என்று இதழின் பெயர் தாளின் நடுவே கொலுவிருக்க, கீழே ஒரு கட்டத்துள் ஆண்டு, இதழ் வெளியாகும் இடம் என்பன ஆங்கிலத்திலும் தமிழிலும் குறிக்கப் பெற்றுள்ளன. இந்த இதழின் ஆண்டுச் சந்தா 1 ரூபாய் 12 அணா. தனி இதழ் 2½ அணா.

இதழின் முன்பக்க அட்டையில் தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளடக்கம் எழுதப் பெற்றுள்ளது. பார்வைக்குக் கிடைத்த இதழ்களைக் கொண்டு பார்க்கும்போது இந்த இதழ் ஏறத்தாழப் பதினெட்டு ஆண்டுகள் (1917 வரை) வெளிவந்துள்ளது என்பது தெரிகிறது.

முன்பக்க உள் அட்டையில் Opinions of the press, The Hindu, Ready for Sale - `The Thiruvachakam' என்ற குறிப்புகளும் பத்திரிகை பற்றிய பாராட்டுக் கடிதங்கள் முதலியனவும் இடம் பெற்றுள்ளன.

1901இல் வெளிவந்த இதழ்களிலிருந்து 'எண்ணும் எழுத்தும் கண் எனத்தகும்' என்ற ஔவையாரின் வாக்கும் முதல் பக்கத்தில்

இடம்பெற்று ஒளிர்கின்றது. அத்துடன், `A Monthly Illustrated Journal Devoted to Female Education' என்று எழுதி இந்த இதழின் நோக்கம், பெண் கல்விக்கே தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்வதுதான் என்பதனைத் தெளிவுபடுத்துகின்றார் ஆசிரியர்.

பின்பக்க உள்அட்டையில் Advertisements என்று ஆங்கிலத்தில் எழுதப்பெற்றுள்ளது. இதில் அமைந்த விளம்பரங்களில் பெரும்பாலும் ஆங்கிலத்திலும் சில தமிழிலும் உள்ளன.

இதில் இந்து வைத்தியம், விக்டோரியா மகாராணியாரின் ஞாப கச் சின்ன வெகுமதி விளம்பரம் போன்றவையும் இந்து பாக சாஸ் திரம் - இரண்டாம் பதிப்பு என்ற நூல் பற்றிய விளம்பரம், 'பழமொழிக் காஞ்சி' புத்தக விளம்பரம் முதலியனவும் இடம் பெற்றுள்ளன. சில இதழ்களின் முதல் பக்கங்களில் மஹாராஜா, மஹாராணி படங்களும் காணப்படுகின்றன.

மாதர் மனோரஞ்சனியில் பல்வேறுதுறை பற்றிய கட்டுரைகள், வாழ்த்துப் பாடல்கள், நாடகம், உரையாடல், கதைகள், மொழி பெயர்ப் புச் செய்திகள், சரித்திரம் போன்றவையும் இடம் பெற்றுள்ளன.

பெண்களுக்கென்றே தோன்றியமையால் பெண் கல்வி, மைசூரில் பெண்கல்வி விருத்தி, மிஸ்ஸஸ் அரண்டலும் இந்து மாதரும், இந்திய மாதர்களுக்கு ஓர் ஆங்கிலப் பத்திரிகை, இந்தியாவில் பெண்களின் தொகை ஏன் அதிகப்படவில்லை? மகளிர் நிலைமையும் மனத்துய ரும், குழந்தைகளைப் பழக்கும் முறை, மிஸ்ஸஸ் அம்சாம்பாள், இந்து ஸ்திரீகளின் நிலைமை, இந்திய மாதர்களுக்கு ஓர் ஆலோசனை, புருஷனும் பெண்சாதியும், மிஸ்ஸஸ் கமல சத்தியநாதன் போன்ற பெரும்பாலான கட்டுரைகள் பெண்களுக்கே உரியனவாக - பயன்தரக் கூடியனவாக எழுதப்பெற்றுள்ளன.

## பெண்கல்வி

1899ஆம் ஆண்டு சூலை மாதம் வெளி வந்த இதழில், 'என் சகோதரிகளுக்கோர் கபடமற்ற கடிதம்' என்ற விளக்கத்தோடு ஆங்கி லத்தில் ஒரு மாது எழுதிய கடிதசாரம் தமிழில் தரப்பட்டுள்ளது. அது பெண்கல்வி பற்றியது. அதில் ஒரு பகுதியைக் காணலாம்:

'புருஷர்கள் கல்வி கற்றுள்ளனர். பெண்களும் கல்வி கற்க வேண்டும். அப்படிக் கற்காதது பெண்களின் குற்றமே. புருஷர்களும் இவர் தம் கல்வியில் அக்கறை காட்டுவது இல்லை. ஸ்திரீகள் ஐயமின்றிப் புருஷர்க்குக் குறைந்தவர்கள் - அவர்களோடு உவமித்துக் கூறவே நியாயமில்லை என்று நினைக்கின்றனர். பெண்கள் முயன்று முன்னுக்கு வந்து புருஷர்க்குச் சரிசமமாக ஆவதெப்படி? புருஷனுக்கு நற்குண நற்செய்கையூட்ட, விவேகம் புகட்ட, இனிய மொழிகளுக்கு இசை அமைத்தாற்போல இசைந்து வாழப் பெண்ணுக்குக் கல்வி தேவை' (ப.97)

## மிஸ் ஆர்நால்டு பிரசங்கம்

மிஸ் ஆர்நால்டு என்பவரின் பிரசங்கத்தில் ஒரு பகுதியைக் காண்போம்:

'ஸ்திரிகளின் கல்வி அற்பமாயிருக்கின்றது வருத்தமாயிருக்கிறது. நன்றாய்ப் படித்த ஆடவர்கள்கூடப் பெண்கள் கல்வியில் அலக்ஷியமாயிருக்கிறார்கள். அப்பேர்ப்பட்டவர்களுக்குச் சொல்வது என்னவென்றால், ஒரு தேசத்தின் தேர்ச்சியானது பெண்களின் கல்வியினது பரவலுக்குத்தக்கபடி என்ற சரித்திர நியாயம் உண்மையே. நான் எப்போதும் இனி இந்தியாவின் பிற்பட்டகாலம் முடிய பெண்களின் ஆளுகைக்கு உள்ளாகும் என்ற எண்ணம் கொண்டிருக்கிறேன்.' (1899 செப்டம்பர், ப.101)

பெண் கல்வியில் - இந்து மாதரின் கல்வியில் மிஸ். ஆர்நால்டு கொண்டிருந்த பெருவிருப்பம் வியந்து போற்றுதற்குரியது.

'மாதர்களும் வித்தையும்' என்ற தலைப்பில் அமைந்த கட்டுரையில் (1899 செப்டம்பர், ப.190),

'புஸ்தகங்கள் தோழர்களைப் போல் விளங்குகின்றன. இவைகளைப் போல் எப்பேர்ப்பட்ட உறவினரும் சினேகிதரும் நமக்கு உதவியாகார்.'

'கல்வியானது நம் மனதில் விளையும் எவ்விதமான துக்கம், துயரம் முதலிய மனசஞ்சலங்களையும் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கச் செய்யும் குணமுடையதாயிருக்கிறது.'

'சகோதரிகளே, நமக்குச் சௌக்கியம், சந்துஷ்டி, நற்குணம், நற் செய்கை, நற்புத்தி, பதிவிரதா தருமம், இல்லற ஒழுங்கு, தெய்வ பக்தி முதலிய நல்லொழுக்கங்களுக்கு இருப்பிடமான விலையுயர்ந்த கல்வியாகிய பூஷணத்தை அணியுங்கள்' என்றெல்லாம் மரகதவல்லி என்னும் அம்மையார், பெண் கல்வியின் சிறப்பினை மிகத் தெளிவா கப் புலப்படுத்துகின்றார்.

'மிஸ்ஸஸ் அரண்டலும் இந்து மாதர்களும்' எனும் பகுதியில் பெண் களுக்கு ஆங்கில அறிவும் தேவை என்பதை வலியுறுத்து கின்றார்.

பல பரீட்சைகளில் தேறிய பெண்கள் பரிசுக்குரியவராயினர். மிஸ்ஸஸ் சத்தியநாதன், எம்.ஏ. பரீட்சை தேறியது இந்தியர்க்கு மகிழ்வைத் தருகிறது எனும் ஆசிரியர், பெண்கள் நிறையப் பேர் படிக்க வேண்டும் என்ற தன் பேரவாவினை வெளிப்படுத்துகின்றார்.

'இந்திய மாதர்க்கென ஓர் ஆங்கிலப் பத்திரிகை' எனும் தலைப் பில் ஒரு குறிப்பு உள்ளது. இதற்கு அநேக இந்திய மாதரும் ஐரோப் பிய மாதரும் நிருபம் எழுதுவதற்காக வாக்களித்திருப்பதைக் கேட்க மிக சந்தோஷப்படுகிறோம் என்கிறார் இதழாசிரியர் (1901 ஆகஸ்டு, ப.118). இதில்,

'மகளிர் நிலையும் மனத்துயரும்' எனும் கட்டுரையில், வறுமை கொடிது என்று குறிப்பிட்ட ஆசிரியர் உருக்குமணி அம்மாள், ஆடு மாடுகளை நடத்துவதுபோல், பெண்கள் நடத்தப்படுவதையும் இழி வாகப் பேசப்படுவதையும் வன்மையாகக் கடிந்துரைக்கின்றார்.

பெண் மக்களை - அவர்தம் கடமைகளை உள்ளபடி உணர்ந்து மதிப்போடு நடத்தி, தாமும் சுகத்தையும் களிப்பையும் அடைந்து வரும் பெருமதி ஆங்கிலேயரிடம் இருக்கிறது. பெண்ணுக்குக் கல்வி அளிப்பது குருடனுக்குக் கோல் கொடுப்பது போன்றதாகும் என்கிறார்.

'இந்து மாதர்களின் எதிர்கால எச்சரிப்பு' என்பதொரு சிறு கட்டுரை. சுதேச மாதர்களின் நிகழ்காலக் கல்வி, களிப்பையும் அச்சத்தையும் தருகிறது. நாடு சீரழிந்துள்ளது. நம் தேய மகளிர் மானம், கற்பு என்பவற்றைக் காக்க வேண்டும். பூர்வகால மாதர்கள்

அமரிக்கை; தெய்வ நம்பிக்கை அவர்களிடம் உண்டு. இன்று நல்ல பழக்கங்கள் தீமையாயின. காலப்போக்கில் அவை மாறுவதே இல்லை என்கிறார் அசலாம்பிகை அம்மையார் (1901 செப்டம்பர், பக்.121-22).

மாதர் நலம் நாடுவதற்கென்றே ஒரு மாதாந்திரப் பத்திரிகை வெளிவந்துள்ளது, The Indian Ladies Magazine என்ற பெயரில் இந்த ஆங்கிலப் பத்திரிகையில் வெளிவந்த சில கட்டுரைகள் 'மாதர் மனோரஞ்சனி'யில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன.

'கனம் கர்ஸன் பெருமாட்டி' (1903 சனவரி, பக்.221-22) என்னும் தலைப்பில் அமைந்த கட்டுரையில், சுதேச மாதர்களின் கல்வித் தேர்ச்சியில் - சௌக்கியத்தில் கருத்தும் காருண்யமும் உள்ளவர் கர்ஸன் பெருமாட்டி; விக்டோரியா மகாராணியார் இறந்த போது இவர் நிதி திரட்டி 7 லட்சம் ரூபாய் வங்கியில் போட்டு இந்து மாதர்களின் பிரசவ இம்சைகளைத் தீர்த்து வைத்தார். பெண்கள் சிலரை, வைத்திய சாலைகளிலும் பள்ளிகளிலும் படிக்க வைத்தார் என்று சொல்லப்படுகின்றது.

பெண்களுக்கென்றே நடத்தப் பெற்ற இதழாதலால், இந்த இதழில் இடம் பெறும் கட்டுரைகள், சிறு குறிப்புகள், மொழி பெயர்ப்புகள், உரையாடல்கள் என்று அனைத்து நிலைகளிலும் பெண் கல்வியின் இன்றியமையாமை, பயன்கள், கல்வியறிவற்ற பெண்களின் சிறுமை முதலியன குறிக்கப்பெறுகின்றன.

'இந்து இளைஞர்க்கு ஒரு சொல்' என்று ஒரு கட்டுரை உள் ளது. 1902 ஆகஸ்டு மாத இதழில் இடம் பெற்றுள்ளது. அதில் புகழ்பெற்ற நமது தேசத்தில் நடையுடை பாவனைகளில் மேற்கத்திய நாகரிகம் பரவுவது தடுக்கப்பட வேண்டும்; நாட்டில் சீர்திருத்தம் தேவை. ஸ்திரீகளை இப்படி அடைத்து வைப்பது பூர்வகாலங்களி லும் இல்லை. முன்பு, இராஜாக்கள் மனைவியரை வேண்டும் போது சபைக்கு அழைத்து வந்தனர்.

## பெண்ணடிமை

பெண்களை வீட்டிலேயே தனியே அடைத்து வைப்பதால், மூடத் தனம் வளரும்; கெட்ட குணங்கள்தான் விருத்தியாகும் என்கிறார்

ஆசிரியர் A. சுப்பிரமணிய அய்யர் (ப.140). மேலும் புருஷனும் ஸ்திரியும் எஜமானன் - அடிமை அன்று. ஆத்ம சினேகிதர்போல் உல்லாசமாய் சம்பாஷித்து வேலை செய்ய வேண்டும். இன்மொழியே மனைவியிடமும் தாயிடமும் பேசிட ஆண்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற காஷ்மீரப் பண்டிதர் ஒருவரின் கருத்தையும் குறிப்பிடுகின்றார் ஆசிரியர்.

புருஷர் - ஸ்திரீ பகிரங்கப் பேச்சு, துர்நடத்தைக்கு வழிவகுக்கும் என்பது தப்பு. வெளியே வந்தாலே கற்பு கெட்டுவிடும் என்பது மதியீனம். தங்களோடும் உறவோடும் மற்றவரோடும் பேச, பெண்களை அனுமதிக்கவேண்டும் என்று வலியுறுத்தியுள்ளார் திரு. சுப்பிரமணிய அய்யர்.

மனோரஞ்சினி - கலாமஞ்சரி எனும் தோழியர் இருவர் பேசும் போதும், 'மாதர் மனோரஞ்சனியின் மாண்பினையும் பெண் கல்வியையுமே பேசுகின்றனர். தகப்பன்மார் தங்கள் பெண்கட்கு நல்லொழுக்கமும் நற்புத்தியும் உண்டாகும் வண்ணம் நல்ல பத்திரிகைகள் வாங்கித் தரவேண்டும். ஆனால் மாமியார், நாத்திமார், பாட்டியார் போன்ற கர்நாடகக் கிழங்கள் வெறுமே இருக்குமோ? ஆயிரம் பேச்சும் ஏச்சும் சொல்லுமே' என்று அன்றைய சமுதாய நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றார் கா.ஸ்ரீ. கோபாலாச்சாரி யார் (1899 மார்ச்சு, ப.111).

'காலக்ஷேபம்' என்னும் தலைப்பில் மக்கள் வாழ்வும் நட்பின் சிறப்பும் பேசப்படுகின்றன.

வாழ்நாளை வீணாக்காமல் ஜனங்களின் ஐக்கிய வாழ்வுக்கு ஏதுவானவற்றைச் செய்தல், பொறாமைப்படுவோரை மாற்றுதல், துர் அபிமானிகளைத் திருத்துதல் முதலான விவேகமுடைய செயல்களைச் செய்ய வேண்டும் என்று அறிவுறுத்தப்படுகின்றது.

சிறந்த நட்பு, மனக்கவலையை நீக்கி, அறிவை விளக்கி, ஞானமூட்டி, சன்மார்க்கத்தில் புத்தியை நிறுத்தி, பொறாமை - ஆசை - கோபம் முதலியவற்றைப் போக்கி 'எக்காலத்தும் துணை நிற்கும்' என்று நட்பின் பெருமை பேசப்பட்டுள்ளது.

## குடும்பப் பராமரிப்பு

பெண்கல்விக்கு முதலிடம் தந்து மகிழ்ந்த 'மாதர் மனோரஞ்சனி' அடுத்து மனம் செலுத்துவது, குடும்பப் பராமரிப்புப் பற்றித்தான்.

குடும்பத்தைக் கவனித்தல், தொழில் செய்தல், வரவுக்குள் செலவு செய்தல், கடவுளை வணங்கிப் போஜனம் செய்தல், தாயின் அன்பு முதலியன பேசப்படுகின்றன. சுத்தம், சுகாதாரம், காற்றோட்டம், வெளிச்சம், நீரைக் காய்ச்சிக் குடித்தல் போன்ற அறிவியல் சார்ந்த - சுற்றுப்புறச்சூழல் சார்ந்த கருத்துகளும் சொல்லப்பெற்றுள்ளன. கோலங்கள் கோலாட்டம் என்பனவும் குறிக்கப்பெற்றுள்ளன.

தேசாபிமானம், பெருந்தன்மை, மரியாதை போன்ற நல்ல உணர்வு களைப் பிள்ளைகள் உள்ளங்களில் விதைத்திட வேண்டும்.

இவையே அன்றி, 'சமாசாரக் குறிப்பு' என்றொரு பகுதியை அமைத்து, இதில் பல்வேறு நாட்டுச் செய்திகளும் ஒவ்வொரு இத ழிலும் வெளியிடப் பெற்றன. பயனுள்ள செய்திகள் நிறைந்த உன்னத மான கருத்துப் பெட்டகமாக இப்பகுதி அமைந்துள்ளது எனலாம்.

சான்றாகச் சில காண்போம்.

'தேவராஜ பஹதூர் என்பவர் தர்மமொன்றுக்கு ரூ.50,000/- அளித்தார். அதில் வரும் 5% வட்டிப்பணம் சாதி மத வேறுபாடில்லா மல் கைம்பெண்களின் படிப்புக்காகப் பயன்பட்டது.'

'மிஸ். கார், மிஸ்ஸஸ் பிராண்டர் மாது எனும் இருவரும் இந்து மாதர்க்கும் மகமதிய விதவைகளுக்கும் கல்வி கற்பிப்பதில் பெருந் தொண்டாற்றினர்' (1903 ஏப்பிரல்).

'மைசூர் மகாராணி காலேஜில் இரண்டு பிராமணப் பெண்கள் F.A. தேர்வில் வெற்றிபெற்றனர். தேறிய தேதி முதல், மாதம் ரூ.150/- சம்பளம். இவர்கள் கீழ்வகுப்பு உவாத்திச்சிகளாக இருந்து கொண்டே, மதியம் B.A. படிப்பு படிக்க வசதி செய்துதரப்படும்' (1901 மே, பக். 58-59).

'இத்தாலி தேசத்து இராணியார் ஐரோப்பா கண்டத்திலுள்ள இராஜவம்சத்தார் எல்லோரிலும் மிக்க படிப்பாளி. ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், ஸ்பானிஷ் முதலிய 4 வகை தேசாந்திரப் பாஷைகள் படிக்க - எழுதத் தெரியும். கிரீக், ரோம காவியங்களில் விசேஷமான பாண்டித்தியம் உண்டு. இவ்விதம் எல்லா மாதர்களும் இருக்க வேண் டும். வீண் வம்புப் பேச்சு பேசுவதில் பிரயோசனம் என்ன?' (1902 சூலை, ப.95)

'பெல்ஜியத்தில் பசு மாடுகளுக்குக் காதில் கடுக்கன் போடுகிறார் கள். ஒவ்வொரு கன்றுக் குட்டிக்கும் 3 மாதம் ஆனவுடன் காதில் கடுக்கன் இருக்க வேண்டும் என்றொரு சட்டம் அங்கு உண்டு.' (1902 சூலை, ப.120).

'அமெரிக்கரே தங்கள் குழந்தைகட்கு மற்ற தேசத்தாரைக் காட்டிலும் அதிக விளையாட்டுக் கருவிகளைத் தருகின்றனர். ஒரு நாளைக்குச் சுமார் 1607 விதம்விதமான பொம்மைகள் செய்யப்படு கின்றன.' (1902 செப்டம்பர், ப.166)

'இந்துப் பெண்களில் பெரும்பான்மையோர் நெற்றியிலும் கை கால்களிலும் பலவிதமாய்ப் பச்சை குத்திக் கொள்கின்றனர். அதனால், பணச்செலவு, கஷ்டம் உண்டு. அன்பான தெய்வம் தரும் தேகத்தைக் கெடுப்பது அழகுக்காக என்கின்றனர். இது தவறு. தேகத்தை அலங்கரிக்க வேறு வழிகள் உண்டு. அது செவ்வையாய்ப் படித்து, கல்வியால் தங்களை அலங்கரித்துக் கொள்வதே' (1899 செப்டம் பர், ப.111).

'உலகில் கல்வியானது தாயைப்போல் ரக்ஷிக்கிறது. தகப்பன் போல் ஹிதத்தைச் சொல்கிறது. கீர்த்தியை எல்லா இடங்களிலும் பிரசித்தப்படுத்துகிறது. பணத்தைத் தருகிறதுமல்லாமல் சந்தோஷப் படுத்துகிறது. ஆகவே, கற்பகக் கொடி போன்ற வித்தையானது ஸ்திரீகளுக்கும் புருடர்க்கும் சகலத்தையும் தருகிறது' (1899 ஆகஸ்டு, ப.96).

## பொதுச் செய்திகள்

ஆண்களும் பெண்களும் நட்புணர்வோடு பழகுவதால் ஏற்படும் நன்மைகள் குறித்து, சுதேசமித்திரனில் வெளிவந்த கருத்துகளைத் தம் இதழில் வெளியிட்டுள்ளார் இராமசாமி அய்யர் (1899 நவம் பர், ப.144).

'தீர்க்க ஆயுளும் அதை அடையும் மார்க்கமும் சொல்லப் பட் டுள்ளது. (1900 பிப்பிரவரி, ப.185)

ரவிவர்மாவின் சித்திரக் கூடம் பற்றிய விளக்கம் உண்டு.

'மகாராணியாரின் இளம்பருவ நிகழ்ச்சி' எனும் தலைப்பில் வெளி வந்த செய்தி அறியத்தக்கது.

ஒருமுறை விக்டோரியா மகாராணியாரைப் புகைப்படம் எடுக்கச் சிலர் விரும்பினர். அப்போது அவர் நகை ஏதும் இன்றி, பட்டை மட்டும் அணிந்து கொண்டார். நகைகள் அணிந்து கொள்ளும்படி மற்றவர்கள் வற்புறுத்தியபோது, மகாராணி 'நகைகள் எனக்கு வேண்டாம், ஏனெனில் இந்த உருவத்தை என் அருமையான பிரஜைகள் யாவரும் பார்ப்பர். அப்போது என் பிரஜைகள் வீண் செலவு செய்வதை அது தடுக்கும்' என்றார். சொல்லும் செயலும் ஒன்றுபட்ட நிலை, பிரஜைகளின் மீது கொண்ட பேரன்பு என்பன இதன்வழி புலனாகின்றன (1899 டிசம்பர், ப.146).

## கதைகள்

அன்னபூரணி கதை (பல பாகங்கள்), சுகந்நியா நீதிக்கதைகள், மாயாபுரி விநோதக் கதை (பல பகுதி), சத்தியவதி கதை, இந்திய இரவுக் கதைகள் (பல), வைரமும் தவளைக் குஞ்சும், ஓணான் சம்சார வாழ்க்கை (சிறுவர்க்கு உரியது), ஒரு குரங்கின் கதை, ஆட் கொல்லி (பணம் பற்றி) கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை போன்றவை இந்த இதழ்களில் வெளிவந்த கதைகளுள் சிலவாகும்.

ஒரு வீட்டில் எட்டு வயது குழந்தைக்குச் சுகவீனமாயுள்ளது. உள்ளுக்குச் சாப்பிட மருந்தும் வெளிக்குத் தடவ நஞ்சு மருந்தும் தந்து செல்கின்றார் வைத்தியர். படிப்பறிவில்லாத தாய், மருந்துகளை மாற்றித் தந்தமையால், குழந்தை இறந்து விடுகின்றது. தன் பிழையுணர்ந்த தாய் துடித்துப் புலம்புகிறாள். பின், மீதி மருந்தைத் தானும் குடித்து இறந்து போகின்றாள். எனவே, 'பெண் பிள்ளைகளுக்குப் படிப்பித்துக் கொடுப்பது நல்லதல்ல எனும் பெரியோரே! புத்திரிகளுக்குக் கல்வியூட்டுங்கள்' என்று வேண்டுகிறார் இதன் ஆசிரியர் (ஒரு மாது). ஆசிரியர் பெயர் குறிக்கப் பெறவில்லை.

இது அன்னபூரணி என்னும் கதை வழி தெரியவரும் நீதி.

## சரித்திரங்கள்

சாவித்திரி சரித்திரம், மரகதவல்லி - சுந்தரவல்லி சரித்திரம், திருவள்ளுவ நாயனார் மனைவியாகிய வாசுகியம்மாளின் சரித்திரம், ராணி பவானி, லேடி ஜேன்கிரே, நூர்ஜஹான் சரித்திரம், அலெக்ஸான்டிரினா மகாராணியார் சரித்திரம், உத்தர ராம அம்மையார் சரித்திரம் போன்றவை இந்த இதழ்களில் இடம் பெற்றுள்ளன.

## மொழிபெயர்ப்புகள்

எலிசபெத் பாரெட் ப்ரௌனிங், விக்டோரியா மகாராணியாரும் அலக்ஸாண்டிரா மகாராணியாரும், மம்டாஜி மஹால் சக்கரவர்த்தினி, ஒரு கடும் பரீட்சை, இந்தியத் தாரகை, கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை என்பன ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்ட பகுதிகள்.

'தீ வழி' எனும் கட்டுரை, சமஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது.

ஷேக்ஸ்பியரின் 'சிம்பலின்' எனும் நாடகம் 'சிம்பலைன்' என்ற பெயரில் சில இதழ்களில் நாடக வடிவில் அமைக்கப்பட்டுள்ளது.

## விமரிசனங்கள்

'புத்தக வரவு' என்ற தலைப்பில் 'செந்தமிழ்' போன்ற மாதாந்திர இலக்கிய இதழ்கள் விமரிசிக்கப்பட்டுள்ளன (1902 சூலை, ப.119).

மரகதவல்லி, தமயந்தி, ரகுவம்சம் இவை பற்றிய விமரிசனங் களும் உண்டு (நடேச சாஸ்திரி சமஸ்கிருத மொழிபெயர்ப்பு) (1902 சூலை பக்.118 - 119).

## முடிவுரை

மலர்ந்து திக்கெட்டும் மணம் பரப்பி நிற்கும் மனோரஞ்சித மலர் போல், 'மாதர் மனோரஞ்சனி' எனும் இந்நறுமலரும் கட்டுரை, கவிதை, கதை, விமரிசனம், உரையாடல் எனும் பல்வேறு வண்ண இதழ்களை விரித்து, பெண் கல்வியின் பெருமை என்ற மணம் பரப்பி, பாரெங்கும் பரிணமிக்கின்றது.

REGISTERED NO. 361.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுருப்யோநம:

"சென்னை வேதாகமோக்த சைவசித்தாந்தசபைப்",

பிரசுரம்

# ஞானசாகரம்.

இது,

சமயசாத்திர தத்துவசாத்திர பௌதிகசாத்திர இலக்கண இலக்கியப்

பொருள்விரிக்கும் மாதாந்தப்பத்திரிகை.


பதுமம்-க. } சாலி. [illegible] பிலவ௵ [illegible] { இதழ்-க.


பொருளடக்கம்.




பத்திராதிபர். நாகபட்டினம் - வேதாசலம்பிள்ளை
சென்னைக் கிறிஸ்டியன்காலேஜ் தமிழ்ப்பண்டிதர்.



சென்னைப்
பண்டித மித்திர யந்திரசாலையில்
முத்திரிக்கப்பட்டது.

1902.

# ஞானசாகரம்

## நா. செயப்பிரகாசு

### மறைமலையடிகளார்

அரங்குகளில் ஆராயப்பெறும் அரிய செய்திகள் அழிந்து படா மலும் கருத்துக்கள் காற்றில் கரைந்து மறக்கப்படாமலும் காக்கப்பட வேண்டும். இவை நிலைத்த பயனைத் தரவும், நிறைந்த பயனைத் தரவும் அச்சிட்டுப் பதிப்பிக்கப்படுவது தேவையாகிறது. இத்தேவை யுணர்ந்து தேடித் தெரிந்து - தெளிந்த உண்மைகளைப் பதிப்பித்துப் பணியாற்றிய பெருமக்களில் மறைமலை அடிகளார் குறிப்பிடத் தக்கவர்.

தமிழின் வளமை, தமிழ்ச் சமய உண்மை, தமிழ்ச் சமுதாய மேன்மை என்ற மூன்று நிலைகளிலேயே அடிகளாரின் எழுத்தும் பேச்சும் இடை யறாப் பணிகளும் இருந்தன. பிறமொழிக் கலப்பும் பிறழ்ச்சிக்குக் காரணமாகும் வகையில் பின்பற்றப்படும் பிறரது பிழையான வாழ்க் கைப் போக்குகளும் பிற சமய ஆளுகையும் தமிழ், தமிழர், தமிழ்ச் சமயச் சிதைவுக்கும் சீரழிவுக்கும் காரணமாகிவிடும் என்பதுணர்ந்து அறிவார்ந்த நிலையில் ஆய்வு முயற்சிகளில் ஈடுபட்டவர் அடிகளார்.

### ஞானசாகரம்

இலக்கிய நெஞ்சத்தவராயினும், சமய சாத்திர ஈடுபாட்டாளரா யினும், தாம் முயன்று கண்ட உண்மைகள் முழுப் பயன்தரும் வகையில் அவற்றைப் பதிப்பிக்கும் பணியிலும் ஈடுபட்டார். மறைமலை அடிக ளாரின் தொடக்ககாலத் தொண்டு முயற்சிகள் கல்விப் பணி சார்ந்த

தாகவும், சொற்பொழிவு நிலையினதாகவும் அமைந்திருந்தன. மாண வர்க்குப் பயன்படும் வகையில் அவர் செய்த ஆராய்ச்சியுரைகளும், குறிப்புகளும், ஆலயங்களில் அரங்குகளில் அவர் ஆற்றிய உரை களும் கட்டுரைகளாயின. தனது கட்டுரைகளையும், பிறரது கட்டு ரைகளையும் வெளியிடும் வகையில் அடிகளார் 1902இல் 'ஞான சாகரம்' திங்களேட்டைத் தொடங்கினார்.

## முகப்புப்பக்கம்

முகப்புப் பக்கமே முழு விவரங்களைத் தரும் ஒரு விளக்கப்படம் போல விளங்குதல் ஞானசாகரத்தின் சிறப்பாகும். தலைப்பில் சமயக் குறியீடும் - சிவமயம் - திருச்சிற்றம்பலம் என்னும் சமய நம்பிக்கை யின் வெளிப்பாடும் - ஸ்ரீஜ் ஞாநஸம்பந்த குருப் யோ நம என்னும் சம யாசிரியப் பற்றும் மதிப்பும் - 'சென்னை வேதாகம மோக்த சைவ சித் தாந்த சபைப் பிரசுரம்' என்னும் சமய அமைப்பும் வெளியீடும் புலப் படும் வகையில் - மேற்பகுதி அமைந்துள்ளது. இதழின் பெயரான 'ஞானசாகரம்' என்பது பெரிய எழுத்துக்களில் அமைந்துள்ளது (இதழ் க. பதுமம் க). பின்னர் வந்த இதழ்களில் அழகிய மலர்க் கொடி களுக்கிடையில் அமர்ந்திருக்கும் கிளி பார்த்து மகிழும் பாங்கில் இதழின் பெயர் இன்னும் பெரிதாக அமைந்திருக்கிறது.

நடுப்பகுதியில் இடைக்கோடுகளுக்கிடையில் அழகிய கோடு களான அடைப்புக் குறியீடுகளுக்குள் பதுமம், இதழ் பற்றிய குறிப்பு களும் அவற்றுக்கிடையேயான மையப் பகுதியில் தமிழ் - வடமொழி ஆண்டுகள் - திங்கள் - ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன.

## பொருளடக்கம்

அடுத்த பகுதியில் பொருளடக்கம் என்ற தலைப்பில், ஞான சாகரம் - கௌராபிமான சீலர் - வேதாகமோக்த சைவ சித்தாந்த சபை - சோம சுந்தர விஜயம் - சகலோபாசனை (Symbolism) - தமிழ் வட மொழி யினின்று பிறந்ததாமா? - தமிழ்ச் சொல்லுற்பத்தி சமாசாரக் குறிப்பு கள் - என ஒன்றன் கீழ் ஒன்றாக முதல் இதழில் வெளியாகியுள்ளது. இதனை மேலும் மேம்படுத்திப் பின்னர் வந்த இதழ்களில்,

திருக்குறட் கத்திய ரூபம் - சுப்பிரமணியப் பிள்ளை

ஆகமம் - அ. சதாசிவன்

இலக்கியவாராய்ச்சி - அ. குமாரசுவாமிப் பிள்ளை

வடமொழியிலுள்ள தமிழ்ச் சொற்காரணம் - மாகறல் கார்த்திகேய முதலியார்

மெய்ந்நல விளக்கம் - நல்ல தம்பிப் பிள்ளை

எனக் கட்டுரையாசிரியர்களின் பெயர்க்குறிப்புகளும் அமைந்துள்ளன.

## வெளியீட்டு நோக்கம்

ஞானசாகரம் வெளியீட்டு நோக்கமும் தெளிவுறக் குறிப்பிடப் பட்டுள்ளது. 'சமய சாத்திர, தத்துவ சாத்திர, இலக்கண இலக்கியப் பொருள் விரிக்கும் மாதாந்தரப் பத்திரிகை' என, சமயம் - தத்துவம் - அறிவியல் - இலக்கண இலக்கியம் என்னும் ஐந்தும் இதழின் உட் பொருள்களாக உள்ளமை பெறப்படுகிறது. ஆசிரியரும் அதிபரும் எனக் குறிக்கும் வகையில் - பத்திராதிபர் நாகப்பட்டினம் வேதாசலம் பிள்ளை - சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் - என அடிகளாரின் ஊர், பணியிடம் ஆகிய செய்திகளும் குறிக்கப்பட்டுள் ளன. சென்னைப் பண்டித மித்திர யந்திர சாலையில் (சி.என். அச்சுக் கூடம்) முத்திரீகரிக்கப்பட்டது - 1902. இதழின் விளக்கம், பொருள டக்கம், ஆசிரியர், பதிப்பிடம், ஆண்டு என்பன போன்ற அனைத்துச் செய்திகளையும் இதழ் முகப்பிலேயே குறிப்பிடும் ஞானசாகரத்தின் இதழியல் உத்தி சிறப்பானதாகும்.

மேலும், வருட சந்தா இரண்டு ரூபா - தனிப்பிரதி நாலணா என்ற விவரமும்

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீய தெலா, மர னாமமே—
சூழ்க; வையக முந்துயர் தீர்கவே

என்ற இதழின் வேண்டுதலுடன் கூடிய விழைவும் அறியப் பெறு கின்றன.

'பாச ஞான, பசு ஞானவியல்பெல்லாம் எஞ்சாது விளங்கக் காட்டி, அம்முறையாற் பதிஞான மெல்லாம் புலப்படுத்தும் ஒழுகலாறுடை யது ஞானசாகரம் எனப் பெயரிய இப்பத்திரிகையாமென' அடிகளாரே

(ஞான.பது.1, இத.1, ப.2) குறிப்பிடுகிறார். தனித்தமிழ் உணர்வு அரும்பி மலர்ந்ததும் முதன்மை நோக்கமாயிருந்த சமயத் தொண்டு டன், 'ஞானசாகரம்' அறிவுக் கடலாகி, செந்தமிழ் மொழிவளம் அளாவுதலும் சித்தாந்த சைவ உறுதிப் பொருண்மை தேர்தலும், மாணாக்கர்தம் தமிழ்க் கல்வியும் புலமையும் சிறத்தலும் இதழின் நோக்கமாக அமைகிறது. (ஞா.பது.1, இதழ் 1, ப.3.)

## பெயர்ப்பொருத்தம்

இதழின் பெயர்ப்பொருத்தத்தை அடிகளார் விளக்க முற்படும் பொழுது, 'சமயக் கோட்பாடுகளை அனைத்து வகையானும் ஆராய்ந்து, கடல் போல் உண்மைகளைக் காட்டுதலானும், உள்ளமெனும் கொள் கலத்தில் கொள்வார்க்கு அறிவமுது ஊட்டுங் கடலாக விளங்குத லானும், ஆன்ம அறிவினால் எல்லையற்ற பெருங்கடலாக விளங்குத லானும் இவ்விதழ் அறிவுக்கடல் என்னும் பெயர்த்ததாயிற்று' எனக் குறிப்பிடுதல் நினைக்கத்தக்கதாகும்.

வணிக நோக்கமில்லாத - விளம்பரங்கள், வேறு உலகியல் செய்தி கள் ஏதுமில்லாத முழுக்க முழுக்கச் சமயம், மொழி (இலக்கண இலக்கியம்), வரலாறு, வாழ்வியல், ஆய்வுக் கட்டுரைகளைக் கொண்ட தாகவே அறிவுக்கடல் அமைந்திருந்தது. அறிஞர்களின் அறிவு விளக்க ஏடாக மட்டுமே அறிவுக்கடல் விளங்கியது. அடிகளாரின் ஆசிரிய அன்பும் இவ்விதழ் வழி வெளிப்பட்டது. ஞானசம்பந்தனா ரைத் தன் சமய குருவாக அடிகளார் கொண்டிருந்ததும், தன் ஆசிரியர் சோமசுந்தர நாயகரின் வரலாற்றைச் சிறிது சிறிதாக எழுதி வெளியிட அடிகளார் எண்ணியிருந்ததும் வெளிப்படுகின்றன.

பழந்தமிழ் - தமிழர் எண்ணங்களையும் இயல்புகளையும் இற்றை மாந்தரின் சிந்தைக்குச் சிறப்புற எடுத்துச்சொல்லி எட்டச் செய்கிற போது, வாழ்வு நெறிகள் சிறக்கும் என்பதும் பல்துறைச் சிக்கல் களுக்கும் பக்குவமான தீர்வுகள் கிட்டும் என்பதும் அடிகளாரின் நம்பிக்கைகள். இவற்றை வெளிப்படுத்த ஏற்ற வழி ஏடுகள் என்பதே அடிகளாரின் முடிவு.

## ஆங்கில ஏடு

உலக அரங்கில் நம் உயர்நிலை உணரப்படவும், உறவு நிலை யில் சில தீர்வுகள் அறியப்படவும் வேண்டும் என்ற நிலையில்

அடிகளார் அறிவுக் கடலின் (1931) ஆங்கில ஏடு (The Ocean of Wisdom) பல்லாவரத்திலிருந்து வெளியானது. அடிகளார் தம் வாழ்நாள் நெடுகக் கற்றறிந்த - ஆய்ந்து அறிந்துணர்ந்த உண்மைகளை அயல வரும் இன்றைய இளம் தலைமுறையினரும் அறிந்துணரச் செய்வதே தம் இதழ்ப்பணியின் நோக்கம் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

ஞானசாகரம் ஏட்டின் பல்துறை உட்பொருள்கள், ஆய்வு முடிவு கள், ஆங்கில நடை எனப் பலவும் திறஞ்சான்றதாக வெளிப்படுதல் உண்மை:

> Now I venture to publish my life long studies of Tamil language, literature, philosophy, religion and their history in English, for entertain a strong belief that the English knowing world will be greatly benefited and many unsolved problems in life solved, when it comes to know of them" - (E) Vedachalam - The Ocean of Wisdom - Vol.1, No.1, p.4, 1935.
>
> `It is our strong belief that when the thoughts, the ideas and the sentiments of the ancient Tamil reach the cultural minds of the present age, they will not only open for them new visions of life but will also furnish them the key to the solution of many vital problems that remain still unsolved in the region of history, science, philosophy and religion' - (E) Vedachalam - The Ocean of Wisdom, Vol.1, No.1, p.8, 1935.

அடிகளாரை பதிப்பு ஆசிரியராகக் கொண்டு ஆங்கிலத்தில் வெளியான இரு ஆங்கில ஏடுகளும் ஞானசாகரத்தின் கருத்துக் களை அடியொற்றியே அமைந்திருந்ததையும் காண முடிகிறது.

## கட்டுரைகள்

ஞானசாகரம் பெரும்பாலும் அடிகளாரின் எண்ணங்களையும் எழுத்துக்களையும் கொண்டதாகவே விளங்கியது. சொற்பொழிவுகளுக் கும், நூல் முயற்சிகளுக்கும் இடைப்பட்டதான கட்டுரைகளைக் கொண்டதாகவே அமைந்திருந்தது. ஞானசாகரம் முதல் தொகுதியில் (1902) வெளியான மறைமலை அடிகளாரின் கட்டுரைகளாவன:

சோமசுந்தர விஜயம் - சகலோபாசனை - தமிழ் வடமொழியி னின்று பிறந்ததாமா? - தமிழ்ச் சொல்லுற்பத்தி - சைவமும் சைவர் நிலையும் - உள்ளது போகாது இல்லது வாராது - தொல்காப்பிய முழு முதன்மை சமயப் பொதுமை - இலக்கணவாராய்ச்சி - நெஞ்சறி வுறுத்தல் - தமிழ் மிகப் பழைய மொழியாமென்பது - சுவேதாசுவத ரோப நிடத மொழிபெயர்ப்பு - மாணிக்கவாசகர் கால நிருணயம் - சுதேச பாஷாப்பியாச நிவர்த்தி - நாலடியார் நூல் வரலாறு - இறையனாரகப் பொருள் வரலாறு - திருக்குறட் கத்திய ரூபம் - முகவுரை - முனி மொழிப் பிரகாசிகை - பரிமேலழகியாருரை யாராய்ச்சி - முருகவேள் கண்ட காட்சி - சாகுந்தலம் - நாகநாட்டரசி அல்லது குமுதவல்லி - முருகவேள் அறிந்த படைப்பின் அற்புத தோற்றங்கள் - முருகவேள் கனவிற் கண்ட துன்ப மாலை - திருக்குறள் உபய தீபங்கள் - பண்டைக் காலத் தமிழரும் ஆரியரும் - சிவஞான போதம் - மெய்கண்ட தேவர் - அத்துவித சொரூபம் - தமிழ் நான்மறையின் தெய்வீக உண்மை - சிவ ராஜ யோகம் - முன்பனிக் கால உபந்நியாசம் - இந்து சமய உண்மை கள் - சமரச சன்மார்க்கம் - சைவ சமய மாட்சி - அமைதி (யோக நித்திரை) - மரணத்தின் பின் மனிதர் நிலை - கோகிலாம்பாள் கடிதங் கள் - மக்கள் நூறு வருஷம் உயிர்வாழ்தல் எப்படி - மனித வசியம்/எண் ணம் - தமிழ் மொழி இப்போதுள்ள நிலைமை - சீவகாருணியம் - சைவ சமய பரிபாலனம் - சிறுதேவதைகட்கு உயிர்ப்பலி இடலாமா? - தொலை விலுணர்தல் - ஆலய வழிபாடு - பெண் மக்கள் கடமை - வியாபாரக் கூட் டுறவு - தமிழ்த்தாய் - கடவுளுக்கு அருளுருவம் உண்டு - தமிழில் பிற மொழிக் கலப்பு - அறிவு நூற் கல்வி.

ஞானசாகரத்தின் வழி வெளியான இக்கட்டுரைகள் வாயிலாக, அக்காலச் சூழல், மொழி நிலை, எதிர்பார்ப்பு ஆகிய பல்துறைச் செய் திகள் பலவும் அறிய வருகின்றன. மொழிநலமும், அறிவு வளமும், சமயத் தெளிவும் சமுதாய மேம்பாடும் கருதும் கட்டுரைகளாக அவை விளங்குதல் வெளிப்படை. இவ்வாறே பிற - சமகாலச் சான்றோரது கட்டுரைகளுக்கும் இவ்விதழ் இடம்தந்து சிறந்துள்ளதையும் காண முடிகிறது. மகளிர் கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன.

1. சமஸ்கிருத பாஷையிலுள்ள தமிழ்ச் சொற்களாவன - மாகறல் கார்த்திகேய முதலியார்
2. இறையனாரகப் பொருளுரை வரலாறு - மு. இராகவையங்கார்

3. ஆனந்தக் குற்றம் -சோழவந்தான் அ. சண்முகம் பிள்ளை
4. மெய்ந்நல விளக்கம் - டி. நல்லதம்பிப் பிள்ளை
5. தமிழ் வேதபாராயணத் தடை மறுப்பு - மதுராபுரிவாசி சுப்பிரமணிய பிள்ளை
6. வடமொழியிலுள்ள தமிழ்ச் சொற்களுக்குக் காரணம் - மாகறல் கார்த்திகேய முதலியார்
7. திருக்குறட் கத்திய ரூபம் - சுப்பிரமணிய பிள்ளை
8. ஆகமம் - அ. குமாரசாமிப்பிள்ளை
9. ஹடயோக பிராணாயாமம் - சந்தான கிருஷ்ண பிள்ளை
10. ஆகாரம் - சீனிவாச நாயுடு
11. சிவபக்தி - நாகை நீலாம்பிகை
12. அழியாச் செல்வம் - நாகை நீலாம்பிகை

மொழி - சமயம் - தத்துவம் சார்ந்த கருத்தடங்கிய கட்டுரை களாகவே அவற்றுள் பெரும்பான்மை விளங்கின.

**நடை**

கருத்துக்களின் தெளிவுக்கும் வெற்றிக்கும் கட்டுரைகளின் கட்டமைப்பும் நடையும் இன்றியமையாதன. ஒரு இதழின் வெற்றிக் கும் அதன் கருத்தாழம், குறிக்கோள், கட்டமைப்பு, நடை, வெளிப் பாட்டுத்திறன் ஆகிய அனைத்தும் தேவை. ஞானசாகரம் இதழின் தொடக்ககால நடை, இன்றைய சூழ்நிலைகளையொட்டியே அமைந் திருந்தது. வடமொழியின் படிப்பும் பிணைப்பும் ஓங்கியிருந்த நிலை யில், மொழிக்கலப்பு சமய - இலக்கியப் படைப்புகள் அனைத்திலும் மிகுந்திருந்தமையை ஞானசாகரம் வழி அறிய முடிகிறது. தமிழ் - தமிழ்ச் சமய ஈடுபாடு இருந்தாலும் தொடக்கத்தில் கருத்து வெளிப் பாட்டு நடையில் வடமொழியின் தாக்கம் மிகுந்து இருந்தது. காலப் போக்கில் தமிழின் தனித்தன்மை, தனித்தியங்கும் வல்லமை, தமிழ்ச் சமய உண்மை ஆகிய அனைத்தையும் மெய்ப்பிக்கும் பொறுப்பு அடி களாருக்கு அமைந்ததைச் செயல்பட ஞானசாகரம் -அறிவுக்கடலாக அமைந்து உறுதுணையாயிற்று. அதன் தொடக்க கால நடை :

கௌராபிமான சீலர் தொகை பெருக்க முறுதலே பத்திரிகைக் கும் பலமாதலால் பிரபுக்களாயுள்ள கனவான்களெல்லாம் இதனைக்

கௌரவித்தாதரிப்பார்களென்று விஞ்ஞாபனம் செய்து கொள்கின்றோம். (ஞா.ப.1, இதழ்1, ப.4.)

## தனித்தமிழ்

தனித்தமிழ் உணர்வு தலைதூக்கிய பின்னர், 'என்னே!... என்னே!.. நம்மதீனார் செயலிருந்தவாறு.. சைவ சமய அன்பர்களே! இனியேனும் இங்ஙனம் நாட்கழியாது ஞானநூலாராய்ச்சி செய்து ஈசுரனை உண்மையென்பான் உபாசிப்பதற்கு மடிதட்டி எழுங்கள்' எனத் தமிழ்நடை நலம் கொண்டதாக அறிவுக்கடல் அமைந்தது. தனித்தமிழில் பல்துறைச் செய்திகளையும் படைப்புகளையும் எழுதிக் காட்டமுடியும் என நிறுவிக் காட்டியது அறிவுக் கடல். பல்துறைப் படைப்புக்கும் அறிவுக்கும் தெளிவுக்கும் நடுநிலை ஆய்வுக்கும் தமிழ் நடை தடையல்ல; தக்க துணையாவதே என்பதும் மெய்ப்பிக்கப்பட்டது.

## மொழி நலம்

அரிய செய்திகளையும் ஆழமான உண்மைகளையும் அழகிய தமிழ்க் கல்வியால் அறிந்துணர முடியும் ஆய்ந்துணர முடியும் அவ்வாறே உணர்த்தவும் முடியும் என்பது அறிவுக் கடலின் கருத்தாகும். அதே நேரத்தில் பன்மொழிப் பயிற்சியையும் முயற்சியையும் ஆற்ற வேண்டுமென்பதையும் அது வலியுறுத்துகிறது.

தமிழும் வடமொழியும் தம்முள் ஒரு சிறிதும் இயைபில்லா இரு வேறு மொழிகள் என்பதும், வடமொழி விலங்குகளின் ஒலிக் குறிப்பியற்கைக் காரணங்கொண்டு விளங்குவதென்பதும் தமிழ் செஞ்சொல் தோற்றமுற்றெழுந்த தொன்மொழி என்பதும் (அறிவுக் கடல்) ஞானசாகரக் கருத்தாகும். (ஞா.மு.தொ. பக்.32, 22,4)

## நூல் நலம்

பழந்தமிழ் நூல் நலங்களையும், நுட்பங்களையும் ஆய்வுப் போக்கில் அடிகளார், கட்டுரைகள் வடிவில் ஞானசாகரத்தில் வெளிப்படுத்தியுள்ளார்.

நூலாசிரியர் வரலாறுகளையும், நூல் நுவல் பொருள்களின் உண்மைப் பொருள்களையும் ஞானசாகரக் கட்டுரைகள் நிறுவுகின்றன.

கால ஆய்வுகளையும், கருத்தாக்கங்களையும் ஞானசாகரம் தன் கடமை யாகச் செய்திருக்கிறது.

இவ்வுலகம் ஒருங்கு ஒப்பிய உறுதியுரையினைத் தெரிந்து விளங்கிய சான்றோர் திருவள்ளுவரென்றும், அவரது காலம் கி.மு.95 என்றும் (ஞா.பது.2, பக். 18, 64) உரையாசிரியர் திறன் குறித்தும் அவர்தம் கருத்துக்களின் வன்மை, மென்மை குறித்தும் கட்டுரைகள் அமைந்துள்ளன.

'தொல்காப்பிய முழுமுதநூலின்கட் கலவைகாண்டல் ஒருவாற் றானும் பொருந்துமாறில்லை' (ஞா.பது.1, பக்.16, 17) எனத் தொல் காப்பியத்தின் தனித்தன்மை குறித்தும், 'நாலடி நானூறு முன்னோரும் பின்னோரும் மக்களுக்குறுதிப் பொருள்களான அறம் பொருளின்ப வீடுபேறுகளை விரித்துணர்த்த செய்யுட் டொகுதியாம் (ஞா.பது.1. இத.1. ப.3) - என நாலடியாரின் இயல்பு குறித்தும் ஞானசாகரக் கட்டுரைகள் அடிகளாரின் கருத்துக்களை வழங்குகின்றன.

'அவரவர்க்குரிய மதிப்புப் பற்றியே அவரவரைப் பாராட்டுவ மல்லது வேறு கூறக் கடமைப்பட்டிலோம்' (ஞான. பது.1, இதழ் 8, ப.12) என்றவாறு, ஞானசாகரம் இதழ் இயல்பும், தகுதியும் அதன் ஆசிரியரான அடிகளாரின் இயல்பையும் தகுதியையும் அடியொற்றி யதாகவே அமைந்திருந்தது.

## இன நலம்

தமிழினம் வரலாற்றுக்கு முந்திய காலத்திலேயே அறிவார்ந்த பண்பாட்டு மேன்மை நிலையுற்றிருந்ததென்பதும் தமிழ் நான்மறை கள் வடமொழி நான்மறைகளைக் காட்டிலும் மேன்மை மிக்கவை யென்பதும் நமது இனிய செந்தமிழை மறப்பதும் அதனைப் பயிற்சி செய்யாமல் கைவிட்டிருப்பதும் நமதுயிரையே நாம் அழிப்பதாய் முடி யும் என்பதும் (ஞா.பது.3, ப.81, ப.4) ஞானசாகரம் வழி வெளிப் படுவனவாம்.

'தமிழுக்கும் தமிழுணர்ந்தாருக்கும் அவர் செய்யும் நற்செயல் களுக்கும் தமிழ் மக்கள் விரைந்துதவ முன்வரவேண்டும். வெற்று முயற்சிகளில் எண்ணங் கொண்டு வெறும் புகழ் நாடிக் காலத்தை வீணாக்குதல் கூடாது. நல்லற நற்செயல்களில் முயன்று நின்று,

தமிழ் நாட்டின் நற்புகழ் ஓங்க நாளும் முயல வேண்டும்' (ஞா.பது.3, ப.22) தமிழ் மொழியின் தோற்றம், வளம், தூய்மை முதலான நலன் களையும், தமிழ்ப் பண்பாட்டுத் தொன்மை மேன்மைகளையும், தமிழ் மறைகளின் மாட்சிகளையும், தமிழர் நிலைகளையும், கடமைகளை யும் தக்க சான்றுகளோடும் துணிவோடும் ஞானசாகரம் எடுத்தியம்பி யுள்ளது.

முயற்சியும் அறிவும் உடையவர்கள் கருத்து வைத்தால் எத் தகைய புதுப் பொருள்கட்குந் தமிழிலேயே பெயரமைக்கலாமென்ப தும் (ஞா.பது.8, ப.8) உண்மைப் பொருளுணராமல், விருப்பு வெறுப் பின்பால் பிழைபடப் போலி உரையெழுதித் தமிழின் பெருமையைச் சிதைக்க முற்படும் போலியுரைகாரரை முறியடிக்கும் முயற்சியாக நற்றமிழ்ப் புலவர் ஒருங்கு கூடி, உண்மைப் பொருள் விளங்க உரை வகுக்க வேண்டுகிறது ஞானசாகரம் (ஞா.பது.1, இதழ் 8, பக்.3,4).

## சமய நலம்

ஞானசாகரம் இதழ்க் கட்டுரைகள் சமயம், தத்துவம் சார்ந்த கருத்துக்களையும் கட்டுரைகளையும் கொண்டிருந்தன. தாம் இயற் றும் சைவத்தை மட்டுமே அதன் உண்மை கூறி உயர்த்திப் பேசியும், மற்றதைத் தாழ்த்திப் பேசாமலும் ஞான சாகரம் இதழியல் நாகரிகம் கொண்டதாக விளங்கியது. சிவம் இயற்கையாக விளங்குமிடம் அனற்பிழம்பு, சைவ சித்தாந்தம் மட்டுமே இந்து சமயம் என்னும் பெயர்க்குரியதாகும் எனத் தம் சமயச் சார்பு போற்றி, 'ஏனைச் சமயங் களையும் அச்சமயங்கள் வழிபடுந் தெய்வங்களையும் இகழ்ந் துரைக்கின்றேமென்று நினையாதீர்கள். அங்ஙனம் நாம் ஒரு காலத் துஞ் செய்யோம்' (ஞா.பது.1, மு.தொ. ப. 236; பது.4,பக்.3,4, 26, மு.தொ.ப.3) என்பன ஞானசாகரத்தின் சமய உணர்வுகளும் உண்மை களுமாம்.

அடிகளாரின் பல்துறைப் படைப்புகளும், ஆய்வுகளும் ஞான சாகரத்தின் வழியே வெளியாயின. 'இனி இரண்டாம் பதுமம் முதற் கொண்டு நம்முடைய கையொப்ப நண்பர்கள் எளிதில் படித்துணர்ந்து மகிழ்ச்சியடைதற்குரிய இரண்டோர் விடயங்களைத் தொடர்ச்சியாக எழுதக் கருதியிருக்கின்றோம். அவை சாகுந்தல நாடக மொழி பெயர்ப்பும் ஒரு புதுக்கதையுமாம் (குமுதவல்லி நாக நாட்டரசி) என

அடிகளார் ஞானசாகரத்தில் கூறியுள்ளது குறிப்பிடத் தக்கதாகும் (பது.1, இதழ் 11-12, ப.4).

## நூல் அடிப்படை

ஞானசாகரம் இதழில் அடிகளாரின் திருவொற்றியூர் முருகர் மும்மணிக் கோவையுரை, சோமசுந்தரக் காஞ்சி, பண்டைக் காலத் தமிழரும் ஆரியரும், தொலைவிலுணர்தல், மனித வசியம், யோக நித்திரை, மக்கள் நூறாண்டு உயிர் வாழ்க்கை, சிவஞானபோதம் ஆகிய நூற்கட்டுரைகளும் அவை தொடர்பான கருத்துக்களும் அவ்வப் போது வெளிவந்துள்ளன.

## உறுப்பினர்

ஞானசாகரம் இதழில் ஆர்வங்காட்டி அதன் உறுப்பினராயிருந் தவர்கள் பம்பாய், கல்கத்தா, இரங்கூன், தென்னாப்பிரிக்கா, கொழும்பு, பர்மா ஆகிய பல்வேறு இடங்களிலும் இருந்ததை அடிக ளாரின் கையெழுத்துப்படிவழியே அறிய முடிகிறது. ஞானசாகரம் உறுப்பினர் எண், முகவரி, அவர்தம் தொடர்பான செய்திகள் ஆகிய அனைத்தையும் குறிப்புகளாக அடிகளார் குறித்து வைத்துள்ளார்.

ஞானசாகரத்தின், அரிய செய்திகளையும் அழகிய நடை இயல்பு களையும் விழுமிய கலை நலங்களையும் மு. இராகவையங்கார் பாராட்டியுள்ளதும் இங்கு நினைக்கத்தக்கதாகும்.

உ
குமரன் துணை.

# விவேகபாநு.

ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

வால்யூம் 4 } 1905ஆு ஏப்பிரல்மீ { புத்தகம் 4

## விவேகபாநுவைப்பற்றிய அபிப்பிராயம்.

சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் மகா வித்துவான். ப்ரும்மஸ்ரீ வே. சாமிநாதையர் அவர்கள் எழுதியது.

வே. சாமிநாதையர், உ சென்னப்பட்டணம்.
தமிழ்ப்பண்டிதர்,
ரஸிடென்ஸி காலேஜ். 27—3—1905.

### அபிப்பிராயம்.

சேற்றூர் ஜமீனைச் சார்ந்த பாம்பரைத் தமிழ் வித்துவானு மகா-ா-ா-ஸ்ரீ மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்கள் மிக்க யற்சியுடன் சில வருடங்களாக மதுரை மாநகரில் வெளிப்படு வரும் விவேகபாநு என்னும் பத்திரிகையை ஒவ்வொரு மாத மும் நான் படித்து வருவதுண்டு.

ஷை பத்திரிகையில் அவ்வச்சமயங்களில் எழுதப்படும் ஆராய்ச்சிகள், சிலருடைய சரித்திரச் சுருக்கங்கள், பலவ க் கலைகளின் குறிப்புக்கள், மதசம்பந்தமான விஷயங்கள், ராசாங்கச் செய்திகள், பதார்த்த குணக் குறிப்புக்கள், விசே செய்திகளின் தொகுதிகள் முதலியவற்றுள் ஒவ்வொன் நல்ல நடையில் யாவருக்கும் விளங்க எழுதப்படுதலின், படிக் பொழுது இடையில் கீழே வைத்துவிட்டு வேறொன்றைப் பார்க்க ம் வருவதில்லை, இங்ஙனம் பல விஷயங்களையும் புலப்

# விவேகபாநு

## மா.ரா. அரசு

தமிழ் இதழியல் வரலாற்றில் சில இதழ்களுக்குத் தனித்த வரலாறு உண்டு. அவை தொடர்ந்து பல ஆண்டுகள் வெளிவந்து சாதனை படைத்தவை. உரிமையாளரும் ஆசிரியரும் மாறினாலும் இதழ் தொடர்ந்து வெளிவரும். ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒவ்வொரு விதமான தனித்தன்மையுடன் அவ்விதழ் சிறப்புப் பெற்றிருக்கும். சுதேசமித்திரன், லோகோபகாரி, சக்ரவர்த்தினி, தினமணி, தமிழ்நாடு முதலியன இந்த வகையில் குறிப்பிடத்தக்க இதழ்களாம். இந்தப் பட்டியலில் இடம்பெறத்தக்க மற்றொரு இதழ் விவேகபாநு. இவ் விதழ் மூன்று காலகட்டங்களில் வெவ்வேறு இடங்களிலிருந்து வேறுவேறு உரிமையாளர், ஆசிரியர் ஆகியோர் பொறுப்பில் வெளி வந்தது. ஒவ்வொரு காலகட்டத்திலும் அதன் அடிப்படை நோக்கம் வேறாக இருந்தது. மூன்று காலப்பகுதிகளில் வெளிவந்த விவேக பாநுவின் இரண்டாவது கட்டம் குறிப்பிடத்தக்கது; வரலாற்றுச் சிறப்பு மிக்கது. இக்காலகட்டத்தில் விவேக பாநு மதுரையில் இருந்து வெளிவந்தது. அதனால் 'மதுரை விவேக பாநு' என்று அழைக்கப் பட்டது. மதுரை விவேக பாநுவே இங்கு ஆய்வுக்கு உரியதாக அமை கின்றது.

### விவேகபாநு – முதல் கட்டம் – குற்றாலம், தூத்துக்குடி

முதல்கட்ட விவேகபாநு 1900 செப்டம்பரில் தொடங்கப் பெற்ற திங்கள் இதழாகும். இதன் முதல் ஆசிரியர் கணபதியானந்த சுவாமிகள்.[1]

> லௌகீகத்திற்கும் வைதிகத்திற்கும் அவசியமான ஒழுக்கங் களை எடுத்துப் போதிக்கும் பத்திரிகை ஒன்றேனும் தற்காலத் தில் பிரசுரிக்கப்பட்டுவராத நமது ஜில்லாவில் அத்தகைய பத்திரிகையொன்று வெளிப்படுத்த அதிக விருப்பமுற்றிருந்த எமக்கு அதைக் கொண்டு முடிக்கும் சக்தி சிறிதும் இன்றா யினும் சில அறிஞர்கள் விஷயதானம் செய்வதாய் வாக்களித்து எமக்கு ஊக்கத்தை உண்டு பண்ணினமையின் இப்பத்திரிகை யைப் பிரசுரம் செய்ய ஒருவாறு துணிந்தனம்.[2]

முதல் இதழில் வெளியான மேற்கண்ட அறிவிப்பு முதல்கட்ட விவேகபாநுவின் தோற்றத்திற்கான அடிப்படையைப் புலப்படுத்தும். லௌகீகத்திற்கும் வைதீகத்திற்கும் தேவையான ஒழுக்க நெறி களைப் போதிக்கும் ஆன்மிக இதழாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டது தொடக்ககால விவேகபாநு.

குற்றாலத்தில் ஆசிரமம் அமைத்து ஆன்மிகப் பணிகளில் ஈடு பட்டிருந்த கணபதியானந்த சுவாமிகள் என்பவர் விவேகபாநுவின் முதல் ஏழு இதழ்களுக்கு (செப்டம்பர் 1900 - மார்ச்சு 1901) ஆசிரிய ராக இருந்தார். சீடர்களின் வேண்டுகோளை ஏற்றுத் திருத்தலப் பய ணம் மேற்கொள்ள விரும்பிய இவர் 1901 மார்ச்சில் விவேக பாநுவின் ஆசிரியர் பொறுப்பில் இருந்து விலகிக்கொண்டார்; இவருக்குப் பிறகு வள்ளிநாயக சுவாமிகள் என்பார் பின் ஐந்து இதழ்களுக்கு (ஏப்பிரல் 1901 - ஆகஸ்டு 1901) ஆசிரியரானார்.[3]

முதல்கட்ட விவேகபாநு 1900 செப்டம்பர் முதல் 1901 ஆகஸ்டு முடிய தொடர்ந்து ஓராண்டு வெளிவந்தது. அத்துடன் நிறுத்தப்பட் டது.[4] கணபதியானந்த சுவாமிகள் ஆசிரியராக இருந்த காலத்தில் குற்றாலத்தில் இருந்தும் வள்ளிநாயக சுவாமிகள் ஆசிரியர் பொறுப் பில் இருந்த காலத்தில் தூத்துக்குடியில் இருந்தும் இவ்விதழ் வெளி வந்தது.[5] இம்முதல்கட்ட விவேகபாநு குற்றாலத்தில் இருந்து வெளி வந்தது என்று சிலரும், தூத்துக்குடியில் இருந்து வெளிவந்தது என்று சிலரும் எழுதியுள்ளனர்.[6]

இரு துறவிகள் ஆசிரியர் பொறுப்பில் இருந்து நடத்திய இவ் விதழ் 'லௌகீக, வைதீக' வாழ்க்கைகளுக்குரிய ஒழுக்க நெறிகளை - வாழ்வியல் உண்மைகளை எடுத்துரைக்கும் பணியில் தன்னை முழு மையாக ஈடுபடுத்திக் கொண்டது. 'அறிவு', 'அறிவு விளக்கம்',

'ஆசை', 'ஆனந்தம்', 'இதோபதேசம்', 'இல்லறதர்மம்', 'உலகம் துன்பத்தில் வருந்துவானேன்', 'எங்கிருந்து எங்கு வந்தேன்', 'கடவுளும் பக்தியும்', 'கடவுள் ஒருவரே', 'விதி அல்லது ஊழ்', 'சத்தியம்', 'சமதிருஷ்டி', 'தன்னயம் தவிர்த்தல்', 'துறவு', 'நல்லொழுக்கமும் மெய்யறிவும்', 'நான் யார்', 'நிர்ப்பயம்', 'பக்தி - எதார்த்தம் - போலி', 'விவேக விசாரங்கள்', 'வைராக்கியம்' போன்ற தலைப்புகளில் கட்டுரைகள் அமைந்துள்ளன. இவை இதழின் அடிப்படை நோக்கத்தைத் தெளிவுபடுத்த வல்லன.

வ.உ.சி., வள்ளிநாயகம், தி.பா. சிவராமபிள்ளை, வெள்ளக்கால் ப. சுப்பிரமணிய முதலியார், பால்வண்ண முதலியார், பொ.மு. முத்தையா பிள்ளை, அசலாம்பிகை அம்மையார் முதலியோர் தொடக்ககால விவேகபாநுவின் கட்டுரையாளர்களில் குறிப்பிடத் தக்க சிலராவர். 'பதிபசுபாசத் தொகை' என்பது பழைய சித்தாந்த நூல்களில் ஒன்று. ஏட்டுச் சுவடியிலிருந்த இந்நூல் விவேகபாநுவில் முழுமையாக வெளியிடப்பட்டுள்ளது. (பக். 102 - 105, 157 - 159, 204 - 207, 231 - 232, 257 - 259) இதற்கு உரை எழுதி, பதிப்பித்தவர் பால்வண்ண முதலியார். 'பகவத்கீதைக் கும்மி' (பக்.221 - 224, 243 - 247, 271 - 274) என்ற தலைப்பில் மூன்று இதழ்களில் (புத்தகங்கள் 10-12) கும்மி இலக்கியம் ஒன்று வெளியாகியுள்ளது. இதன் தொடர்ச்சி இரண்டாம் ஆண்டு இதழ்களில் இடம் பெற்றுள்ளது. இந்தக் கும்மியை இயற்றி உரையும் எழுதியுள்ளவர் வெள்ளக்கால் ப. சுப்பிரமணிய முதலியார். இவை இரண்டும் தொடக்ககால விவேகபாநுவின் குறிப்பிடத்தக்க படைப்புகள்.

முதல்கட்ட விவேகபாநுவின் படைப்பாளர்களில் தனித்துக் குறிப்பிட வேண்டியவர் வ.உ.சி. இவருடைய தொடக்க காலப் படைப்புகளை இதில் காணமுடிகிறது. வ.உ.சி.யைப் பற்றிக் குறிப்பிடும்போது இவருடைய அரசியல் ஈடுபாடே பெரிதும் பேசப்படுவது வழக்கம். அரசியலில் தம்மைத் தீவிரமாக ஈடுபடுத்திக்கொள்ளும் முன்பே தத்துவத்தில் - ஆன்மிகத்தில் ஆழ்ந்தவர் வ.உ.சி. என்னும் வரலாற்று உண்மையை விவேகபாநு இதழ்க் கட்டுரைகள் வழி அறியமுடிகின்றது. 'கடவுளும் பக்தியும்' (புத்தகம் 1, பக்.7-16), 'விதி அல்லது ஊழ்' (புத்தகம் 2, பக்.27-31), 'ஈகை' (புத்தகம் 4, பக்.75-80), 'கடவுள் ஒருவரே' (புத்தகம் 6, பக்.125-128) என்னும் இவை நான்கும் முதல் கட்ட விவேகபாநுவில் இடம்பெற்றுள்ள

வ.உ.சி.யின் கட்டுரைகள்.[7] வ.உ.சி.யின் தொடக்ககாலத் தமிழ் நடை, வெளிப்பாட்டுத்திறன், ஆன்மிகப் பயிற்சி இவற்றையெல் லாம் அறிய இக்கட்டுரைகள் பெரிதும் துணைசெய்கின்றன. வ.உ.சி. யின் முதல் ஆன்மிகக் கட்டுரை இந்த இதழில்தான் வெளிவந்தது. 'கடவுளும் பக்தியும்' என்ற அந்தக் கட்டுரைதான் அச்சில் வந்த வ.உ.சி.யின் முதல் கட்டுரையும் ஆகும்.

வ.உ.சி.யின் ஆன்மிகச் சிந்தனையின் தொடக்கம் வாழ்வின் இளமையிலேயே அமைந்துவிட்டது என்பதை விவேகபாநுவில் இடம் பெற்றுள்ள இவருடைய கட்டுரைகள் புலப்படுத்துகின்றன. வ.உ.சி. என்னும் ஆன்மிகவாதியின் வரலாற்றை அறிய வேண்டுமாயின், விவேகபாநுவில் இருந்துதான் தொடங்கவேண்டும். விவேகபாநு வின் முதல் ஆசிரியரான கணபதியானந்த சுவாமிகளின் வரலாறு அறி யப்படுமாயின் வ.உ.சி.யின் ஆன்மிக வாழ்க்கையின் அறியப்படாத பகுதிகள் ஒளிபெறும்.

குற்றாலம், தூத்துக்குடி ஆகிய இடங்களிலிருந்து வெளிவந்த முதல்கட்ட விவேகபாநுவை வ.உ.சி. நடத்தினார் என்றும் ஆசிரிய ராக இருந்தார் என்றும் ஆசிரியராகவும் உரிமையாளராகவும் இருந் தார் என்றுமாகப் பல்வேறு கருத்துகள் ஆய்வாளர்களால் பலகாலம் சொல்லப்பட்டு வருகின்றன. தொடக்ககால விவேகபாநு வின் ஆசிரி யராக வ.உ.சி. இருந்திருக்க ஒரு சிறிதும் வாய்ப்பில்லை என்பதை இதுகாறும் கண்ட செய்திகளிலிருந்து எளிதில் அறிய முடியும். வ.உ.சி. அதன் உரிமையாளராகவும் இல்லை என்பதே உண்மை யாகும்.[8] என்றாலும் விவேகபாநு இதழ் வ.உ.சி.யின் பொதுவாழ் வில் இன்றியமையாத இடத்தைப் பெற்றதாகும். வ.உ.சி.யின் வர லாறு முறையாக எழுதப்படும்போது அதில் முதல்கட்ட விவேக பாநு வின் காலம் தவிர்க்க முடியாததாகும்.

## விவேகபாநு – இரண்டாவது கட்டம் – மதுரை

'சிற்சில அசௌகரியங்களைக் கருதி' முதல்கட்ட விவேகபாநு 1901 ஆகஸ்டுடன் நிறுத்தப்பெற்றது. 'வேறு யாரேனும் நடத்துவா ராயின் இதனது முழுச் சுதந்தரங்களையும் கொடுத்துவிடுவதாக' அறிவிக்கப்பெற்றது.[9] 1901 செப்டம்பர் முதல் 1902 நவம்பர் வரை யிலான கால இடைவெளிக்குப் பிறகு, இதன் அனைத்து உரிமை

களையும் பெற்று இதழைத் தம் பொறுப்பில் வெளியிடத் தொடங்கி னார் கந்தசாமிக் கவிராயர். தமக்குத் துணையாக மதுரை சேதுபதி உயர்நிலைப்பள்ளியின் தமிழாசிரியர் எஸ். சாமிநாதையரை இணைத் துக் கொண்டார்.[10] கந்தசாமிக் கவிராயரும், எஸ். சாமிநாதையரும் ஆசிரியர்களாக (பத்திராதிபர்களாக)வும் கந்தசாமிக் கவிராயர் உரி மையாளராகவும் அமைய, விவேகபாநு இரண்டாவது கட்டமாக மதுரையில் இருந்து வெளிவரத் தொடங்கியது. 1902 டிசம்பரில் முதல் இதழ் வெளிவந்தது.[11]

முதல்கட்ட விவேகபாநுவின் தொடர்ச்சியாகவே மதுரை விவேக பாநு அமைந்தது. இதற்கு 'வால்யூம் 2' என்று தொடர் எண் கொடுக் கப்பட்டது. முதல் இதழில் '1902 டிசம்பரும் 1903 சனவரியும்' என்றும், 'புத்தகங்கள் 1, 2' என்றும் குறிக்கப்பட்டுள்ளன. 1902 டிசம்பர், 1903 சனவரி இரண்டுக்குமான ஒரே இதழாக முதல் இதழ் அமைந்தது. பத்திராதிபர் என்று தலைப்பிட்டு, எஸ். சாமி நாதையர் பெயர் முதலிலும் கந்தசாமிக் கவிராயர் பெயர் அடுத்தும் தரப் பட்டுள்ளன. மதுரை அஷ்டலக்ஷ்மி விலாசம் அச்சகத்தில் பதிப்பிக் கப்பட்டது. ஆண்டுச் சந்தா ரூ. இரண்டு; தனி இதழ் அணா மூன்று.[12]

## இதழின் நோக்கம்

> முற்கால, தற்கால சாஸ்திர ஆராய்ச்சி சம்பந்தமான அரிய விஷ யங்களையும் இலக்கிய இலக்கண சம்பந்தமான பாஷா விஷ யங்களையும் முடிபுனைவேந்தர், குறுநிலமன்னர் செந்தமிழ்ப் புலவர் முதலிய புகழ்பெற்ற தக்கார் சரித்திரங்களையும், வியக் கத்தக்க நவீனக் கதைகளையும், சிற்பம் சித்திரம் முதலியவற் றால் உணரப்படும் விஷயங்களையும் இதுகாறும் அச்சு விமா னம் ஏறப்பெறாத பழைய புதிய நூல்களில் சிலவற்றையும், அவ்வப்போது தேச நன்மைக்கடுத்த நற்காரியங்களையும், மற்றும் விவேக விருத்திக்கின்றியமையாத பற்பல விஷயங் களையும் கற்றாரேயன்றி மற்றோரும் எளிதிற் பொருளுணர்ந்து கொள்ளும்வண்ணம் செவிக்கின்பம் பயக்கும் செந்தமிழ் நடை யில் ஆங்காங்கு புலவர் பெருமான்களால் எழுதுவித்து உலகார் கண்டுவக்குமாறு ஒரு தமிழ்ப் பத்திரிகை இத்தென்னாடாகிய நற்றமிழத் தேயத்துத் தோன்றப் பெறாதிருக்குமோர் பெருங் குறையைத் தவிர்ப்பது வேண்டுமென்னும் விருப்பம் எம்முள் ளத்துள் நெடுநாளாகத் தோன்றி வளர்தலுற்றது.

'நமது பத்திரிகை'[13] என்னும் தலைப்பில், இதழாசிரியர்கள் வெளியிட்டுள்ள அறிவிப்பின் மேற்கண்ட பகுதி மதுரை விவேக பாநுவின் நோக்கத்தைத் தெளிவுபடுத்துவதாக அமைந்துள்ளது.

## அமைப்பு

விவேகபாநுவின் அளவு 19.5 x 13.5 செ.மீ., முதல் ஆண்டு இது முதல் கட்ட விவேகபாநுவைக் குறிக்கும். இருபத்தெட்டுப் பக்கங்கள்; இரண்டாம் ஆண்டு முப்பத்தாறு பக்கங்கள்; மூன்றாம் ஆண்டு நாற்பத்து நான்கு பக்கங்கள் என்று வளர்ந்து நான்காம் ஆண்டு முதல் ஐம்பத்திரண்டு பக்கங்களாகியது.[14]

விவேகபாநு டிசம்பர் 1902இல் தொடங்கியது. டிசம்பர் 1902, சனவரி 1903 ஆகிய இரண்டு மாதங்களுக்குமான ஒரே இதழாக - 'புத்தகங்கள் 1, 2' என்ற குறிப்போடு 1903 சனவரியில் முதல் இதழ் வெளிவந்தது. நவம்பர் 1903இல் பன்னிரண்டாவது இதழ் வந்தது. டிசம்பர் 1902 முதல், நவம்பர் 1903 முடிய ஓர் ஆண்டு என்று கணக்கிடப்பட்டது. ஆனால் வெளிவந்த இதழ்கள் 11. டிசம்பர் 1903இல் இதழ் வரவில்லை. தொகுதி மூன்று சனவரி 1904இல் தொடங்குகிறது. இதுமுதல், ஒவ்வோர் ஆண்டும் சனவரியே முதல் மாதமாகக் கொள்ளப்பட்டது. 1904, 1905 ஆகிய இரு ஆண்டுகளிலும் ஆண்டிற்கு 12 இதழ்கள் வந்தன. 1906இலும் ஆண்டு, முதல் ஏழு மாதங்கள் (சனவரி - சூலை) இதழ் முறையாக வந்துள்ளது. ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர், நவம்பர் ஆகிய நான்கு மாதங்களுக்குமாக ஒரே இதழ் கொண்டு வரப்பட்டது; டிசம்பரில் தனி இதழாக வந்தது. 12 இதழ்களுக்குப் பதிலாக 9 இதழ்களே வந்தன. 1907இல் 8 இதழ்களே வந்தன. மார்ச்சு, ஏப்பிரல், மே, சூன், மாதங்களுக்கு உரியதாக ஒரே இதழ் வெளிவந்தது. சூலை, ஆகஸ்டு இதழ்கள் இணைக்கப்பட்டு ஒரே இதழானது. 1908இல் மார்ச்சு, ஏப்பிரல், மே மாதங்களுக்கு ஒரே இதழ்; சூன், சூலை, ஆகஸ்டு மூன்றுக்குமாக ஓரிதழ்; அக்டோபர், நவம்பர், டிசம்பருக்கு ஒரே இதழ். இந்த ஆண்டில் மொத்தம் 6 இதழ்களே வெளிவந்தன.[15]

பல நேரங்களில் இதழ்கள் தாமதமாக வந்தன. அதாவது, டிசம்பர் இதழ் அடுத்த ஆண்டு சனவரியில் வந்தது; சில வேளைகளில்

பிப்பிரவரி, மார்ச்சு என்று மேலும் தாமதமாகி வெளிவந்துள்ளதையும் காணமுடிகிறது. தொடக்கத்தில் எழுச்சியுடன் நிமிர்ந்து நின்ற மதுரை விவேகபாநு கால ஓட்டத்தில் இடர்ப்பாடுகளைச் சந்தித்து மெலிந்து தளர்ந்தது.

## மதுரை விவேகபாநு வாழ்ந்த காலம்

மதுரை விவேகபாநு டிசம்பர் 1902 முதல் டிசம்பர் 1908 முடிய கந்தசாமிக் கவிராயரின் சொந்த இதழாக வெளிவந்தது. அதாவது ஆறு ஆண்டுகள் விவேகபாநுவின் உரிமையாளராக இவர் இருந்தார். அந்த ஆறு ஆண்டுகளும் ஆசிரியர் பொறுப்பிலும் இவர் இருந்தார் என்றாலும், ஐந்து ஆண்டுகள் மட்டுமே ஆசிரியராக எஸ். சாமிநாதை யருடன் இணைந்து பணியாற்றினார். ஓராண்டு எஸ். சாமிநாதையர் மட்டுமே - இதழில் கந்தசாமிக் கவிராயர் பெயரும் ஆசிரியர் என்று இருந்தபோதும் - செயல்பட்டார்.

> 1907இல் தூத்துக்குடி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி விஷயமாகவும் என் சொந்த வேலைகள் சிலவற்றைக் கருதியும் யான் மதுரையில் இல்லாமல் சேலம், கோயமுத்தூர், பாலக்காடு, கள்ளிக்கோட்டை முதலிய அயலிடங்களில் யாத்திரை செய்து கொண்டிருந்தமையால் அவ்வருட முழுவதும் என்னுடன் பத்திராதிபராக இருந்த ஸ்ரீமத் ஐயரவர்கள் பத்திரிகையை நடத்தி வந்தார்கள். பத்திராதிபர் ஸ்தானத்தில் எழுதும் தலையங்கம் எல்லாம் அவர்களே எழுதினார்கள். 1907 முழுதும் யான் மதுரையில் இருக்கவில்லையாதலாலும், இடையில் மதுரைக்கு வரினும் இரண்டொரு நாளே தங்குவதும் உடனே புறப்படுவதுமாக இருந்தமையாலும் பத்திரிகை விஷயம் முழுதும் ஸ்ரீமத் ஐயரவர்களே கவனித்து நடத்தி வந்தார்கள்.[16]

கந்தசாமிக்கவிராயரின் மேற்கண்ட கூற்று, 1907இல் இவர் விவேகபாநுவின் ஆசிரியர் பொறுப்பில் இல்லை என்பதைத் தெளிவு படுத்துகிறது.

1908ஆம் ஆண்டுடன் கந்தசாமிக் கவிராயர் விவேகபாநுவின் எல்லாப் பொறுப்புகளிலிருந்தும் விலகிக் கொள்ளுகின்றார். அதற்கான காரணத்தையும் அவரே வெளியிட்டுள்ளார்:

> நமது பத்திரிகாபிமானிகளுக்கு விஞ்ஞாபனம்

ஐயன்மீர்,

1909 ஜனவரி முதல் யாம் தேக சுகமின்றிப் பிணியால் வருந்தி வருவதாலும் நமது விவேகபாநு அச்சியந்திரசாலை விஷயமாகச் சிற்சில புதிய சௌகரியங்கள் செய்ய வேண்டியிருத்தலானும் மற்றுஞ் சில காரணங்களானும் இந்த விவேகபாநு பத்திரிகையை நடத்தும் முழுப்பொறுப்பையும் ஸ்ரீமத் எஸ். சாமி நாதையரவர்களிடமே கொடுத்திருக்கிறோம். இவர்கள் இதுவரை எம்முடன் கூடிப் பத்திராதிபராக இருந்தவர்கள். இனிமேல் புரப்ரையிட்டராகவும் பத்திராதிபராகவும் இருந்து செவ்வனே நடத்துவார்கள். நாமும் இப்பத்திரிகை விஷயத்தில் ஊக்கத்துடன் வேண்டுவன செய்துவருவோம். நமது சந்தா நேயர்களும் முன்போல் அபிமானித்துவரும்படி பிரார்த்திக்கிறோம். பத்திரிகை சம்பந்தமாக எழுதுவோர்களும் பணம் அனுப்புவோர்களும் மதுரை விவேகபாநுப் பத்திராதிபர் ஸ்ரீமத் எஸ். சாமிநாதையர் அவர்களுக்கு என்று விலாசமிட்டெழுத வேண்டுகிறோம். இதுவரை 25 ரூபாவுக்குக் குறையாத நன்கொடையளித்துள்ள போஷகர்கள் எல்லாருக்கும் இலவசமாகவே பத்திரிகை அனுப்பி வருவார்களென்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இங்ஙனம்
மு.ரா. கந்தசாமிக் கவிராயர்
புரப்ரையிட்டர் அண்டு பத்திராதிபர்
மதுரை
16-2-09[17]

## மதுரை விவேகபாநு – இரண்டாவது காலகட்டம்

ஆறு ஆண்டுகள் கந்தசாமிக்கவிராயரின் உரிமைப் பொருளாக இருந்த மதுரை விவேகபாநு 1909 முதல் எஸ். சாமிநாதையரின் உடைமையானது. தமிழ்ப் பாஷையின் அபிவிர்த்தியையே இடையறாது கருதி ஊக்கத்துடன் உழைத்தவரும்[18] தமிழில் ஆழ்ந்த பயிற்சியும் புலமையும் நிறைந்தவருமான[19] எஸ். சாமிநாதையரை ஆசிரியராகவும் உரிமையாளராகவும் கொண்டு வெளிவந்த மதுரை விவேகபாநுவின் இரண்டாம் காலகட்டத்து இதழ்கள் பெரிதும் முயன்றும் பார்வைக்குக் கிடைக்கவில்லை. அதனால் எஸ். சாமிநாதையரின் விவேகபாநு வெளிவந்ததா அன்றி வெறும் அறிவிப்போடு நின்றுவிட்டதா என்பதை அறிய முடியவில்லை.

## விவேகபாநு – மூன்றாவது கட்டம் – டர்பன்

விவேகபாநு மதுரையிலிருந்து தென்னாப்பிரிக்காவிலுள்ள டர்பனுக்கு இடம்பெயர்ந்தது. வ.உ.சி.யின் பல நூல்களுக்கான மதிப்புரைகள் டர்பன் விவேகபாநுவில் வெளிவந்துள்ளன. வ.உ.சி. அவற்றைத் தம்முடைய நூல்களில் எடுத்தாண்டுள்ளார்.[20] அந்த மதிப்புரைக் குறிப்புகளிலிருந்தே விவேகபாநு டர்பனிலிருந்து வெளியானதை அறியமுடிகிறது. ஆனால் மதுரையிலிருந்து எந்த ஆண்டு டர்பனுக்குச் சென்றது, எத்தனை ஆண்டுகள் வெளிவந்தது என்பன போன்ற விவரங்கள் அறியுமாறு இல்லை.

திரு ஏ.கே. செட்டியாரின் 'புண்ணியவான் காந்தி' என்னும் நூலில் இது தொடர்பான குறிப்பு ஒன்றைக் காண முடிகிறது:

> தென்னாப்பிரிக்காவில் நேடாலில் தமிழரின் சமய வாழ்க்கை மேம்பாடு அடைவதற்கு உயிர்நாடியாக இருந்தவர் பிறையாறு திரு சொ. விருத்தாசலம் பிள்ளை அவர்கள்; அவர் 1900 ஆம் ஆண்டில் நேடாலில் குடியேறினார்.
>
> ---------------------------------------------------------------
>
> 1912ஆம் ஆண்டில் சரஸ்வதி விலாச அச்சகத்தைத் தொடங்கினார். 'விவேகபாநு' என்னும் பத்திரிகையை நடத்தினார். 1920ஆம் ஆண்டில் இந்தியாவுக்குத் திரும்பினார்.[21]

இந்தத் தகவல்கள் டர்பன் விவேகபாநுவைப் பற்றி ஓரளவாவது அறிய உதவுகின்றன. திரு சொ. விருத்தாசலம் பிள்ளை [22] என்பவர் அதன் உரிமையாளர் என்பதும் 1912 முதல் டர்பன் விவேகபாநு வெளிவந்தது என்பதும் ஏ.கே. செட்டியார் தரும் செய்திகள். 1920இல் சொ. விருத்தாசலம் இந்தியா திரும்பினார் என்றாலும் விவேகபாநு அதற்குப்பிறகும் டர்பனில் இருந்து வெளிவந்தது. அ. மாதவையா 'பஞ்சாமிர்தம்' என்னும் இதழை 1924இல் சென்னையில் தொடங்கியபோது, அதன் முதல் இதழைப் பாராட்டி வரவேற்று டர்பன் விபேகபாநு எழுதியுள்ளது. இது டர்பன் விவேகபாநு 1924 இல் வெளிவந்ததை உணர்த்துகிறது. வேறு தக்க சான்றுகள் கிடைக்கும் வரையில் விவேகபாநு டர்பனிலிருந்து 1912 முதல் 1924 வரையில் வெளிவந்தது என்று கருதலாம்.

1900ஆம் ஆண்டில் குற்றாலத்தில் தொடங்கிய தனது பயணத்தைத் தூத்துக்குடியிலும் மதுரையிலும் தொடர்ந்து ஏறக்குறைய 1924இல் டர்பனில் நிறைவு செய்தது விவேகபாநு.

## கந்தசாமிக் கவிராயர் – சில குறிப்புகள்

சேற்றூர்ச் சமத்தான வித்துவானாகிய முகவூர் இராமசாமிக் கவிராயரின் மகன். 1869 [23] இல் பிறந்தவரான இவர் இளமையில் தம் தந்தையாரிடமும் திருவாவடுதுறை ஆதீனம் சின்னவகைக் காறுபாறு நமச்சிவாயத் தம்பிரானிடமும் கல்வி பயின்றவர். உடுமலைப் பேட்டை அரசுப் பள்ளியில் தமிழாசிரியராகப் பத்தாண்டுகள் பணியாற்றியவர்.[24]

1902இல் மதுரை வாழ்க்கை தொடங்கியது. தமிழாசிரியர் இதழாசிரியரானார். டிசம்பர் 1902 முதல் விவேகபாநுவின் உரிமையாளர் மற்றும் ஆசிரியரும் ஆனார். இப்பணி 1908 வரையில் தொடர்ந்தது. 'விவேகபாநு அச்சியந்திர சாலை' என்ற பெயரில் அச்சகம் ஒன்றும் தொடங்கி நடத்தினார். 1909இல் 'வித்தியாபாநு' என்னும் இதழ் தொடங்கி 1916 வரை நடத்தினார்.

இவர் வ.உ.சி., பாரதி, சுப்பிரமணிய சிவா இவர்களின் நெருங்கிய நண்பர்: தீவிரவாதிகளை நேசித்தவரான இவர் விடுதலை இயக்கப் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர். வ.உ.சி.யின் கப்பல் கம்பெனிக்குப் பங்குதாரர்களைச் சேர்ப்பதற்காகத் தென்னிந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் மேற்கொண்டவர். [25] வ.உ.சி. கைது செய்யப்பட்டதை எதிர்த்து உருவான திருநெல்வேலி எழுச்சித் தொடர்பான வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர்களுக்கு ஆதரவாகச் சாட்சியம் அளித்தவர்.[26] தம்முடைய 'விவேகபாநு', 'வித்தியாபாநு' இதழ்களில் விடுதலை இயக்கம் சார்ந்த கட்டுரைகளையும் கவிதைகளையும் எழுதியவர். இயக்கம் தொடர்பான பிறர் படைப்புகளையும் அஞ்சாது வெளியிட்டவர்.

பாண்டித்துரைத் தேவரால் பெரிதும் மதிக்கப்பட்டவர்; மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் நண்பர்.[27] மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்களில் ஒருவராகத் திகழ்ந்தவர். 'அற்புதக் கவிஞர்' என்று மு. இராகவையங்காரால் பாராட்டப்பட்டவர்.[28] மதுரமான கவிகளை உண்டு பண்ணும் ஆற்றல் உடையவர் என்பர் நாவலர் சோம

சுந்தர பாரதியார்.[29] பெரும்புலவர் அரசஞ் சண்முகனாரின் உள்ளங் கவர் கள்வர். சண்முகனாரின் வாழ்வில் இரண்டறக் கலந்தவர்; அவருடைய வறுமை நாட்களில் உற்றுழி உதவித் துணை நின்றவர்.[30]

திருப்போரூர்த் திரிபந்தாதி, பவானி வேதநாயகியம்மை பிள்ளைத் தமிழ், கருமலையாண்டவர் துதி மஞ்சரி, குமண சரித்திரம், அரிமழத் தலபுராணம் முதலிய நூல்களின் ஆசிரியர். தனிச் செய்யுட் சிந்தாமணியைத் தொகுத்தவர். கம்பராமாயணம் ஆரணிய காண்டத்திற்கு உரை எழுதியவர்.[31] அரசஞ்சண்முகனாரின் மீனாட்சியம்மை சந்தத் திருவடி மாலை, மாலை மாற்று மாலை ஆகியவற்றிற்கும் உரை எழுதியவர். கந்தர் திருவடி மாலை, சிதம்பர விநாயகர் மாலை, திருவடிப் பத்து, இன்னிசை இருநூறு முதலிய சண்முகனாரின் நூல்களை வெளியிட்டவர்.[32]

தம்முடைய கட்டுரைகளைத் தொகுத்து, 'வியாசத்திரட்டு' என்ற பெயரில் இருதொகுதிகளாக வெளியிட்டார். அவற்றுள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்துப் பாடநூலாக்கி, 'தமிழ்க் கட்டுரைக் களஞ்சியம்' என்னும் தலைப்பில் வெளியிட்டனர் இ.மா. கோபால கிருஷ்ணக்கோன் பதிப்பகத்தார்.[33]

மரபுவழிக் கவிஞராக, தமிழ்ச் சங்கப் புலவராக, உரையாசிரியராக, வெளியீட்டாளராக, இதழாசிரியராக, சொற்பொழிவாளராக, நாட்டுக்குழைத்தவராக, நட்பின் இலக்கணமாகத் திகழ்ந்த கவிராயர் 1918இல் காலமானார். இந்த நூற்றாண்டின் தமிழ் இலக்கிய வரலாற்றிலும் விடுதலை இயக்க வரலாற்றிலும் தடம் பதித்தவரான கந்தசாமிக் கவிராயரின் வாழ்வு மகத்தானது; நிலைத்த புகழுடையது.

## இதழின் உள்ளடக்கம்

'பாஷாபிமானம், தேசாபிமானம், மதாபிமானம்' என்னும் அந்நாளைய தேசிய முழக்கமே விவேகபாநுவின் உள்ளடக்கமாகவும் அமைந்தது. மொழி, நாடு, சமயம் பற்றிய செய்திகள் கட்டுரைகளாகவும் கவிதைகளாகவும் மொழிபெயர்ப்புகளாகவும் பிற இதழ்களிலிருந்து எடுத்து மறுவெளியீடு செய்யப்பட்டனவாகவும் பல்வேறு வடிவங்களில் விவேகபாநுவில் இடம் பெற்றுள்ளன.

விவேகபாநு இதழ் நடைபெற்ற காலம் இந்திய விடுதலை இயக்க வரலாற்றில் மிகவும் இன்றியமையாத காலப் பகுதியாகும்.

விடுதலை இயக்கம் புதிய வழித்தடத்தில் நடைபோடத் தொடங்கிய காலம் அது. புதிய எழுச்சியும் உத்வேகமும் கிளர்ந்தெழுந்து இந்திய அரசியல் சூழலில் மாற்றத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்த காலம்; வரலாற்றுச் சிறப்புமிக்க அந்தக் காலகட்டத்து அரசியல் - சமுதாய நிகழ்வுகளை விவேகபாநு பதிவு செய்துள்ளது. மொழி, சமயம் சார்ந்த செய்திகளும் இவ்விதழில் பலவாக - மிகப் பலவாக பயனுறு கட்டுரை களாகவும் கவிதைகளாகவும் இடம் பெற்றிருந்தாலும் முதன்மை நோக்கி இங்கு விவேகபாநுவில் இடம்பெற்றுள்ள அரசியல் சார்ந்த செய்திகள் மட்டுமே ஆய்வுக்கு உரியவாகக் கொள்ளப்பட்டன.

இந்திய விடுதலை இயக்கத்தில் இந்த நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் தமிழகத்தில் தலைமையேற்று நடத்திய வ.உ.சி., போர்க்களக் கவிஞராகிய பாரதி, இவர்களோடு இயக்கப் பணிகளில் வேறு வேறு நிலைகளில் தம்மையும் இணைத்துக் கொண்ட கந்த சாமிக் கவிராயர், ம. கோபால கிருஷ்ண ஐயர், சேற்றூர் ரா. சுப்பிர மணியக் கவிராயர் போன்ற பலரும் விவேகபாநுவில் எழுதியுள்ளனர். வரலாற்று ஆவணங்களின் தொகுப்பாக விளங்கும் விவேகபாநுவின் அரசியல் சார்ந்த செய்திகளை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட மைக்கான காரணம் இதுவேயாகும். விடுதலை இயக்கத்தைத் தமிழகத்தில் மக்கள் இயக்கமாக்கிய அரும்பெரும் பணியில் மதுரை விவேகபாநுவின் பங்களிப்பை இனிவரும் பக்கங்களில் காணலாம்.

## சுதேசியமும் விவேகபாநுவும்

வங்கப் பிரிவினை இந்தியாவில் சுதேசிய உணர்வைத் தூண்டி யது. சுதேசி இயக்கம் அரசியல், இலக்கியம், தொழில் ஆகிய எல் லாத் துறைகளிலும் புதிய எழுச்சியைத் தோற்றுவித்தது.[34] நாடெங் கும் சுதேசி முழக்கம் கேட்கத் தொடங்கியது. இதழ்கள் புதிய வேகத் துடன் சுதேசியம் பற்றி எழுதின; சுதேசியச் சிந்தனைகள் பல்வேறு இலக்கிய வடிவங்களாக மலர்ந்தன; உள்நாட்டுத் தொழில்கள் பற் றிய எண்ணங்கள் மேலோங்கின. நாடு முழுவதும் சுதேசியம் என்பதே பேச்சானது. விவேகபாநுவும் இந்த இயக்கத்தில் தன்னை இணைத் துக் கொண்டது. பல்வேறு நிலைகளில் தன்னுடைய சுதேசிய உணர்வை அது வெளிப்படுத்தியது. சுதேசியம் பற்றி நான்கு கட்டுரை கள் விவேகபாநுவில் வெளிவந்துள்ளன. இந்திய விடுதலை இயக்க வரலாற்றில் ஒரு மைல் கல்லாக விளங்கிய சுதேசியம் பற்றிய

விவேகபாநுவின் மனநிலையை அறிய அக்கட்டுரைகள் பயன்பட வல்லன.

## 'சுவதேசிய முயற்சி' – மு.ரா. கந்தசாமிக் கவிராயர்

1905 அக்டோபர் 16இல் வங்கப்பிரிவினை நடைமுறைக்கு வந்தது; அதை எதிர்த்தும் அடுத்துச் செய்ய வேண்டியன பற்றியும் தலைவர்கள் பேசினர்; இதழ்கள் எழுதின. விவேகபாநுவும் தன் கருத்தைத் தெரிவித்தது. 'சுவதேசிய முயற்சி' என்னும் தலைப்பில் கவிராயர் எழுதிய கட்டுரை 1905 செப்டம்பர் இதழில் வெளிவந்தது.[35]

> நம் கவர்மெண்டார் வங்காள நாட்டை இருபிரிவாகச் செய்துவிட்டனர். இது சர்வஜன சம்மதமில்லாமற் செய்த விஷயம். அதுபற்றி வங்காளநாட்டார் மனங்கொதித்துக் கொண்டிருக்கிறது. அக்கொதிப்பை ஒருவாறாக வெளிக்காட்டி இனித் தாங்கள் அந்நிய நாட்டுச் சரக்குகளை வாங்குவதில்லையென்றும் சுவதேசசாமான்களை உபயோகிக்க வேண்டுமென்றும் கட்டுப்பாடு பண்ணிக் கொண்டார்கள்[36]

என்று தொடங்கும் கட்டுரை, சுவதேசிய முயற்சியைக் கைக்கொள்வதால் நேரிடும் சாதக பாதகங்களைச் சிந்திக்கும் நோக்கில் அமைந்துள்ளது.

> உடைகள் விஷயத்தில் என்றாலோ நம்நாட்டின் கண்ணே அநேகம் நெசவுயந்திர சாலைகள் ஸ்தாபிக்கப்பட்டுத் துணிகள் நெய்யப்பட்டு வருகின்றன. அவைகள் சொற்பம் கரடுமுரடாயிருக்கலாம். நாட்டுத்துணிகள் நயமாயிருந்தால் விலையதிகம் என்று யோசிக்கலாம். அவைகளுக்கு உபயோகப்படும் நயமான நூல்களும் அந்நிய நாட்டிலிருந்தே வருகின்றன. என்றாலும் சில காலம் உள்நாட்டுத் துணிகளைக் கட்டிக்கொள்ளச் சம்மதிப்போமானால் கூடிய சீக்கிரம் மற்றை நேர்த்தியான நூல்களையும் துணிகளையும் நெய்வதற்கு ஏற்பாடு செய்துவிடலாம்.
>
> ஆகையால் தேசாபிமானம் ஒன்றுமட்டுமிருந்தால் இந்த சொற்ப அசௌகரியங்களை அசௌகரியமாகவே நினையோம். இன்றியமையாத பொருள்களை மட்டும் நாம் அந்நிய நாடுகளிலிருந்து தருவித்துக் கொள்ளலாம். முற்றிலும் முதலில் ஒழிக்கவும் வேண்டாம்.*[1]

சுதேசிய முயற்சிகளை நடைமுறைப்படுத்துவதிலுள்ள இயல்பான சிக்கல்களை எடுத்துக்கூறி, அவற்றிலிருந்து விடுபடுவதற்கான வழிமுறைகளையும் முன்வைத்துள்ள பான்மை எண்ணத்தக்கதாகும்.

> ................இத்துணை விஷயங்களையும் முடிப்பதென்றால் போதுமான தேசாபிமானமும் ஊக்கமும் உழைப்பும் சுறுசுறுப்பும் ஜீவகாருண்யமும் ஒற்றுமையும் நம்பிக்கையும் நாணயமும் சத்தியமும் வேண்டும். அப்பொழுதே நம் காரியம் கைகூடும். அவையின்றி வீண்பேச்சுப் பேசி ஆரம்ப சூரத்துவம் காட்டி நிறுத்திவிடக்கூடாது. அவ்வாறு செய்தால் நாம் பிறர் பழிப்புக்கும் அவமதிப்புக்கும் அவதூறுக்கும் உள்ளாவோம். ஆகையால் ஊக்கத்தைச் சிறிதும் தளரவிடாமல் உழைத்து நம் நாட்டுக்கு க்ஷேமத்தையும் பெருமையையும் தேடுவோமாக.[38]

அந்நியப் பொருள்களை மறுப்பதும், சுதேசியப் பொருள்களை ஏற்பதும் எவ்வளவு கடினமான முயற்சி என்பதையும் கவிராயர் கட்டுரையில் சுட்டிக்காட்டியுள்ளார். முயற்சி பெரிதென்றாலும் விளையும் பயன் நிலைத்த தன்மையுடையது என்பதால் பொறுமை காட்டி உழைக்க வேண்டும் என்கிறார். 'வீண் பேச்சுப் பேசி ஆரம்ப சூரத்துவம் காட்டி நிறுத்தினால்' ஏற்படும் அவலங்களை எடுத்துக்காட்டி எச்சரிக்கின்றார். சுதேசியம் என்னும் சிந்தனை அரும்பத் தொடங்கிய நிலையிலேயே அதைப்பற்றி விரிவாக எழுதி மக்களைச் சுதேசியம் நோக்கித் திருப்பும் பணியில் ஈடுபட்டது விவேகபாநு.

சமகால அரசியல் நிகழ்வுகளில் இருந்த தெளிவையும், மக்களை அரசியல் சார்ந்த அடுத்த கட்ட நடவடிக்கைகளுக்குத் தயார் செய்வதில் இருந்த அக்கறையையும் இக்கட்டுரையின் மூலம் கந்தசாமிக் கவிராயர் வெளிப்படுத்தியுள்ளார்.

## 'சுதேசாபிமானம்' – வ.உ.சி.

வ.உ.சி.யின் முதல் அரசியல் கட்டுரையான இது 1906 பிப்பிரவரி இதழில் வெளிவந்துள்ளது. வ.உ.சி.யின் அரசியல் சிந்தனையோட்டத்தை அறிய இக்கட்டுரை பயன்படும். மக்களுக்கு ஆரம்ப அரசியல் அறிவைப் புகட்டும் நோக்கில் எழுதப்பட்டது இக்கட்டுரை.

'சுதேசம்', 'அபிமானம்' இவற்றின் பொருள், அதை வெளிப்படுத்த வேண்டிய நேரம், வெளிப்படுத்துவதற்கான வழி ஆகியன பற்றிப் பேசும் வ.உ.சி.யின் கட்டுரையில் குறிப்பிடத்தக்க பகுதிகள்:

> சுதேசத்தாருக்கு நேர்ந்த வறுமை, துன்பம், அடிமைத்தனம் முதலியவற்றை ஒவ்வொருவரும் அவரவரைப் பெற்ற தாய்க்கே வந்ததாகக் கொள்ள வேண்டும். பெற்றதாய் உண்ண அன்னமில்லாமலும் உடுக்க வஸ்திரமில்லாமலும் அன்னியருக்கு அடிமைப்பட்டும் வருந்தப்பார்த்து மனஞ்சகித்திருக்கும் புத்திரனும் உலகின்கண் உண்டோ?[39]

பிறருக்கு நேரும் துன்பத்தைத் தம் தாய்க்கு நேர்ந்ததாகவே கொள்ள வேண்டும் என்று கூறுவதன் மூலம் சுதேசாபிமானத்தின் நுட்பத்தை விளக்குகின்றார் வ.உ.சி.

சுதேசத்தார் ஒன்றுபடுவதற்குத் தடையாக இருப்பது எது என்ற கேள்வியை எழுப்பி, விடையையும் அவரே கூறியுள்ளார்:

> சுதேசத்தார் ஒன்று சேர்வதற்கும் ஒற்றுமையாக இருப்பதற்கும் முக்கிய தடைகள் ஜாதியபிமானம் மதாபிமானங்களே.
>
> சுதேசத்தார் ஒவ்வொருவரும் அவரவர்க்குள் நிகழாநிற்கும் சொந்த வேற்றுமைகளைப் பாராட்டல் கூடாது.
>
> சுதேசத்தின் நன்மையைக் கருதும் ஒவ்வொருவரும் அவரவர் ஜாதிமதாபிமானங்களை அவரவர் சொந்த விஷயங்களில் மாத்திரம் கவனித்துக் கொண்டு தேசப் பொது விஷயங்களில் பாராட்டாது பலருமொன்றுகூடி ஒரே மனத்துடன் சுதேச அடிமைத்தனத்தை நீக்கி சுயர்ச்சிதம் பெற உழைக்க வேண்டும், சுதேச நன்மைக்காக ஒவ்வொருவரும் சமயம் வாய்த்துழி அவரவர் உடல் பொருள் ஆவிகளைத் தத்தம் பண்ணவும் தயாராயிருக்க வேண்டும்.[40]

சாதி மத உணர்வுகளைத் தனிப்பட்ட சொந்த விவகாரங்களில் மட்டும் வைத்துக்கொண்டு, நாட்டின் பொதுப் பிரச்சினைகளில் அனைவரும் ஒருங்கிணைந்து உழைக்க வேண்டும் எனத் தனிப்பட்ட வாழ்க்கை வேறு, நாட்டுக்காக உழைத்தல் என்பது வேறு என்று இரண்டையும் வேறுபடுத்திக் காட்டி, மக்களைப் பொதுவாழ்விற்கு - விடுதலை முயற்சிகளுக்கு அழைக்கும் பாங்கு வ.உ.சி.யின் அரசியல் அணுகுமுறையைப் புலப்படுத்துவதாகும்.

## 'சுதேசிய முயற்சி' – சேற்றூர் ரா. சுப்பிரமணியக் கவிராயர்

1906ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் வ.உ.சி. மதுரையில் சுற்றுப் பயணம் மேற்கொண்டு சுதேசியம் பற்றியும் ஒற்றுமையின் தேவை பற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அக்கூட்டங்களில் ஒன்றிற்குத் தலைமையேற்ற சே.ரா. சுப்பிரமணியக் கவிராயர் தம்முடைய தலைமைப் பொழிவைக் கட்டுரையாக்கி அளித்தார். 'நம்மவர் பலரும் வாசித்தறிய வேண்டிய பல அரிய விஷயங்களைக் கொண்டுள்ளமையால் இங்குத் தருகின்றோம்' என்னும் குறிப்போடு விவேகபாநு வெளியிட்டுள்ள அக்கட்டுரையே 'சுதேசிய முயற்சி' என்பதாகும்.[41]

சுதேசியத்தை வரவேற்று அதைப்பற்றி விரிவாகவும் விளக்கமாகவும் சே.ரா. சுப்பிரமணியக் கவிராயர் எழுதிய மேற்கண்ட கட்டுரை பாரதியைப் பெரிதும் கவர்ந்தது. 24.11.1906 இந்தியா இதழில் அவர் அதுபற்றிய தம் கருத்தை வெளியிட்டார்.

> காலபிவிர்த்திக்கேற்பவே பல முக்கிய அறிகுறிகள் பல திசைகளிலும் வெளிப்பட்டு வருகின்றன. இந்திய ஜனங்களின் மனதிலே புதிய ஆவல்கள் திளைக்கின்றன. இதுவரை தேச பொதுமை சம்பந்தப்பட்டமட்டிலே அதிக சிரத்தை எடுத்துக்கொள்ளாத ஜனங்களெல்லாம் இப்போது ராஜதந்திர விவகாரங்களைக் கவனிக்கத் தொடங்கினார்கள். சென்ற தடவை 'விவேகபாநு' பத்திரிகை நமது பார்வைக்கு வந்தது. அதிலே சில விஷயங்களைப் படித்துப் பார்த்தவுடனே நமக்கு ஈசனிடம் அடங்காத நன்றி அறிவு பொங்குவதாயிற்று.
>
> இலக்கண விஷயங்களிலே நாளெல்லாம் களித்த பண்டித சிரோன்மணிகள் இப்போது ராஜாங்கத்தாரின் செலவு கணக்குகளிலே சிரத்தை எடுக்கத் தொடங்கிவிட்டார்கள்.
>
> திருவாவடுதுறை ஆதீன வித்வானும் மதுரை தமிழ்ச்சங்கத்து சைவநூற் பரிசோதகருமாகிய ஸ்ரீசுப்பிரமணியக் கவிராயர் சுதேசிய முயற்சியைப் பற்றி நேர்த்தியான ஒரு வியாசமெழுதி இருக்கிறார். ராஜாங்க விவகாரங்களிலேயே நாட்களையெல்லாம் செலவிட்ட விற்பன்னர்கள்கூட இத்தனை நன்றாக எழுத மாட்டார்கள்.[42]

பாரதி வாக்கின் உண்மையைக் கீழ்க்காணும் கட்டுரைப் பகுதி உறுதிப்படுத்துகிறது:

> 1901ஆம் வருஷ கணக்கின்படி இந்தியாவிற் சற்றேறக்குறைய முப்பது கோடி ஜனங்களிருக்கின்றார்கள்; இவர்களில் இரண்டரைக் கோடி ஜனங்கள் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாக இருக்கின்றார்கள். நமக்கு மூலாதாரமான படிப்பு இவ்வாறிருக்குமானால் எவ்வாறாக எல்லாரும் படித்து அறிவுடையவர்களாகிப் பலவித முயற்சிகள் செய்து பொருளைச் சம்பாதித்துச் சுகமடையப் போகின்றார்கள்; ஆதலால் ஒவ்வொரு நகரந்தோறும் பாடசாலை தாபித்துப் பிள்ளைகளைப் படிப்பிக்கச் செய்ய வேண்டுவது ஒவ்வொரு நகரத்துள்ள புத்திமான்களுக்குஞ் செல்வர்களுக்கும் பெருங் கடமையாகவேயிருக்கின்றது. இப்படிச் செய்யாவிடிற் ஜனங்களுக்கு அறிவுண்டாவதற்கு வேறெதுமில்லை. அறிவு சுருங்கவே பலவித முயற்சிகள் அபிவிர்த்தியாக மாட்டா.
>
> எல்லாவிதமான படிப்பின் பொருட்டாக 1905ஆம் வருஷம் நமதிராசாங்கத்தார் இந்தியாவுக்குச் செய்த செலவானது பன்னிரண்டு லட்சத்து எண்பத்தையாயிரம் பவுனுக்கு மேலில்லையென்கிறார்கள்; அவர்களுக்கு இந்தியாவில் கிடைத்த மொத்த ரெவினியூ வரும்படியோ நாலு கோடியே தொண்ணூற்றேழு லட்சம் பவுனாம். இராசாங்கத்திற்குக் கிடைத்த ரெவினியூ வரும்படிக்கு அவர்கள் சகலவிதமான படிப்பின் பொருட்டுச் செய்கிற செலவு காணாதென்பது சொல்ல வேண்டுவதில்லையே.[43]

பல லட்சம் பவுன் மதிப்புள்ள பருத்தியும் சணல் நாரும் பதப்படுத்தப்படாத தோலும் எண்ணெய் வித்துக்களும் மேலை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுவதையும், மண்ணெண்ணெய், உப்பு, காகிதம், குடை, மருந்துகள் முதலிய பலவும் பல இலட்சம் பவுன் விலையில் இறக்குமதி செய்யப்படுவதையும் ஆழ்ந்த வருத்தத்தோடு குறிப்பிட்டுப் பின்வருமாறு எழுதுகிறார்:

> இவைகள் வெளியேறாமல் நமது தேசத்தில் யந்திரங்களைத் தாபித்துத் தொழில் செய்வோரை வேலை பார்க்கச் செய்து பலவித செயற்கைப் பொருள்களை உண்டாக்குவோமானால் நமது தேசத்தில் கணக்கில்லாத செல்வப் பொருளுண்டாம் என்பதற்குச் சந்தேகமில்லை.
>
> இவைகளை யெல்லாம் அந்நிய தேசத்திலிருந்து வந்திறங்காமல் நம்முடைய தேசத்திலே நாமே செய்து கொள்வோமாகில், இவ்வளவு பணமும் நம்முடைய தேசத்திலே விளங்கி வழங்கிச் செழிக்குமன்றோ?[44]

என்று வினவும் கட்டுரையாசிரியர் 'இவைகளையெல்லாம் நமது சுதேசியர்கள் கவனிக்க வேண்டும்' என்று வலியுறுத்துகின்றார்.

பலவாய அரிய சுதேசியச் சிந்தனைகளை உள்ளடக்கியதாக அமைந்த தம் கட்டுரையைச் சே.ரா. சுப்பிரமணியக் கவிராயர் இவ் வாறு முடிக்கின்றார்.

> நமது தேசத்திலுள்ளவர்கள் சுகமடையும்படி மூலாதாரமான கல் விச் சாலைகளையும் பலவித கைத்தொழிற் சாலைகளையுந் தாபித்து முயற்சியை அதிகப்படுத்திப் பலவித செயற்கைப் பொருள்களை உண்டாக்கிப் பொருட்செல்வத்தை அபிவிருத்தி செய்ய வேண்டும்.[45]

நிகழ்காலக் கவலையோடும் வருங்காலப் பார்வையோடும் நாட்டுணர்வுமிக்க இந்தியக் குடிமகனாகத் தம்மை உணர்ந்து ஒரு தமிழ்ப் பெரும் புலவர் எழுதிய இக்கட்டுரை சுதேசி இயக்க வரலாற் றில் இடம்பெற வேண்டியதாகும்.

## 'சுதேசாபிமானம்' – மு.ரா. கந்தசாமிக் கவிராயர்

விவேகானந்தரின் தம்பியும், 'யுகாந்தர்' என்னும் இதழின் ஆசிரி யருமான பூபேந்திரநாத தத் மீது ராஜநிந்தனை வழக்குப் பதிவு செய் யப்பட்டு விசாரணை நடந்தபோது பூபேந்திரர் அளித்த வாக்குமூலத் தைக் கண்டும் கேட்டும் நாடே வியந்தது. சிறந்த தேசபக்தராகிய அவருடைய வாக்குமூலத்தைப் பாராட்டி, சுதேசமித்திரன் எழுதியது. அதை அப்படியே எடுத்து விவேகபாநுவில் தம்முடைய முன்னுரை யோடு வெளியிட்டார் கந்தசாமிக் கவிராயர்:

> சுதேசாபிமானமானது ஒருவருள்ளத்து வேரூன்றிவிடுமாயின் அஃது அவர் உயிரையும் பிறர்க்குத் தத்தஞ் செய்யும்படி தீரத்துவந் தந்து வெற்றி கொடுப்பதேயாகும். பரோபகாரத்தின் பொருட்டே தம் உயிரைத் திரணமாக மதித்துப் புகழ் பூண்ட ததீசி முனிவர், சிபிச் சக்கரவர்த்தி, குமணன் முதலான எண்ணி றந்த பெருமக்களை ஈன்று களித்து வாழ்ந்த நம் பாரத மாதா வுக்கு இன்றும் அத்தகைய புத்திரசிகாமணிகள் இல்லாமல் போகவில்லை. இவ்வுண்மையையறிய மகிழாதாரும் உண்டோ?[46]

கவிராயரின் இம்முன்னுரைப் பகுதி ஆழ்ந்து நோக்கத்தக்கது. சுதேசாபிமானம் இவருடைய பார்வையில் புதிய விளக்கம் பெற்றது;

சிபியும் குமணனும் பாரத மாதாவின் பிள்ளைகளாயினர். பூபேந்திர நாத தத் புராணங்களிலும் இலக்கியங்களிலும் வாழ்ந்த, தமக்கென வாழாப் பிறர்க்குரியாளரோடு ஒப்பிடப்பட்டார்.

விசாரணையின்போது பூபேந்திரர் கொடுத்த வாக்குமூலம் அறியப்பட வேண்டியதாகும்.

> யுகாந்திரப் பத்திரிகையில் காணப்படுபவையெல்லாம் நான் எழுதினவேயாகும். நான் ஒன்றையும் ஒளிக்கவில்லை. நான் என் தாய்நாட்டின் க்ஷேமத்தின் பொருட்டு செய்ய வேண்டிய கடமைகளைத்தான் செய்தேனென்று எண்ணுகின்றேன். பிரிட்டிஷ் சட்டப்படி குற்றமா குற்றமில்லையா என்பதை நான் கவனிக்கவில்லை. என் கடமையென்று தோன்றியதை நான் செய்தேன். கோர்ட்டார் அபிப்பிராயப்படி நான் குற்றவாளி யாயிருந்தால் இருக்கட்டும். இதற்காக வீணில் பிராசிக்யூஷன் தரப்பு வக்கீல்களுக்கும் சாட்சிகளுக்கும் சிரமம் கொடுத்து என் குற்றத்தை ருஜு செய்ய வேண்டியது அநாவசியம். வருவதை அனுபவிக்கத் தயாராயிருக்கின்றேன். இதற்குமேல் நான் விரித்துப் பேசவேண்டியதொன்றுமில்லை. விசாரணையை இம்மட்டோடு நிறுத்திக் கொள்ளலாம்.[47]

ஆண்மையும் அஞ்சாமையும் நிறைந்த பூபேந்திரரின் மேற்கண்ட வாக்குமூலம் அந்நாளில் பெரும் பரபரப்பை ஏற்படுத்திய ஒன்றாகும். ‘எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழையென்றான் என்னும் கம்பராமாயண அடி இவ்விடத்து முற்றும் பொருந்தும்’ என்று கூறி, கட்டுரையை முடித்துள்ளமை கவிராயரின் உள்ளப்பாங்கை உணர்த்த வல்லது.

## குறிப்பிடத்தக்க கட்டுரைகள்

விடுதலை இயக்கம் சார்ந்த கட்டுரைகள் மிகுந்த அளவில் விவேகபாநுவில் இடம்பெற்றுள்ளன. அவற்றில் பலவும் செறிவான செய்திகளைக் கொண்டு இலங்குகின்றன. தனித்தன்மை வாய்ந்த செய்திகளைப் பொருளாகக் கொண்டமைந்த கட்டுரைகள் சிலவற்றை யாவது அறிவது இதழின் நோக்கத்தை - செயல்பாட்டை விளங்க வைக்கும்.

## வந்தேமாதரம்

'வந்தேமாதரம்' பங்கிம் சந்திரரால் 1875இல் இயற்றப்பட்டது. அச்சில் வராத அப்பாடல் 1882இல் வெளிவந்த 'ஆனந்த மடம்' என்ற நாவலில் சேர்க்கப்பட்டது.[48] வந்தேமாதரம் பாடல் 1905இல் வெடித்தெழுந்த சுதேசி இயக்கத்தில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தும் என்றோ, நாடு தழுவிய போராட்டங்கள் அனைத்திலும் தனித்ததோர் இடத்தைப்பெறும் என்றோ பங்கிம் சந்திரர் எதிர்பார்த்திருக்க மாட்டார் என்று சுரேந்திரநாத் பானர்ஜி குறிப்பிட்டுள்ளார்.[49]

1905இல் பெயர் அறியப்படாத ஒரு வீர இளைஞன் வங்கப் பிரிவினை எதிர்ப்பு இயக்க ஊர்வலத்தில் திடீரென வந்தேமாதரம் பாடலைப் பாடினான். அப்போது முதல் வந்தேமாதரம் போர்க் குரலாகியது.[50] இந்தியா முழுமையும் எதிரொலித்த அப்பாடல் தமிழகத்தில் இடிமுழக்கமாகியது.

வங்கமொழியில் அமைந்த வந்தேமாதரம் பாடலைத் தமிழில் முதன்முதலில் மொழிபெயர்த்து அளித்த பெருமை பாரதிக்கே உரியது. மொழிபெயர்த்து வெளியிட்டபோது அதுபற்றி எழுதிய சிறியதோர் அறிமுகம் தவிர, பாரதி வந்தேமாதரம் பற்றித் தனியே கட்டுரை எதுவும் தொடக்க காலத்தில் எழுதியதாக அறிய முடியவில்லை. இந்த நூற்றாண்டின் முதல் பத்து ஆண்டுகளில் (குறிப்பாக 1905 முதல் 1910 வரை) வந்தேமாதரம் பற்றிய விரிவான - விளக்கமான கட்டுரைகள் தமிழில் அதிகம் வரவில்லை என்றே தோன்றுகிறது. அந்தக்கால எல்லைக்குள் தமிழில் வெளிவந்த வந்தேமாதரம் பற்றிய கட்டுரைகள் அறியப்படவேண்டும்; முறையாகத் தொகுக்கப்படவேண்டும். தமிழகத்தில் சுதேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி ஆய்வு செய்ய முற்படும்போது அத்தகைய கட்டுரைகளின் பயன்பாடு பெரிதாக இருக்கும்.

வந்தேமாதரம் பற்றிய முதல் கட்டுரை விவேகபாநுவிலேயே வெளிவந்துள்ளது என்பது இக்கட்டுரையாளரின் கருத்தாகும். 1906 ஆம் ஆண்டு வெளிவந்த அக்கட்டுரையை எழுதியவர் கந்தசாமிக் கவிராயர்.[51] இவர் இதே இதழில் 'வந்தேமாதர மந்திரச் செய்யுள்' என்னும் தலைப்பில் தம் கவிதையையும் வெளியிட்டார். வந்தே மாதரத்தின் பெருமைகளை விளக்கும் அக்கவிதை பாரதியின் மனத்தில்

ஏற்படுத்திய கிளர்ச்சியையும் அதன் வெளிப்பாட்டையும் பின்னர் காணலாம்.

வந்தேமாதரம் பற்றிய கவிராயரின் கவிதைக்கு முன்னுரையாக, விளக்கமாக அமைந்ததே இக்கட்டுரை. கவிதையையும் கட்டுரையையும் ஒருசேரப் படிப்பவர்கள் இதனை உணரமுடியும்.

> 'வந்தேமாதரம்' என்னும் மந்திரமானது சிலகாலமாக நம் இந்தியாவில் பல இடங்களிலும் முழங்கி வருகின்றதை நாம் அறிவோம். அறிந்துமென்ன? இம்மகாமந்திரத்தின் பொருள் யாது? அம்மந்திரம் கோஷிக்க வேண்டிய காரணம் என்ன? இதனால் நாம் அடையும் பயன் எது? என்பன முதலிய உண்மைகளை யாராய்ந்து கொண்டு இம்மந்திரத்தைச் சிந்திப்பவர் மிகச் சிலரேயாவர். பொருளையும் பயனையும் உணராது காக்கை போற் கதறுவது வெற்றொலியேயன்றி வீண் காலப் போக்குமாக முடியும். ஆதலின் நம் அருமைச் சுதேசிகள் யாவரும் இம் மகா மந்திரத்தின் பொருள் முதலியவற்றை நன்கு தெரிந்து பயனடைய வேண்டியே ஒரு சிறிது கூறுவாம்[52]

என்று தொடங்கும் கட்டுரை பல அரிய செய்திகளின் தொகுப்பாக உள்ளது. படித்து, அறிந்து, உணர்ந்து, தெளிய வேண்டிய இக்கட்டுரையின் சில பகுதிகள் பயன்கருதி இங்கு எடுத்துக் காட்டப்படுகின்றன.

இந்திய விடுதலைப் போராட்டத்திற்கு ஊக்கமளித்த உலக நிகழ்ச்சிகளில் ஜப்பான் ரஷியாவைப் போரில் தோற்கடித்த நிகழ்ச்சியும் ஒன்றாகும். ஆசிய நாடாக இருந்தும் வலிமை மிக்க ரஷியாவைப் போரில் ஜப்பான் புறங்காணச் செய்த நிகழ்ச்சி அந்நாளைய இந்தியத் தலைவர்களையும் நாட்டு விடுதலையில் நாட்டங் கொண்டோரையும் பெரிதும் ஈர்த்தது. அவர்கள் இந்திய மக்களுக்கு நம்பிக்கையும் உத்வேகமும் ஏற்படுத்த ஜப்பானின் வெற்றியைப் பயன்படுத்திக் கொண்டனர். இந்த நிகழ்ச்சியால் ஈர்க்கப்பட்டவர்களுள் கந்தசாமிக் கவிராயரும் ஒருவர். தம்முடைய வந்தேமாதரம் கட்டுரையில் இதை இவர் வெளிப்படுத்தியுள்ளார்.

> ஜப்பான் தேசம் எவ்வளவு சிறிது? எவ்வளவு குறைந்த ஜனத்தொகையுடையது? இருபது வருஷங்களுக்குமுன் அது இருந்த நிலமை என்ன? அதன் பெயரையும் கூடப் பலர் அறியாரே.

அத்தேசம் இப்போது அடைந்த பெருமையைப் பார்த்தீர்களா? இப்போது ஜப்பான் என்ற பெயரைக் கேட்டால் எத்தேசத்தாரும் அப்பா என்று மூக்கின்மேல் விரல் வைத்து ஆச்சரியப்படுகின் றாரே. இதன் காரணமென்ன? ஜப்பானியருக்குள் உண்டான ஒற்றுமைதானே.[53]

மரபு வழிப்பட்ட கவிராயர் பரம்பரையில் தோன்றிய ஒருவர் தம் சமகாலத்து உலக நிகழ்ச்சியில் ஈடுபாடு காட்டியதும் அதைத் தம் தாய்நாட்டின் விடுதலைக்குப் பயன்கொள்ள நினைத்ததும் குறிப் பிடத்தக்க நிகழ்வாகும். அவர் மேலும் கூறுகின்றார்:

'எத்தால் வாழலாம்; ஒத்தால் வாழலாம்' என்ற பழமொழி நாமறி யாத தன்றே. ஆசியாக் கண்டவாசியாகிய நமக்குச் சகோதரரான ஜப்பானியர் அடைந்த பெருமையை நாம் அடைய வேண்டி னால் அசாத்தியமன்றே. நாம் எல்லாரும் ஒற்றுமைக்குணத்தைக் கொள்ளுவோமானால் ஜப்பானியர் அடைந்த பெருமையைப் பார்க்கினும் மிக்க பெருமையடையலாமன்றோ?

ஜாதி, மதம் முதலிய எவற்றினும் சிறந்தது சகோதர ஒற்று மையேதான். இப்படிப்பட்ட அருமையான ஒற்றுமை யென்கிற தெய்வத்தை அடைவிக்கக்கூடிய மந்திரந்தான் மேலே காட்டிய வந்தேமாதரம் என்பது.[54]

ஜப்பானின் வெற்றியைச் சுட்டி, அவ்வெற்றிக்குக் காரணமான ஜப்பானியரின் ஒற்றுமையை எடுத்துரைத்து நம்மவர் பெறவேண்டி யது ஒற்றுமை உணர்வுதான் என்பதைப் புலப்படுத்தி, அந்த ஒற் றுமையை உருவாக்கக் கூடியது வந்தே மாதர மந்திரமே என்று முடித் திருப்பது வந்தேமாதரம் என்ற தாரக மந்திரத்தின் வல்லமையை - பேராற்றலை உணர்த்துவதாக அமைந்துள்ளது. தர்க்கரீதியாக, படிப்படியாக செய்திகளைச் சொல்லி இலக்கைப் புரியவைக்கும் எழுத்தாற்றலைக் கவிராயரிடம் காணமுடிகிறது. ஒற்றுமையைத் தெய்வமாக உருவகித்திருப்பது புதுமையானது; நினைந்து நினைந்து போற்றத்தக்கது.

நம் தேசத்து விளைபொருளைக் கொண்டு நம் தேசத்தில் செய் யப் பெற்ற பொருள்களை நாம் வாங்கி உபயோகிப்பது நம் கடமைதானே. இப்படிச் செய்வது நம் தேச முழுவதும் பரவு மானால் சகல பொருள்களும் நம் தேசத்தில் பெறலாமே.

> இதனால் கைத்தொழில், விவசாயம், வர்த்தகம் ஆகிய எல்லாம் நாளுக்கு நாள் அபிவிர்த்தியாகுமே. எத்தனையோ ஏழை ஜனங்கள் பிழைக்க வழியேற்படுமே. ஒவ்வொரு வருஷத்திலும் நாம் வாங்கும் அந்நிய நாட்டுப் பொருள்களுக்காக நம்மிடமிருந்து அந்நியரடையும் பொருளைக் கணக்கிட்டுப் பார்த்தால் வயிறு எரிகின்றதே.[55]

ஒரு தமிழ்ப்புலவரின் பொருளாதாரச் சிந்தனை நம்முள் வியப்பை ஏற்படுத்துகின்றது. தல புராணமும், தனிப் பாடல்களும், சாற்றுக் கவிகளும் எழுதிக் கொண்டிருந்த கவிஞர், தேசம் பற்றியும் தேசியம் பற்றியும் சுதேசியம் பற்றியும் சிந்திக்கவும் அதைப் பாமர மக்களும் புரிந்து கொள்ளும் வகையில் எழுதவும் முடியும் என்பதை வந்தே மாதரம் கட்டுரையின் மேற்கண்ட பகுதி பறைசாற்றுகிறது. ‘வயிறு எரிகின்றதே’ என்ற முடிப்பு, கவிராயர் என்ற நாட்டுப் பற்றாளரின் நெஞ்சக் குமுறலின் - அவருள் கனன்று கொண்டிருந்த விடுதலை வேட்கை என்னும் சத்திய ஆவேசத்தின் உயிர்த்துடிப்புள்ள வெளிப் பாடேயாகும்.

வந்தேமாதரம் என்பதைப் பலவாறு விளக்கிய கவிராயர் அதற்குப் புதியதொரு பொருளையும் கண்டறிந்து கூறியுள்ளார்:

> வந்தேமாதரம் என்பதைத் தமிழாக்கிப் பொருள் கொண்டாலும் இச்சமயத்துக்கு ஏற்றதாகவே இருக்கும். அதாவது வந்தேம் ஆதரம் எனப் பிரித்து ஆதரம் வந்தேம் என மாற்றி, ஆதரம் - அன்பினிடத்து, வந்தேம் - வந்து சேர்ந்தேம் எனக் கொள்ளல்தான்; நாம் எல்லாரும் சகோதரராக நினைக்கும் அன்பு என்கிற ஒரு இடத்தை வந்தடைந்தேம் என்பது கருத்து.[56]

‘தாயை வணங்குகிறேன்’ என்று பொருள்படும் வந்தேமாதரம் என்பதற்கு ‘நாம் எல்லாரும் சகோதரர் என எண்ணும் அன்பு’ என்றதொரு புதிய பொருளைத் தந்து, பங்கிம் சந்திரர் எண்ணியும் பாராததொரு புதிய நோக்கில் சிந்தித்து அப்பாடலுக்குப் புதுப்பெருமை சேர்க்கின்றார்; பாழ்பட்டுக் கிடந்த அன்றைய பாரத நாட்டின் விடியலுக்கு இன்றியமையாதது ஒற்றுமையே என்பதைத் தெளிவுறுத்துகிறார்.

கந்தசாமிக் கவிராயரின் வந்தேமாதரம் கட்டுரை ஒரு வரலாற்று ஆவணமாகும். இந்திய விடுதலை இயக்கத்தில் தமிழகத்தின்

பங்கு பற்றி ஆய்வு நிகழ்த்துவோர் தவறாமல் குறிப்பிடவும் பயன் படுத்தவும் வேண்டியதோர் படைப்பாகும்.

## மகமதிய மதமும் இந்திய ஜன சமூகமும்

இந்த நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளின் இந்திய விடுதலை இயக்கத் தலைவர்களில் ஒருவர் விபின சந்திரபாலர். வங்கத்தைச் சேர்ந்த இவர் இந்தியா முழுமையும் புகழ்பெற்று விளங்கியவர். இவர், சென்னை பால பாரத சங்கத்தின் அழைப்பிற்கிணங்கி 1907 இல் சொற்பொழிவாற்றுதற்குச் சென்னை வந்தார்.

'தூக்கத்திலே விருப்பம் கொண்ட சென்னை மாகாணத்தின் முகத்திலே தேசாபிமான ஜலத்தை வாரிக்கொட்டி எழுப்பிவிடும் பொருட்டாக பாபு விபின சந்திரபாலர் வந்துவிட்டார்' என்று பாரதி, இந்தியா இதழில் (20.4.1907) விபின சந்திரரின் வருகை குறித்து எழுதினார்.

இத்தகைய ஆற்றல் நிறைந்த பாலர், திருவல்லிக்கேணி கடற் கரையில் 1907 மேத்திங்களில் தொடர்ந்து ஆறு நாட்கள் (3.5. 1907 - 8.5.1907) ஆறு தலைப்புகளில் எழுச்சிமிக்க சொற்பொழிவு களை நிகழ்த்தினார்.[57] இவருடைய சொற்பொழிவுகள் சென்னையில் ஏற்படுத்திய தாக்கத்தைப் பற்றிப் பாரதி இந்தியா இதழில் (11.5. 1907) பின்வருமாறு வருணித்துள்ளார்:

> சென்னையிலே எங்கு பார்த்தாலும் விபின் சந்திர பாபுவைப் பற்றியே பேசுகிறார்கள். எங்கே கேட்டாலும் அவருடைய புகழ்ச்சி தான். தெருக்களிலே 'வந்தேமாதரம்' வெகு சாமானியமான வசன மாகி விட்டது.[58]

சென்னை மாகாணத்தையே தட்டி எழுப்பிய பாலரின் சொற் பொழிவுகளில் ஒன்றின் தமிழாக்கம் விவேகபாநுவில் வெளி வந்துள் ளது.[59]

மகமதிய மதமும் இந்திய ஜன சமூகமும் என்னும் தலைப்பில் அமைந்த அந்தக் கட்டுரையைத் தமிழாக்கியவர் ல. அனந்தையர் என்பவராவார்.[60] '1907ஆம் ஆண்டு மே மாதம் ஆம் தேதி செவ் வாய்க்கிழமை திருவல்லிக்கேணி பீச்சில் ஸ்ரீ விபின சந்திரபாலர் கொடுத்த பிரசங்கத்தின் சாராம்சம்' என்னும் முன்னுரையோடு கட் டுரை தொடங்குகின்றது. இந்திய தேசியத்திற்கு இசுலாத்தின்

பங்களிப்பைப் பற்றியும் இந்து முசுலீம் ஒற்றுமையின் தேவை பற்றியுமாக அமைந்த அச்சொற்பொழிவின் குறிப்பிடத்தக்க பகுதி பின்வருமாறு:

> நமது யோக்கியதை, அந்தஸ்து, சரிதை முதலியன மற்றெந்த தேசத்திலிருப்பது போலுமில்லை. ஆதலால் உலகத்திலுள்ள ஜனஸமூகத்தவருள் யாமும் ஒருவராய்ப் பிரகாசிக்க முயல வேண்டும். அப்படிப் பிரகாசிப்பதில் மகமதியர்கள் இந்துக்களோடும் இந்துக்கள் மகமதியரோடும் சேர்ந்து பிராதாக்கள் போலுழைக்க வேண்டும்; மாச்சல்லியங்களை யொழிக்க வேண்டும்; ஒருவருக்குப் பலவீனம் வந்தால் அது மற்றவருக்குமே; ஒருவருக்கு வலிமைவந்தால் அதுவும் மற்றவருக்குமே; இப்படியாகப் பாவித்து ஒன்று சேர்ந்து உழைப்பதனால் இந்திய நாகரிகத்தில் சிக்குமுக்கலிட்டுக் கிடக்கும் அமிசங்களைச் சீர்திருத்தி, நம்முடைய எதிரிகள் நம்மைச் செய்ய விரும்பும் தற்கால நிலைமைக்கு யாதொரு குந்தகமுமில்லாமல் இந்திய ராஜ்ஜீய விஷயங்களை எளிதில் போற்றிக் கொள்ளலாம்.[61]

விபின் சந்திர பாலரின் சொற்பொழிவுகளைத் தமிழாக்கம் செய்து வெளியிடுவதில் விவேகபாநுவைப்போலவே இந்தியாவும் ஆர்வம் காட்டியது. பாலரின் ஆறு பொழிவுகளையும் அது தமிழாக்கம் செய்து 'விபின் சந்திரபாலர் சென்னையில் செய்த உபன்னியாஸங்கள்' என்னும் தலைப்பில் வெளியிட்டது. 232 பக்கங்களைக் கொண்ட அந்நூல் ஏப்பிரல் 1908இல் சென்னையில் இந்தியா இதழின் அலுவலக வெளியீடாக வந்தது. விவேகபாநுவில் வெளிவந்த கட்டுரையின் தலைப்பு அத்தொகுப்பில் 'பாரத ஜாதீய வாழ்க்கைக்கு இஸ்லாம் மதத்தின் பேருதவி' என்று அமைந்துள்ளது (பக்.211 - 232).

அனந்தையரின் தமிழாக்கத்தோடு இந்தியா இதழின் மொழிபெயர்ப்பு ஒப்புநோக்கத் தக்கது. அவ்வாறு நோக்குவது ஒரே செய்தியை மொழிபெயர்த்த இருவேறு ஆசிரியர்களின் மொழி ஆளுமையையும் பயிற்சியையும் அறிய இயலும் என்பதோடு அந்நாளைய மொழிநடையையும் அது புலப்படுத்தும்.

## காங்கிரஸ் மகாசபை

இந்திய விடுதலை இயக்க வரலாற்றில் 1907ஆம் ஆண்டு ஒரு திருப்புமுனையாகும். 1885இல் தொடங்கப்பட்டு, தொடர்ந்து

ஒரே அணியாக இயங்கிவந்த காங்கிரசுப் பேரியக்கம் முதல் முறையாக 1907இல் சூரத் நகரில் நடந்த ஆண்டுக் கூட்டத்தில் பிளவு பட்டது; வேறுவேறு சித்தாந்தங்களின் அடிப்படையில் இரு பிரிவுகளாகத் தனித்தனியே செயல்படத் தொடங்கியது.

சிறப்புமிக்க சூரத் காங்கிரசின் நிகழ்ச்சிகளைத் தமிழ்நாட்டைச் சேர்ந்த மூவர் வரலாற்றுணர்வோடு தம் எழுத்துகளில் பதிவு செய்துள்ளனர். வ.உ.சி., பாரதியார், ம. கோபால கிருஷ்ண ஐயர்[62] ஆகியோரே அம்மூவர். சூரத் காங்கிரசில் நேரில் கலந்துகொண்ட இவர்கள் சென்னை திரும்பியதும் புதிய வரலாற்றை உருவாக்கிய சூரத் காங்கிரசு மாநாட்டின் நிகழ்வுகளைத் தத்தம் கோணங்களில் கட்டுரைகளாகவும் நூலாகவும் வெளியிட்டனர். தம்முடைய சூரத் அனுபவங்களை வ.உ.சி. கட்டுரையாக்கினார். அக்கட்டுரை இவருடைய மறைவுக்குப் பின்பே வெளிவந்தது. 'வ.உ.சி. கண்ட பாரதி' என்ற தலைப்பில் சிறுநூலாக அக்கட்டுரையை வெளியிட்டவர் வ.உ.சி.யின் மகனான வ.உ.சி. சுப்பிரமணியம்.[63] பாரதி சென்னை திரும்பியதும் விரைவிலேயே தம் பயண அனுபவங்களை 'எங்கள் காங்கிரஸ் யாத்திரை' என்ற பெயரில் நூலாக்கினார். வ.உ.சி.யின் கட்டுரையைவிடவும் விரிவான செய்திகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.' ம. கோபால கிருஷ்ண ஐயர், 'காங்கிரஸ் மகாசபை' என்னும் தலைப்பில் விவேகபாநுவில் பத்துப்பக்கங்களில் சூரத் நிகழ்ச்சிகளை விவரித்துள்ளார்.[64] இவருடைய கட்டுரையில் வரலாற்றுக் குறிப்புகள் சில இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று இங்குச் சுட்டத்தக்கதாகும்:

> பழைய கட்சியைச் சேர்ந்தோரும் திலகரிடம் முற்றிலும் விரோதம் கொண்டோருமாகிய சிலரால் ஜனங்களுக்குள்ளே ஆவேசத்தைக் கிளப்பும் பொருட்டுப் பின்வரும் கருத்தைக் கொண்ட துண்டுப் பத்திரிகை குஜராத்தி பாஷையில் பிரசுரிக்கப்பட்டு வந்திருந்த டெலிகேட்டுகளுக்கும் மற்றுமுள்ளோர்களுக்கும் கொடுக்கப்பட்டது.[65]

என்று கூறி, அந்தக் குஜராத்தி வெளியீட்டின் முழுமையான தமிழாக்கத்தையும் உடன் தந்துள்ளார். அந்த வெளியீட்டின் மிகவும் இன்றியமையாத பகுதி அறியப்பட வேண்டியதாகும்:

> சூரத்தார் சாதுக்களென்று திலகர் தமது பத்திரிகையில் கூறிய தன் உண்மையான பொருள் தெரியுமா? நாம் ஆண்மையற்றவர் கள் என்று குறிப்பிடுவதாகும். ஆகையால் உங்களுடைய வல் லமை எங்கே போய்விட்டது? சிவாஜி சூரத்தின்மேல் இரு முறை படையெடுத்து வந்து கொள்ளையடித்துவிட்டுப் போனான். போகும்போது இன்னுமொரு முறை கொள்ளையடிக்கத் திரும்பு வேன் என்று சொல்லிப் போனதை அறிவீர்களல்லவா? ஆனால் அப்படி அவன் வரவில்லை. அதற்குப் பதிலாக இப்போது திலகன் வந்திருக்கிறான். உங்களுடைய மூக்கையும் காதையும் சீவியெறிய வந்துவிட்டான்! இனிமேலாவது கிளம்புங்கள்![66]

கட்டுரையின் மேற்குறித்த செய்தி, மிதவாதிகள் திலகரிடம் கொண்டிருந்த எல்லையற்ற வெறுப்பையும் நிலைகடந்த காழ்ப்புணர் வையும் வெளிப்படுத்தி, விடுதலை இயக்க வரலாற்றின் ஒரு கால கட்டத்துப் போராட்ட நாட்களின் கறைபடிந்த நினைவுகளை - நமக்கு நாமே எதிராகிப்போன அவலங்களை நினைவுகூர்ந்து நம்முள் நெரு டலை ஏற்படுத்துகின்றது.

கட்டுரையை முடிக்கும்போது, 'வந்தேமாதரம்' இதழில் அரவிந்தர் எழுதியதை எடுத்துக்காட்டி நிறைவு செய்துள்ளார். கால மாற்றத்தை - அன்றைய தேவையான அரசியல் அணுகுமுறை மாற்றத்தை விளக்கி நிற்கும் அம்முடிவுரைப் பகுதி ஒரு காலகட்டத்து அரசியல் சூழலை அசைபோட வைக்கிறது:

> அனைவரும் கவனிக்க வேண்டிய அதிமுக்கிய விஷயம் ஒன் றுள்ளது. அஃதியாதெனில், 'வந்தேமாதரம்' சொல்லுகிறபடி,
>
> "தேசத்தின் நிலைமையானது திடீரென்று பழைய துறையை விட்டுப் புதியதுறையில் இறங்கும்பொழுது இப்படிப்பட்ட சங்கடங்கள் நேரிடவே செய்யும். ஐரோப்பிய நாடுகளில் நமது காங்கிரசினும் பெரிய சபைகளிலேயே அபிப்பிராய பேதங்க ளுண்டாகும்பொழுது இப்படிப்பட்ட குழப்பங்கள் மட்டுமல்ல, பலமான அடிபிடி கலகம் காயங்களே உண்டாகின்றன. இது வரையும் மிதவாதிகள் இந்தியரின் க்ஷேமத்திற்கென்று உழைத்து வந்த மார்க்கத்தைப் பொது ஜனங்கள் நம்பவில்லை. இப் பொழுது பொதுஜன அபிப்பிராயமே மிதவாத முறைகளுக்கு எதிராய் நிற்பதால் இப்படிப்பட்ட குழப்பங்கள் வராமலிருக்க முடியாது. ஆதலால், சும்மா அவன் கெடுத்தான் இவன் கெடுத் தான் என்று கூச்சலிடுவதைவிட இனிமேல் நடக்கவேண்டியது

> என்னவென்பதைப் பற்றி ஆலோசனை செய்பவர்களே தேசாபி மானிகள் ஆவர். பொது ஜனங்கள் இப்பொழுதிருக்கும் உண்மை நிலைமையை உற்றுணர்ந்து அவர்களுடைய அநுதாபத்தை யும் ஆதரவையும் அநுசரித்துக்கொண்டு செல்பவர்கள்தாம் ஜனத்தலைவர்களேயன்றிப் பொதுஜன அபிப்பிராயத்தைக் காலின் கீழ்த் தள்ளிவிட்டுத் தங்கள் மனோபீஷ்டப்படி காரியங் களைச் செய்ய விரும்புகின்றவர்கள் ஜனத்தலைமை பெற மாட்டார்கள்" என்பதே.[67]

ம. கோபாலகிருஷ்ண ஐயரின் கட்டுரை மற்ற இருவரின் படைப்பு களில் இல்லாத அரிய சில தகவல்களை உள்ளடக்கியதாக அமைந்து, விடுதலை இயக்கம் சார்ந்த சிந்தனைகளை நம்முன் கிளர்ந்தெழச் செய்கிறது; சூரத் காங்கிரசின் குழப்பங்கள் பற்றித் தெரிவிக்கும் மூன்று தமிழ்ப் படைப்புகளில் முதலாவதாக - அச்சில் வெளிவந்த தில் முதலாவதாகத் தோன்றி வரலாற்றில் இடம் பெறுகின்றது.

## ஜோசப் மாஜினி

மாஜினி - பத்தொன்பதாம் நூற்றாண்டு உலகிற்கு வழங்கிய கொடை; புதிய - ஒன்றுபட்ட இத்தாலியின் தந்தை; 'தேசியம் என்ப தற்குப் புதிய விளக்கத்தை அளித்த மேதை; விடுதலை உணர் வோடு கிளர்ந்தெழுந்த தேசிய இயக்கங்களுக்கு வழிகாட்டிய முன் னோடி; உலக வரலாற்றில் தடம் பதித்த தன்னேரில்லாத் தலைவர்.

மாஜினி - இந்திய விடுதலை இயக்கத்தின் தொடக்க நாட் களின் தாரகமந்திரம்; இந்திய இளைஞர்களின் உதடுகளிலும் உள் ளங்களிலும் உறவாடிக் கொண்டிருந்த பெயர். இந்திய விடுதலை இயக்கச் சிந்தனை மரபில் மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்திய தகைமையாளர்.

மாஜினியைத் தீர்க்கதரிசியாகவும் அவரது 'இளைய இத்தாலி' இயக்கத்தை முன்மாதிரியாகவும் போற்றியவரான சுரேந்திரநாத் பானர்ஜி அவரைப் பற்றிக் கூறியிருக்கும் கருத்துகள் அறியத்தக்கன:

> மாஜினியின் எழுத்துகள் என் மனத்தில் ஆழமான பாதிப்பை ஏற் படுத்தின. அவருடைய தூய்மையான நாட்டுப்பற்று, தன்னலம் மறந்த வாழ்க்கை, அவர் போற்றிய உயரிய கொள்கைகள், மனிதகுலத்தின் மேல் அவருக்கிருந்த அப்பழுக் கற்ற அன்பு,

> சொற்பொழிவுகளில் வெளிப்படும் அவருடைய சத்தியமான உள்ளம் இவை யாவும் என்னைப் பெரிதும் ஈர்த்தன. இதுவரையில் வேறு எதுவும் என்னுள் இந்த அளவு ஈர்ப்பை ஏற்படுத்தியது இல்லை.[68]

அரசியல் களங்களில் காணத்தகும் மிக உயர்ந்த ஒழுக்க நெறிகளின் ஒட்டுமொத்தமான உருவாக சுரேந்திரநாத் பானர்ஜியால் போற்றப்பட்டவர் மாஜினி. அவரை அறிந்துகொள்ளும் வாய்ப்பை, ஆங்கிலம் அறியாத வங்காளிகள் இழந்துவிடக் கூடாது என்பதற்காகத் தம்முடைய நண்பர்களைக் கொண்டு அவருடைய வரலாற்றையும் படைப்புகளையும் வங்கமொழியில் மொழிபெயர்க்கச் செய்தார். வங்காள இளைஞர்களிடையே மாஜினியை - அவர் சிந்தனைகளைப் பரப்பும் பணியைத் தாமே மேற்கொண்டார்.[69]

மாஜினி தமிழகத்திலும் வலம் வந்தார். இதழ்கள் அவரைப் பற்றி எழுதின; கவிஞர்கள் அவரைப் போற்றிப் பாடினர்; மேடை முழக்கங்களில் அவர் பெயர் ஒலித்தது; அவருடைய வாழ்க்கையும், சிந்தனைகளும் நூல் வடிவம் பெற்றன.[70] பாரதி தம்முடைய கவிதையில் மாஜினியை உயிர்ப்பொருளாக்கினார். 'மாஜினியின் பிரதிக்கினை'[71] என்னும் காலத்தால் அழியாத கவிதையைப் படைத்து மாஜினியிடம் தமக்கிருந்த பேரீடுபாட்டைப் புலப்படுத்தினார். பாரதியின் இந்தப் பாடலுக்கு விவேகபாநு,

> மாஜினி இத்தாலி தேசத்து 'யௌவன இத்தாலி' என்ற சங்கத்தில் செய்துகொண்ட பிரதிக்கினை அநேககாலம் ஆண்மைக் குணம் இழந்த அலிகளையும் அரைக்கணத்தில் அதிவீரனாக்கி விடுமென்பது சொல்லவும் வேண்டுமோ?[72]

என்று மதிப்புரை எழுதியது.

வங்காளம், தமிழகம் மற்றும் இந்தியாவின் பிறபகுதிகளிலும் இந்திய மக்களின் கனவுகளிலும் கற்பனைகளிலும் இலட்சியத் தலைவராக ஒளிர்ந்த மாஜினியைப் பற்றிய பாரதியின் கவிதைக்கு மதிப்புரை எழுதியதோடு விவேகபாநு நிறைவடையவில்லை. அவருடைய வரலாற்றையும் வெளியிட்டது.[73] அக்கட்டுரை வெறும் கதை சொல்லும் போக்கிலமையாது, அவரது வாழ்க்கையின் படப்பிடிப்பாகவே அமைந்தது. ஆங்காங்கே மாஜினியின் ஆளுமை புலப்படுமாறு அரிய தகவல்களையும் உள்ளடக்கியதாக அக்கட்டுரை விளங்குகிறது.

சிறையிலிருந்தும் தன் தேசத்தை மறவாமல் பிற்காலத்தில் தான் செய்யவேண்டிய காரியங்களைப் பற்றி யோசித்து யோசித்துத் தனக்குள் ஒருவித தீர்மானஞ் செய்தார். அஃதாவது, அயலா ருடைய உதவியைத் தேடுவது பிரயோசனமற்றது; தன் தேச மேம்பாடு தன் தேசத்தாராலேயே உண்டாக்கப்பட வேண்டும் என்பதே.[74]

'தன் தேச மேம்பாடு தன் தேசத்தாராலேயே உண்டாக்கப்பட வேண்டும்' என்னும் மாஜினியின் கருத்தின் உள்ளார்ந்த பொருளை, இந்திய விடுதலை இயக்கத்தின் பல்வேறு வழிமுறைகளில் ஒன் றாக இருந்த பிறநாட்டு உதவி பெறும் முயற்சிகளையும் அவற்றின் வன்மை மென்மைகளையும் நினைவு கூர்ந்தால் உணர முடியும்.

மாஜினி, 'இளைய இத்தாலி' என்றதோர் இரகசிய சங்கத்தைக் கூட்டினார். அதன் முக்கிய நோக்கங்களாவன:

இத்தாலி கொடுங்கோன்மையினின்று நீங்கி, பல அரசாட்சி களாயிருப்பன ஒரே ஐக்கியப்பட்ட தேசமாகி, தேச முழுதும் குடியரசு நிலையுற்றிருக்க வேண்டுமென்பதே.[75]

ஆங்கிலம் அறியாத தமிழர்கள் மாஜினியின் இளைய இத்தாலி பற்றியும் அதன் இலட்சியங்கள் பற்றியும் ஓரளவாவது அறிந்து கொள்ள மேற்கண்ட செய்தி துணை புரியும்.

காலத்தேவை உணர்ந்து, விடுதலை உணர்வு தமிழர் நெஞ்சங் களில் வீறுகொள்ள மாஜினி போன்ற மகத்தான மனிதர்களின் வரலா றுகளை அவ்வப்போது வெளியிட்டுத் தன் நாட்டுப்பற்றை அடையா ளங் காட்டியது விவேகபாநு.

## விவேகபாநுவில் வந்தேமாதரம் பாடல்கள்

வந்தேமாதர மந்திரத்தை விளக்கிக் கட்டுரை எழுதிய அதே இதழில் கந்தசாமிக் கவிராயர், 'வந்தேமாதர மந்திரச் செய்யுள்' [76] என்னும் கவிதையையும் வெளியிட்டார். வந்தேமாதரம் என்னும் தேசிய முழக்கத்தின் பெருமைகளை விளக்குவதாக அமைந்த அக்கவிதை தனித்தன்மை வாய்ந்தது.

பாரதியின் மனத்தில் இடம்பிடித்த அக்கவிதை அவருள் ஏற்படுத் திய உணர்வுகள் அருமையான பாராட்டுதலாக வெளிப்பட்டன.

பாரதி, காலத்தின் தேவையாகவும் ஒரு முக்கியமான அறிகுறியாக வும் அக்கவிதையைப் போற்றினார்; வரவேற்று மகிழ்ந்தார்.

> 'எல்லாரும் சகோதரரென்றே எண்ணச் செய்யும்' என்று தொடங் கிய இன்பம் நிறைந்த பாட்டிலே ஸ்ரீகந்தசாமிக் கவிராயர் விரும்பிக் கூறியிருக்கும் நோக்கங்களெல்லாம் நிறைவேறு வதற்குரிய காலம் பிறந்துவிட்ட தென்பதற்கு அவர் இவ்வாறு பாடியிருப்பதே முக்கிய அறிகுறியாக விளங்குகிறது.[77]

என்று இந்தியா இதழில் எழுதினார். பாரதி சுட்டிய பாடலின் முழு வடிவம் கீழே தரப்பட்டுள்ளது.

எல்லாருஞ் சகோதரரென் றெண்ணச் செய்யும்
எப்பொருளும் நம்தேசத் திருக்கச் செய்யும்
கல்லாரும் பலகலைகள் கற்கச் செய்யும்
கைத்தொழிலும் வர்த்தகமும் கதிக்கச் செய்யும்
நெல்லாதி விளைபொருள்கள் நிலவச் செய்யும்
நித்தமும் நம் பொருள் நமக்கே நிலைக்கச் செய்யும்
வல்லாண்மைப் போர்வெல்லும் வகையும் செய்யும்
வந்தே மாதரமெனுந்தாய் வணக்கந்தானே[78]

வந்தேமாதரச் செய்யுள் என்ற தலைப்பில் ஐந்து பாடல்களைப் பாடியுள்ளார் கவிராயர். அவற்றுள், மூன்றாவது பாடலையே பாரதி குறிப்பிட்டுள்ளார். எஞ்சிய நான்கு பாடல்களில் உயர்வான கருத் தமைந்த பகுதிகள் இங்குக் குறிக்கத்தக்கன:

சாதிமத பேதமெனும் பெருநோய் கொண்டு
தவிக்கு நமக் கிரங்கி..........

சாதி, மத உணர்வுகளைப் 'பெருநோயாக'க் கற்பனை செய்திருப் பது சுவை பயப்பதாகும். ஆண்டாண்டு காலமாகச் சாதியும் மதமும் இந்தியத் திருநாட்டை அரித்து வருவதை - அழித்து வருவதை மனத்தில் இருத்தி அவற்றைப் பெருநோயாகக் குறித்திருப்பது கரு தத் தக்கதாகும்.

................ எதிர்த்தோ ருள்ளம்
புழுங்கிநடு நடுங்கவென்று புரப்ப தாகும்

மாதிரம்விண் புவிமுழுதும் முழக்கஞ் செய்யும்
வந்தே மாதரம் எனுந்தாய் வணக்கந்தானே

இவ்வடிகள் வந்தேமாதரம் என்னும் மந்திரத்தின் பேராற்றலை உன்னதமான வலிமையை மிகச் சிறப்பாக வெளிப்படுத்துகின்றன.

தந்தேகத் தினிலொருசாண் கும்பிக்காகத்
தருஞ் சோற்றுச் சிறுதொழிலே தகவா எண்ணிச்
சந்தேகத் துடன்பயந்து தாயை வேண்டா
சழக்குரையைப் புறந்தள்ளித்தருமம்பேணி
நம்தேசம் செழிப்பெய்த நமது செல்வம்
நம்மிடத்தே நிலைத்திருக்க நாடிக் கூடி
வந்தே மாதரம் என்று சொல்வோம் வெல்வோம்
மாணவர்காள் சுதேசத்தாய் மலர்த்தாள் போற்றி

உயிரோட்டமான இப்பாடல் பாரதி கூறியதுபோல உண்மையிலேயே 'ஒரு முக்கியமான அறிகுறி'யாகவே - இந்திய வரலாற்றில் நேர்ந்த ஒரு புதிய திருப்பத்தின் அறிகுறியாகவே - கந்தசாமிக் கவிராயரின் வந்தேமாதரச் செய்யுளை அடையாளம் காட்டுகிறது.

## அரசஞ்சண்முகனாரின் பாடல்

புகழ்பெற்ற இலக்கண வித்துவானாகிய சோழவந்தான் அரசஞ் சண்முகனாரும் வந்தேமாதரத்தின் பெருமைகளை நான்கு பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளார். அதே இதழில் கவிராயரின் பாடல்களை அடுத்து இவருடைய பாடல்கள் இடம் பெற்றுள்ளன. சண்முகனாரின் பாடல்களையும் பாரதி வியந்து பாராட்டியுள்ளார்:[79]

வந்தேமா தரமென்னும் மந்திரத்தா
லெய்தாத வரமு மில்லை
நந்தேய மக்களுக்கு நலந்தருவ
திதுபோலெந் நாட்டு மில்லை
முந்தேயு மந்திரம்போ லொரு சிலர்க்கே
யாவனெறு முற்றுமாகும்
வந்தேற்றுக் கொண்மினெல்லா வாழ்வுக்கும்
வித்துதான் மறக் கொணாதே

என்னும் பாடலை எடுத்துக்காட்டி அரசஞ்சண்முகனாரைப் பின்வரு மாறு போற்றி மகிழ்கின்றார்:

> இது ஆகுபெயரா? அன்மொழித் தொகையா? தொல்காப்பியத் திற்கு இவ்விடத்தில் நச்சினார்க்கினியர் கூறிய உரை பொருந் துமா? பொருந்தாதா? என்பது போன்ற இலக்கண விவகாரங் களைச் சிறிது அகற்றி வைத்துவிட்டு இந்த வித்துவான், 'வந்தே மாதரம் என்னும் மந்திரத்தால் எய்தாத வரமுமில்லை' என்று பாட்டியற்றத் தொடங்கிவிட்டார். கல்வித்தாய்க்கு மட்டிலுமே இதுவரை வழிபாடு இயற்றிவந்த இவர் இப்போது பூமித் தாய்க்குத் தொண்டுபுரிவது அதைக் காட்டிலும் உயர்வாகு மென்பதை அறிந்து கொண்டார். இதுவெல்லாம் காலமாறு பாட்டை உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்குகின்றது.[80]

மலையே புரண்டாலும் தம் கல்வியினின்றும் கருத்தை அகல விடாத இயல்பினராகிய அரசஞ்சண்முகனார் போன்ற தமிழ்ச் சான் றோர் மொழி உணர்வைக் கடந்து நாட்டுணர்வுச் சிந்தனையோடு வந்தேமாதரம் பற்றிப் பாடத் தொடங்கியமை, 'கால மாறுபாட்டை உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்குகின்றது' என்னும் பாரதியின் கூற்று, அவரது தொலைநோக்குச் சிந்தனையின் வெளிப்பாடாகும்.

கந்தசாமிக் கவிராயர், அரசஞ் சண்முகனார் ஆகிய இருவருக் கும் முன்பே வந்தேமாதரம் பற்றிப் பாரதி ஒரு கவிதை புனைந்தார். அது சக்ரவர்த்தினி இதழில் 1906 பிப்பிரவரியில் வெளிவந்தது. இம்மூவருடைய கவிதைகளையும் ஒப்பிட்டு மூன்றில் சிறந்தது எது என்னும் தம்முடைய கருத்தை பெ.சு. மணி வெளியிட்டுள்ளார்:

> இம்மூவரில் கந்தசாமிக் கவிராயரின் கவிதையில் வந்தே மாத ரத்தின் மாண்புகள் சற்று விரிவாக, அழுத்தமாக இசைக்கப் பட்டுள்ளன. 'எதிர்த்தோருள்ளம் புழுங்கி நடுநடுங்கவென்று புரப்பதாகும்' என்னுமிடமும், 'ஒரு சாண் கும்பிக்காகத் தருஞ் சோற்றுச் சிறுதொழிலே தகவா எண்ணிச் சந்தேகத்துடன் பயந்து தாயை வேண்டார், சழக்குரையைப் புறந்தள்ளி' என்னு மிடமும் கந்தசாமிக் கவிராயரின் கவிதையை உயர்த்தி விடு கின்றன.[81]

பாரதி, கவிராயர், சண்முகனார் ஆகிய மூவரின் கவிதைகளை யும் படிப்பவர்கள் பெ.சு. மணியின் கூற்றிலுள்ள உண்மையை விளங் கிக் கொள்ள முடியும்.

## விவேகபாநுவில் வ.உ.சி.

வ.உ.சி.யின் எழுத்து வாழ்க்கைக்குக் களம் அமைத்துக் கொடுத்தது விவேகபாநுவேயாகும். இவருடைய ஆன்மிக எழுத்துப் பணி, முதல் கட்ட விவேகபாநுவில் தொடங்கியதைப் போலவே, அரசியல் சார்ந்த சிந்தனைகளின் வெளிப்பாட்டுக் களமாக மதுரை விவேகபாநு அமைந்தது. இவருடைய முதல் அரசியல் கட்டுரையான 'சுதேசாபிமானம்' (பிப்பிரவரி 1906, பக். 44-50) இவ்விதழிலேயே வெளிவந்தது. இதுபற்றி முன்னரே விரிவாக எடுத்துரைக்கப் பட்டுள்ளது.

மதுரை விவேகபாநுவில் வெளிவந்த வ.உ.சி.யின் கட்டுரை இது ஒன்றேயாகும். இது தவிர, 'சுதேசஸ்டீமர் விஞ்ஞாபனம்' என்னும் தலைப்பில் (ஆகஸ்டு - நவம்பர் 1906, பக். 294-297) வேண்டுகோள் ஒன்றும் வெளியாகியுள்ளது. தூத்துக்குடியில் கப்பல் கம்பெனி தொடங்கப்பட்டது பற்றியும், இந்தியர்கள் கடல் வாணிபத்தில் ஈடுபட வேண்டியதன் தேவை பற்றியும் எடுத்துரைத்து, கப்பல் கம்பெனியின் பங்குகளைச் சுதேச உணர்வுடைய மக்கள் வாங்கித் திட்டம் வெற்றிபெற உதவவேண்டும் என்ற வேண்டுகோளை முன்வைத்து, கப்பல் கம்பெனியின் வரவு செலவு விவரங்களையும் அவ்விண்ணப்பத்தில் தெளிவாகக் குறித்துள்ளார்.

'ஈகை (சனவரி 1904, பக். 18-19), 'அன்பு' (ஏப்பிரல் 1904, பக். 154-155), 'உண்மை' (மே 1904, பக். 183-184) என்னும் தலைப்புகளில் அமைந்த வ.உ.சி.யின் மூன்று கவிதைகள் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன. ஈத்துவத்தல், அன்புகாட்டுதல், உண்மையே பேசுதலின் உயர்வு இவற்றின் மேன்மைகளைத் தம் கவிதைகளின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். வ.உ.சி.யின் முதல் கவிதை மதுரை விவேகபாநுவில் வெளிவந்ததைப் போன்று, பாரதியின் முதல் கவிதையும் இவ்விதழிலேயே வெளிவந்தது. வ.உ.சி., பாரதி இருவர் தம் முதல் கவிதைகளையும் வெளியிட்டதன் வாயிலாக மதுரை விவேகபாநு வரலாற்றில் இடம் பெற்றது. பாரதியின் முதல் கவிதை வெளியாவதற்கு முன்பே வ.உ.சி.யின் மூன்று கவிதைகள் வெளிவந்துவிட்டன என்பது ஈண்டுத் தனித்துச் சுட்டத் தக்கது.

விவேகபாநுவின் வளர்ச்சியில் ஆர்வம் காட்டியவர் வ.உ.சி. அந்த இதழ் தொடங்கிய நாளிலிருந்து அதன் வளர்ச்சிக்காக ஆண்டு

தோறும் ரூபாய் பத்து நன்கொடையாக வழங்கினார்.[32] 1905 முதல் அதைப் பன்னிரண்டு ரூபாயாக உயர்த்தி அளித்தார்.[33]

விவேகபாநுவிற்கு எனத் தனியே சொந்தமாக அச்சகம் ஒன்றை ஏற்படுத்த கந்தசாமிக் கவிராயர் முயன்றபோது அதற்குப் பெரிதும் உதவியவர் வ.உ.சி. இதைப் பின்வருமாறு தெரிவித்துள்ளார் கவி ராயர்:

> கடந்த 3 வருஷகாலமாக மாசந்தோறும் காலந் தாழ்த்தாது வெளியேறிய நமது விவேகபாநுப் பத்திரிகையானது தனது 5ஆவது வயது ஆரம்பத்தில் 6வாரம் தாமதமாக வருவதைப் பற்றி விசனிக்கின்றோம். தாமத காரணத்தை நினைத்தால் எமக் குக் கவலை உண்டாவதன்றிச் செய்யத்தக்க தொன்றில்லை. இத்தகைய துன்பசாகரத்தைக் கடப்பதற்காகவே இப்போது விவேகபாநுவின் பெயரால் ஓர் அச்சியந்திரசாலை ஸ்தாபித் திருக்கிறோம். இதற்கு எமது வேண்டுகோளுக்கு இணங்கிப் பேருதவி புரிந்த பாநுவின் நிரந்தர போஷகர்களாகிய ஸ்ரீமாந் தி. மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கட்கும், ஸ்ரீமாந் வ.உ.சிதம் பரம் பிள்ளையவர்கட்கும் வந்தனஞ் செலுத்துகிறோம்.[34]

வ.உ.சி.யைப் பற்றிய அரிய குறிப்பொன்றும் விவேகபாநுவில் காணப்படுகிறது.

> தமிழ் வித்வான்கட்குத் தாய் போன்ற பரோபகாரியும் நூலாராய்ச்சியிலேயே நெடுநேரம் போக்கி மகிழ்பவருமாகிய ஸ்ரீமாந் வ.உ. சிதம்பரம் பிள்ளையவர்கள்.[35]

இவ்வரிகள், வள்ளல் வ.உ.சி.யையும் அறிஞர் வ.உ.சி.யை யும் அடையாளம் காட்டவல்லன. வ.உ.சி.யின் ஒரு காலகட்டத்துச் செல்வநிலையை வந்தபுலவர்க்கெல்லாம் வாரிவழங்கிய வளமார் நிலையைச் சுட்டிக்காட்டும் இச்செய்தியைப் படிக்கும் அதே வேளை யில், வ.உ.சி.யின் பிற்கால வாழ்க்கையில் வளமெலாம் தொலைந்து, வறுமையின் பிடியில் சிக்கி உழன்ற பரிதாப நிலையையும் அறிந்து கொள்வது ஒரு மாபெரும் தலைவனின் மாட்சியையும் கால ஓட்டத் தில் அத்தலைவன் சந்திக்க நேர்ந்த அவலங்களையும் வரலாற்று அடிப்படையில் புரிய வைக்கும்.

> வந்த கவிஞர்க்கெல்லாம் மாரியெனப் பல்பொருளும்
> தந்த சிதம்பரம் தாழ்ந்தின்று – சந்தமில் வெண்

> பாச் சொல்லிப் பிச்சைக்கும் பாரெல்லாம் ஓடுகின்றான்
> நாச்சொல்லும் தோலும் நலிந்து[36]

என்னும் பாடல் - தம்மைப்பற்றி வ.உ.சி.யே பிற்காலத்தில் எழுதிய பாடல் - வ.உ.சி.யின் வளமைக்கால - வறுமைக்கால அடையாளமாக வரலாற்றில் நிலைத்துவிட்டது.

## விவேகபாநுவில் பாரதியார்

பாரதியின் கவிதையை முதன்முதலில் அச்சில் வெளிக்கொணர்ந்த சிறப்பு விவேகபாநுவிற்கே உரியதாகும். 'தனிமையிரக்கம்' என்ற தலைப்பில் அமைந்த இக்கவிதை 1904 சூலை இதழில் (ப.273) இடம்பெற்றது. பழைய மரபில் அமைந்த இக்கவிதை பாரதியின் தொடக்க காலப் படைப்புத் தன்மையை அறியத் துணை செய்யும்.

இக்கவிதை விவேகபாநுவில் வெளிவந்தபோது பாரதியின் மதுரை வாழ்க்கை தொடங்கவில்லை. 1904 ஆகஸ்டில்தான் மதுரை சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் பணியில் சேர்ந்தார் பாரதி. மதுரையில் பள்ளிப்பணியில் சேரும் முன்பாகவே கந்தசாமிக் கவிராயரும் பாரதியும் அறிமுகமானவர்கள் என்பதை இக்கவிதை வெளியீட்டின் மூலம் அறிய முடிகின்றது. இவர்தம் நட்பின் தொடக்கம் இதுவரையில் அறியப்படாததாகவே உள்ளது.

1904 முதல் கவிராயர், பாரதி இடையேயான தொடர்புகளை ஓரளவாவது அறிய முடிகின்றது. பாரதி, வ.உ.சி. நட்பு 1906ஆம் ஆண்டிலும்,[37] பாரதி, சிவம் நட்பு 1908ஆம் ஆண்டிலும்[38] தொடங்கின. இந்தத் தகவல் இவர்தம் வரலாறுகளை எழுதுவோருக்குப் பல நிலைகளிலும் பயன்படவல்லது. அதுபோன்றே பாரதி, கவிராயர் நட்பின் தொடக்கத்தை அறிய இயலுமாயின் அவ்விருவர்தம் வரலாறுகளில் காணப்படும் இடைவெளிகள் சிறிதளவாவது குறையும்.

## சக்ரவர்த்தினி – இதழ் அறிமுகம்

பாரதியை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த 'சக்ரவர்த்தினி' இதழ் பற்றிய மதிப்புரை விவேகபாநுவில் வெளிவந்துள்ளது.[39]

> இப்புதிய மாதாந்தரப் பத்திரிகை சென்னையிற் சென்ற ஆகஸ்டு மாதம் தோன்றி விளங்கி வருகின்றது. தமிழ்நாட்டு மாதர்களின்

அபிவிருத்தியே இதன் முக்கிய நோக்கம். மாதர் விஷயமான பத்திரிகை தமிழில், 'மாதர் மனோரஞ்சினி', தமிழ்மாது என இரண்டே இதுகாறுமிருந்து வருகின்றன. இனிச் சக்ரவர்த்தினி சேர்ந்து மூன்றாகும். பெண்கல்வி குறைவாயிருக்கும் இந் நாட்டில் மாதர்களுக்கென்று எத்துணை பத்திரிகையுண்டானாலும் உத்தமமே. இதன் நடை எளிதாகவும் இனிதாகவுமிருக்கின்றது. மிஸ்டர் சுப்பிரமணிய ஐயர் அவர்கள் 'அரசனும் குடிகளும்' என்ற விஷயத்தைப் பற்றிப் பெண்களுக்கேற்பச் சிறு வியாசம் ஒன்று எழுதியுள்ளார்கள். இதன் பத்திராசிரியராகிய மிஸ்டர் ஸி. சுப்பிரமணிய பாரதியவர்களின் நன்முயற்சி மேம் மேலும் ஓங்கி வளரும் வண்ணம் திருவருளின் திருவடிகளைப் பிரார்த்திக்கின்றோம். நம்நாட்டுக் கன தனவான்கள் இதனை ஆதரிப்பார்களாக. ராயல் 24 பக்கம் கொண்ட இதன் வருஷ சந்தா ரூ. இரண்டே.

பத்திராதிபர்.

## இந்தியா – இதழ் அறிமுகம்

பாரதியின் வாழ்வில் இரண்டறக் கலந்த இதழான இந்தியா வெளியானபோது, விவேகபாநு பின்வருமாறு அதை அறிமுகப்படுத்தியது:

பத்திரிகை வரவு

இந்தியா என்ற புதிய தமிழ்ப் பத்திரிகை

இப்பெயர் புனைந்த ஒரு புதுத் தமிழ்ப் பத்திரிகை பிரதி புதன் கிழமைதோறும் சென்னையில் பிரம்மவாதின் அச்சாபீஸில் வெளிப்படுத்தப்பட்டு வருகிறது. இப்பத்திரிகை நமக்கு அனுப்பியதற்காக நாம் பத்திராதிபருக்கு மிக்க வந்தனம் செலுத்துகின்றோம்.

இது பிரிண்டிங் டெமியில் 16 பக்கங் கொண்டது. காகிதமும் அச்சும் கண்டோர் கண்களைப் பறிக்கத்தக்கனவாக இருக்கின்றன. விஷயமும் தெளிவாயும் அழகாயும் எழுதப்பட்டிருக்கின்றது. நடை, வாசிப்பவருக்கு இன்பம் பயக்காமலிராது. நாட்டு வளப்பங்களை நன்குணர்ந்து எழுதிவருவதால் இப் பத்திரிகை சீக்கிரம் பரவி ஜனங்களுக்கு மிக்க நன்மை உண்டாக்குமென்பது திண்ணம். நாட்டின் சீர்திருத்தங்களுக்கு வேண்டிய அரிய விஷயங்கள் பல காணப்படுகின்றன.

> இம்மாதிரியாகவே ஊக்கந்தாழ்வின்றி இப்பத்திரிகை நடை பெறும்பட்சத்தில் கூடிய சீக்கிரம் வாரம் மும்முறை பிரசுரமாகும் பத்திரிகையாகிப் பின் தினசரிப் பத்திரிகையாகவும் வருமென் பதற்கும் பல அறிகுறிகள் காணப்படுகின்றன. பொதுஜன அபிவிருத்தியைத் தேடும் பல கனதனவான்கள் இதனை ஆதரித்துக் கைதூக்கி விடுவார்களாக. இப்பத்திரிகை நீடூழி வாழ்க.
>
> பத்திராதிபர்[90]

சக்ரவர்த்தினி இதழை அறிமுகம் செய்து எழுதியபோது,'இதன் பத்திராசிரியராகிய மிஸ்டர் ஸி. சுப்பிரமணிய பாரதியவர் களின் ...... ' என்று பாரதியை இதழின் ஆசிரியராகக் குறித்துள்ள கவிராயர், இந்தியாபற்றி எழுதும் போது, இவர் பெயரை எங்கும் குறிப்பிடாமை எண்ணத்தக்கது. இந்தியா இதழ் தொடங்கப்பட்ட போது (மே 1906) பாரதி அதன் ஆசிரியராக இல்லை என்பதையே இது உணர்த்துகிறது.

## சுதேசகீதங்கள் – மதிப்புரை

'புத்தகக் குறிப்பு' என்ற தலைப்பில் நூல் மதிப்புரைகள் பல வாக விவேகபாநுவில் வெளிவந்துள்ளன. அவற்றுள், பாரதியின் புகழ்பெற்ற 'சுதேசகீதங்கள்'[91] நூலுக்கான மதிப்புரை குறிப்பிடத் தக்கதாகும். விவேகபாநுவின் இம்மதிப்புரை பாரதியின் வரலாற்றில் பதிவு செய்யப்படவேண்டிய ஒன்றாகும். இதுவரையில் வெளிவந் துள்ள பாரதி ஆய்வுகள் எதிலும் இடம்பெறாத இம்மதிப்புரை, அதன் தனித்தன்மை கருதி இங்கு முழுமையாகத் தரப்படுகிறது:

### சுதேச கீதங்கள்

> ஸ்ரீசுப்பிரமணிய பாரதியவர்களால் வெளியிடப்பட்ட சுதேச கீதங்களை ஒருமுறைக்கிருமுறையும் மும்முறையும் படித்துப் பெருங்களிப்படைந்தோம். பயில்தொறும் பயில்தொறும் புதிது புதிதாய் இன்பம் பெருகுகின்றது. செந்தமிழ் மணம் செவ்வனே பொருந்தியுள்ளது. சுதேசக் கிளர்ச்சி, சுயராஜ்ஜியம் என்னும் வான்பயிர்களைத் தமிழர் மனத்தே வளரச் செய்வதற்கு இவைகள் இன்றியமையாத கதிரொளி போன்றிலங்குகின்றன. ஒற்றுமையோம்பல், தனக்கென உழைத்தல் தகாதென்று கொண்டு பிறர்க்கென உழைக்கும் பெருந்தகைமை, தேசம்

நன்மை பெறுகவென்று துன்பஞ் சுமந்தார்மீது இடையறா அன்பு முதலிய உத்தம அறங்கள் பலவும் கீதங்களின் இடையிடையே பார்த்தோர் வியந்தோதும்வண்ணம் செறிந்துகிடத்தல் படிப்பவர்க்கினிது விளங்கும்.

அரிய கல்வியும் பெரிய உழைப்பும் உடைய ஆன்றோர் உரைத்த ஆப்த வாக்கியங்களனேகம் எளிதிற் சாதாரண மாந்தரும் அறிந்துகொள்ளும்படி தேனினும் இனிய செந்தமிழ்க் கீதங்களால் வெளியிட்டது தமிழுலகுக்குப் புரிந்த பேருதவியென்று யாவராலும் கொள்ளப்படும் என்பதில் ஐயமில்லை.

**முப்பது கோடியும் வாழ்வேம் – வீழில்**
**முப்பது கோடி முழுமையும் வீழ்வேம்**

என்ற கீதத்தைப் பாடக் கேட்டும் தன் தாய்த் தேசத்தின்மீது அன்பு சுரக்கப் பெற்றிலரேல் அவர் இருந்தாலென், இறந்தாலென்? இந்தியர் மனவுறுதியும் தேசத்தின் மீதுள்ள ஆர்வமும் தன்னரசு அடையும்வரை அதனால் வரும் கட்டங்களைச் சகிக்கும் ஆற்றலும் மேற்காட்டிய இரண்டு வரிகளினும் பொலிந்து மிகவும் அழகு செய்கின்றன.

'மாயையைப் பழித்தல்', 'கிருஷ்ணார்ச்சுன தரிசனம்' முதலிய கீதங்கள் தொடுமணற்கேணி போன்று "அறிதோர் அறியாமை யென்னும்" மறைப் பொருளை இனிது விளக்குகின்றன.

...எமது பாரத நாட்டுப்
பெண்பல்லார் வயிற்றினுமந் நவுரோஜி
போற்புதல்வர் பிறந்து வாழ்க.

என்னும் கருத்துடைப் பாட்டு தமிழிற்கே புதுவதாய்த் தென்று பலரும் எளிதிற் கண்டு கொள்ளற் கிசையும் 'நடிப்புச் சுதேசி', 'மேத்தா திலகருக்குச் சொல்லுவது' முதலிய கீதங்கள் சங்கீதத்துடன் பாடின் கேட்பவர் மனத்தைப் பரவசப்படுத்தும் என்பது திண்ணம்.

மாஜினி இத்தாலி தேசத்து 'யௌவன இத்தாலி' என்ற சங்கத்தில் செய்து கொண்ட பிரதிக்கினை அநேக காலம் ஆண்மைக் குணம் இழந்த அலிகளையும் அரைக்கணத்தில் அதிவீரனாக்கி விடுமென்பது சொல்லவும் வேண்டுமோ?

மற்றை நாட்டவர்முன் னின்றிடும் போழ்து
மண்டுமென் வெட்கத்தி னாணை
வேற்றுநா டுகளில் அவர்துரத் துண்டு
மெய்குலைந் திறந்துமே படுதல்
ஆற்றகி லாராய் எம்மரு நாட்டின்
அன்னைமா ரழுங்கண்ணீ ராணை

என்னும் வரிகள் யாவரைத்தான் வீராவேசமடையும்படி செய்யாது. இதனினும் தெளிவாய்ச் சொற்களாற் சித்திரிப்பது மிகவும் அருமை.

மனமெனும் சுவரில் மதியெனும் கோல் கொண்டு தீட்டிய சித்திரம் சுவருள்ள காலம்வரை துலங்குமென்பது சொல்லவும் வேண்டுமோ? சுதந்திரம் வேண்டித் தோல்வியில் சண்டை விதந்துமே செய்பவர் வீழினும் வீழுவர். அவர் மகார் அன்னார் ஆணை சிரமேற்கொண்டு வெற்றிபெறுதலும் காலக்கிரமத்தில் நடப்பது தானே. அதனால், மேற்கூறிய பயிர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து தக்க காலத்தில் மிக்க விளைவினைக் கொடுக்கும்படி செய்யும் ஒவ்வொரு வகையுபாயமும் அன்பு பாராட்டத்தக்கதே.

பத்திராதிபர்[92]

விவேகபாநுவில் வெளிவந்த இந்த மதிப்புரை பாரதிக்குக் கிடைத்த - பாரதியின் கவிதைகளுக்குக் கிடைத்த - அவர் வாழ்ந்த காலத்தில் நூல் வெளிவந்த உடனேயே கிடைத்த மகத்தான பாராட்டுதலாகும்; மதிப்புரை என்ற பெயரில் அமைந்த மிகச் சிறந்த திறனாய்வாகும். 'ஒருமுறைக் கிருமுறையும் மும்முறையும் படித்துப் பெருங்களிப்படைந்தோம்' என்றும், 'பயில்தொறும் பயில்தொறும் புதிதுபுதிதாய் இன்பம் பெருகுகின்றது' என்றும் தொடங்கும் சுதேசகீதங்களின் மதிப்புரை நம்முள் வியப்பை மலர்விக்கின்றது. 'சுதேசக் கிளர்ச்சி, சுயராஜ்ஜியம் என்னும் வான் பயிர்களைத் தமிழர் மனத்தே வளரச் செய்வதற்கு இவைகள் இன்றியமையாத கதிரொளி போன்றிலங்குகின்றன' என்னும் வரி கவிஞரின் மனத்தை - கவிதையின் நோக்கத்தை மிகத் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டுகிறது.

முப்பது கோடியும் வாழ்வோம் – வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம்

> என்ற கீதத்தைப் பாடக்கேட்டும் தன் தாய்த்தேசத்தின்மீது அன்பு சுரக்கப் பெற்றிலரேல் அவர் இருந்தாலென், இறந்தாலென்?

என்னும் பகுதியும்

> மாயையைப் பழித்தல், கிருஷ்ணார்ச்சுன தரிசனம் முதலிய கீதங்கள் தொடுமணற்கேணி போன்று அறிதோர் அறியாமை யென்னும் மறைப்பொருளை இனிது விளக்குகின்றன

என்னும் பகுதியும்

> மாஜினி இத்தாலி தேசத்து 'யௌவன இத்தாலி' என்ற சங்கத்தில் செய்துகொண்ட பிரதிக்கினை அநேககாலம் ஆண்மைக் குணம் இழந்த அலிகளையும் அரைக் கணத்தில் அதிவீர னாக்கி விடுமென்பது சொல்லவும் வேண்டுமோ?

என்னும் பகுதியும் கவிதைகளைப் படைத்தவரையும் அவற்றைப் படித்து அவற்றில் ஆழ்ந்து, தோய்ந்து, உணர்ந்து உணர்ந்து ரசித்த வரையும் மிக உயர்ந்த நிலையில் அடையாளம் காட்டுகின்றன. தமிழகத்தின் தலைசிறந்த கவிஞர் ஒருவரைப் பற்றிய மிகச் சிறந்த மதிப்பீடாக இது அமைந்துள்ளது.

பாரதி வாழ்ந்த காலத்தில் வெளிவந்த முதல் திறனாய்வான இம்மதிப்புரை எழுதியவரின் உளப்பாங்கையும் எழுத்து வன்மையை யும் புலப்படுத்தி அவரைப்பற்றி அறியும் ஆர்வத்தைத் தூண்டுகிறது.

1907 டிசம்பர் இதழில் வெளியாகியுள்ள இந்த மதிப்புரையை எழுதியவர் யார் என்பது அறியப்பட வேண்டிய ஒன்றாகும். கந்த சாமிக் கவிராயரும் எஸ். சாமிநாதய்யரும் விவேகபாநுவின் பத்திராதி பர்களாக இருந்தனர் என்றாலும், கந்தசாமிக் கவிராயரே அறிவித் துள்ளபடி, 1907ஆம் ஆண்டில் விவேகபாநுவில் வெளிவந்த அனைத் திற்கும் - 'பத்திராதிபர்' என்ற பெயரில் வெளிவந்த படைப்புகள் உட்பட - அனைத்திற்கும் பொறுப்பு எஸ். சாமிநாதய்யரேயாவர்.[93] எனவே, பத்திராதிபர் பெயரில் டிசம்பர் 1907இல் வெளிவந்த பாரதி யின் சுதேச கீதங்களுக்கான மதிப்புரையை எழுதிய பெருமை எஸ். சாமிநாதையருக்கே உரியதாகும்.

எஸ். சாமிநாதையர் மதுரை சேதுபதி உயர்நிலைப்பள்ளியில் 1902 முதல் பணியாற்றி வந்தவர். பாரதி 1904இல் (1.8.1904 முதல் 10.11.1904 வரை) சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழா

சிரியப் பணியில் இருந்தவர்.[94] சில மாதங்களேனும் தம்முடன் இணைந்து பணியாற்றிய பாரதியை ஓரளவாவது உள்ளும்புறமுமாக அறியக்கூடிய வாய்ப்பு எஸ். சாமிநாதையருக்கு அமைந்திருக்கக் கூடும். பாரதியின் கனவுகளையும் கற்பனைகளையும் ஆவேசங் களையும் தொடக்க நிலையிலாவது நேரில் அறிந்துகொள்ளக்கூடிய வாய்ப்பும், சுதேசமித்திரனிலும் சக்ரவர்த்தினியிலும் இந்தியாவிலும் வெளிவந்த அவருடைய படைப்புகளைப் படித்தறியும் வாய்ப்பும் அமையப்பெற்றவராக இருந்தமையால்தான் சாமிநாதையரின் மதிப் புரை உயிரோட்டமுள்ளதாகவும் பாரதியின் கவிதைகளைப் போலவே கலைத்தன்மை வாய்ந்ததாகவும் காலத்தை வென்று நிற்பதாகவும் தனித்தன்மையுடன் இலங்குகின்றது.

இன்றுவரையில், பாரதியின் சுதேச கீதங்களுக்கென்று எழுதப் பட்ட ஒரே மதிப்புரையாகக் கருதப்படுவது மு. இராகவையங்கார் 'செந்தமிழ்' இதழில் 'புத்தகக் குறிப்பு' என்னும் பகுதியில் எழுதிய மதிப்புரையேயாகும்.[95] விவேகபாநுவில் எஸ். சாமிநாதையர் எழுதிய மதிப்புரையோடு ஒப்பிட்டு ஆராயும் நோக்கில் அம்மதிப்புரை இங்கு முழுமையாக எடுத்தாளப்பட்டுள்ளது.

## சுவதேச கீதங்கள்

இப்பெயர் கொண்ட பாடற்றிரட்டொன்று சென்னையினின்று சிறக்க வெளிவரும் 'இந்தியா' பத்திராதிபர் ஸ்ரீசுப்பிரமணிய பாரதியவர்களால் இயற்றி வெளியிடப்பட்டுள்ளது. இதன் பெயரைக் கேட்கும்போதே, இத்திரட்டு நம்மவர்க்கு ஒரு புது வழியைக் கற்பிக்க வந்ததென்பது விளங்கும்.

நம் தமிழ்மொழியில் ஈசுவர சம்பந்தமான பாடல்களும் காவியங் களும், புராணங்களும் பிறவும் நிரம்ப உண்டாயினும் நம்மவர்க் குத் தற்காலம் இன்றியமையாது வேண்டத்தக்கனவும் தேசாபி மானத்தை உண்டாக்க வல்லனவுமான உயர்கவிகள் கிடைத்தில.

வங்காள நாட்டார், இந்திய மக்கள் ஏனையரினும் விசேடமான தேசாபிமானமும் உள்ளக்கிளர்ச்சியும் பெற்றிருப்பதற்குரிய முக்கிய ஏதுக்களில் ஒன்று, அந்நாட்டில் சமீபத்தில் தோன்றிய கவிஞர் சிகாமணிகளது அருமை பெருமை வாய்ந்த தேசிய கீதங்கள் அந்நாடெங்கும் பரவிப் பேரெழுச்சியை உண்டாக்கி வருதலாம். மேனாட்டார்களெல்லாம் தம் நாட்டுக் கவிஞர்கள்

இயற்றிய தேச கீதங்களைப் பாராட்டிப் போற்றி வருதலை இயற்கையாக உடையவராய் விளங்குதலுங் காணலாம். அத் தகைய பாடல்களும் கீதங்களும் தமிழ் மக்கட்கும் இன்றியமை யாதனவாயிருத்தலோடு அவை நாடெங்கும் பரவி ஊக்கத்தை விளைக்கக் கூடியனவாகவுமிருத்தல் வேண்டும். சிற்சிலர் 'சுதேசமித்திரன்', 'இந்தியா' முதலிய பத்திரிகைகளில் அவ்வப் போது வெளியிட்ட சுதேசியப் பாடல்கள் மிக உயர்ந்தனவா யிருந்தமை கண்டு, அவை யாவருமறியத் திரட்டித் தொகுக்கப் படின் பெரிதும் உபயோகமாம் என்று கருதியதுண்டு.

இப்போது, பாரதியார் தாமியற்றிய தேச கீதங்களைத் திரட்டிச் சிறு புத்தகமாக வெளியிட்டிருப்பது எமக்குப் பெருமகிழ்ச்சி விளைத்தது. இவர்கள் வந்தேமாதரம், நாட்டு வணக்கம், எங்கள் நாடு, பூபேந்திர விஜயம், கிளிக்கண்ணிகள் முதலாக அநேக விஷயங்களைப் பற்றிப் பாடியிருக்கும் செய்யுள்களும் கீதங் களும் சொன்னயம், பொருணயங்களுடையனவாயிருத்தலோடு, படிப்போர் மனதில் எழுச்சியை உண்டாக்க வல்லனவாகவும் விளங்குகின்றன.

இயற்கையில் இனிய கவிகள் பாடவல்ல பாரதியார் தம் சக் தியை இத்தகைய புதுவழியில் திருப்பி உபயோகப்படுத்தி யிருப்பது, நம்மவர்க்கு ஒரு நல்வழியைக் கற்பிக்கின்றது. இத்தகைய கீதங்களை, தேசாபிமானிகளான நந்தமிழ் நாட்டா ரெல்லாம் படித்து மகிழ்வதுடன், முக்கியமாகத் தம் மக்கட்கு இவற்றை மனப்பாடம் பண்ணும்படி செய்வித்தல் மிகவும் வேண்டப்படுவது என்போம்.

இதுபோலவே நம்நாட்டுப் பெண்பாலாரெல்லாம் விரும்பி மனப் பாடம் பண்ணிக்கொள்ளற்கேற்றபடி, கும்மி முதலான கீதங் களை அமைத்து வெளியிடுதல் மிக்க பயனளிக்கக் கூடியது. பெண்பாலாரிடம் அத்தகைய பாடல்கள் பரவுதல் எளிதாயிருப்ப தோடு, அதனால் உண்டாம் நன்மைகளும் அனந்தமாம்.

பாரதியாரவர்களும், அவர்களையொத்த தேசாபிமானிகளும் இது விஷயமான முயற்சியைச் செய்து புகழும் புண்ணியமும் அடையத் தவறார்களென்றே நம்புகிறோம்.

தமிழ்க் கவிதை வரலாற்றில் முதன் முதலாகத் தேசபக்தி பாடு பொருளாக்கப்பட்டமையை, அந்தக் காலகட்டத்துக்குத் தேவையான நாட்டுணர்வை வெளிப்படுத்த, கவிதையை ஒரு கருவியாகப் பாரதி

பயன்படுத்தியமையைத் தமிழுக்கு ஒரு புதிய வரவாக இம்மதிப் புரை வரவேற்றது.

சுதேசகீதங்களின் பாடுபொருளை - புதுமையைப் பாராட்டி மகிழ்ந் தார் மு. இராகவையங்கார். எஸ். சாமிநாதையரோ, கவிதைகளின் வரிகளில் அவற்றின் நுட்பத்தில், பாரதியின் வெளிப்பாட்டுத் திற னில் மனத்தைப் பறிகொடுத்தார்.

பாரதி வெளியிட்ட சுதேசகீதங்கள் பதினான்கு பாடல்களைக் கொண்ட தொகுதியாகும்.[96] இதில் ஏழு பாடல்களை (வந்தேமாதரம் இரண்டாம் பாடல், தாதாபாய் நௌரோஜி, மாயையைப் பழித்தல், கிருஷ்ணார்ச்சுன தரிசனம், நடிப்புச் சுதேசி, மேத்தா திலகருக்குச் சொல்வது, மாஜினி இத்தாலி தேசத்து யௌவன இத்தாலி என்ற சங்கத்தில் செய்து கொண்ட பிரதிக்கினை ஆகியன) நேரே மதிப்பீடு செய்தும், கவிதைத் தொகுதியைப் பொதுவாகப் பாராட்டியுமாக மதிப்புரை அமைந்துள்ளது. 'வந்தேமாதரம்' (இரண்டாம் பாடல்), 'தாதாபாய் நவுரோஜி', 'மாஜினி யௌவன இத்தாலி சங்கத்தில் செய்துகொண்ட பிரதிக்கினை' பற்றிய மதிப்பீடுகள் நுட்பமானவை; அமரத்துவம் வாய்ந்தவை.

"......... என்ற கீதத்தைப் பாடக் கேட்டும் தன் தாய்த் தேசத்தின் மீது அன்பு சுரக்கப் பெற்றிலரேல் அவர் இருந்தாலென், இறந்தா லென்?" என்னும் தொடரும் "மாஜினி இத்தாலி தேசத்து யௌவன இத்தாலி என்ற சங்கத்தில் செய்துகொண்ட பிரதிக்கினை, அநேக காலம் ஆண்மைக்குணம் இழந்த அலிகளையும் அரைக்கணத்தில் அதிவீரனாக்கி விடுமென்பது சொல்லவும் வேண்டுமா?" என்னும் தொடரும் படிப்போரை வீறுகொண்டு கிளர்ந்தெழச் செய்யும் மந்திரச் சொற்களாக அமைந்துவிடுகின்றன. பயன்படுத்தியுள்ள சொற்களின் கூர்மையால், அச்சொற்கள் வெளிப்படுத்தும் உணர்ச்சிப் பெருக் கால், அதனால் பிறக்கும் வீறார்ந்த உணர்வால் எஸ். சாமிநாதை யரின் 'விவேகபாநு' மதிப்புரை, மு. இராகவையங்காரின் 'செந்தமிழ்' மதிப்புரையை விடவும் மேலோங்கி நிற்கிறது.

பாரதியின் கவிதையை முதன் முதலாக அச்சில் வெளிப்படுத்தி அவரை ஒரு படைப்பாளராகத் தமிழுலகுக்கு அறிமுகம் செய்த பெரு மைக்குரிய இதழ் விவேகபாநு. முதன்முதலாக பாரதியின் கவிதைத்

தொகுதிக்கு அரியதொரு மதிப்புரை எழுதி அவருடைய கவிதை ஆளுமையை வெளிப்படுத்திய பெருமையும் விவேகபாநுவையே சாரும்.

## முடிவுரை

இந்திய வரலாற்றின் புகழ்மிக்க ஒரு காலகட்டத்தின் அடையாளச் சின்னமாக, அந்த மகத்தான காலத்தின் போராட்ட நிகழ்வுகளின் - உள்ளக்குமுறல்களின் உணர்ச்சிக் கொந்தளிப்புகளின் - மகிழ்ச்சி வெளிப்பாடுகளின் மௌன சாட்சியாக நிரந்தரத் தன்மையோடு நிலைத்து நின்று வரலாற்றில் வாழ்கிறது விவேகபாநு.

## குறிப்புகள்

1. விவேகபாநு, 'நமது பத்திரிகை', வால்யூம் 1, புத்தகம் 8, ப. 171
2. விவேகபாநு, 'பத்திரிகை', வால்யூம் 1, புத்தகம் 1, ப. 2
3. சென்ற மார்ச்சு மாதம் வரை இவ்வரிய பத்திரிகையை நடத்தி வந்த ஸ்ரீ கணபதியானந்த சுவாமிகள் என்பார் தற்போது பல விடங்களிலுள்ள சிஷியர்களின் பிரார்த்தனைக்கிணங்க அவரவர் வசிக்கும் ஸ்தலங்களுக்கு விஜயம் செய்யும் கருத்துக் கொண்டாராதலின், இப்பத்திரிகையின் போஷகராயுள்ளார் அறிவில் சிறியேனாகிய என்னை அப்பெரியோர் இறக்கிய பாரத்தை வகிக்கச் சொல்ல, அதற்குச் சிறிதும் பாத்திரமல்லேனாயினும்...... ஒருவாறு துணிந்து அவரது வேண்டுகோளுக்கிணங்கலாயினேன்.

   - விவேகபாநு, வால்யூம் 1, புத்தகம் 8, ப. 171
4. முதல்கட்ட விவேகபாநுவின் காலம் பற்றி மாறுபட்ட கருத்துகள் பலவாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் இரண்டு இங்குக் குறிக்கத் தக்கன:

   1901 முதல் விவேகபாநு மாத இதழாக வெளிவந்தது; சில மாதங்களே வெளிவந்தது.

   - பெ.சு. மணி, இராமகிருஷ்ணர் இயக்கமும் தமிழ்நாடும், ப.399

   1902 செப்டம்பரில் விவேகபாநுவின் முதல் இதழ் வெளிவந்தது.

   - பெ.சு. மணி, வ.உ. சிதம்பரம்பிள்ளை, ப.64
5. திருநெல்வேலி நூருல் இஸ்லாம் அச்சியந்திர சாலையில் பதிப்பிக்கப்பட்டு, குற்றாலம் அகஸ்தியர் ஆசிரமத்தில் பிரசுரிக்கப்படுகிறது.

   - விவேகபாநு, முதல் தொகுதியின் முகப்புப் பகுதி

திருநெல்வேலி நூருல் இஸ்லாம் அச்சியந்திர சாலையில் பதிப்பிக்கப்பட்டு, தூத்துக்குடியிற் பிரசுரிக்கப்படுகிறது.

- விவேகபாநு, வால்யூம் 1, புத்தகம் 8, மேலட்டை

6. இந்நாளில் இதே பெயர் கொண்ட (விவேகபாநு) மற்றொரு வெளியீடு குற்றாலத்திலிருந்து வெளிவந்ததாகத் தெரிகிறது.

- சு.அ. இராமசாமிப்புலவர், நாள் கிழமை திங்கள் இதழ் விளக்க வரிசை, ப. 74

தூத்துக்குடியில் இருந்து 1901 முதல் விவேகபாநு மாத இதழாக வெளிவந்தது.

- பெ.சு. மணி, இராமகிருஷ்ணர் இயக்கமும் தமிழ்நாடும், ப. 399

7. கடவுளும் பக்தியும் - செப்டம்பர் 1900

விதிஅல்லது ஊழ் - அக்டோபர் 1900

ஈகை -டிசம்பர் 1900

கடவுள் ஒருவரே- பிப்பிரவரி 1901

இக்கட்டுரைகள் அனைத்தும் 1900, 1901 ஆகிய ஆண்டுகளில் - முதல் கட்ட விவேகபாநுவில் வெளிவந்திருக்க, 1906ஆம் ஆண்டு மதுரை விவேகபாநுவில் வெளிவந்தன என்பர் பெ.சு. மணி.

- இராமகிருஷ்ணரும் தமிழ்நாடும், ப.401

வ.உ.சி. விவேகபாநு இதழ்களில் எழுதிய கட்டுரைகளும் வேறு பிற இதழ்களில் எழுதிய கட்டுரைகளும் தொகுக்கப்பட்டு, 'வ.உ.சி. கட்டுரைகள்' என்ற பெயரில் நூலாயின. 1989இல் வெளிவந்த இந்நூலைத் தொகுத்தவர் மா.ரா. அரசு.

8. இதை ஆய்வு அடிப்படையில் உறுதிப்படுத்தத் தக்க சான்றுகள் உண்டு. என்றாலும், இக்கட்டுரை அதற்குரியகளம் இல்லை என்பதால் இங்கு அது பற்றிய வாதம் தவிர்க்கப்படுகிறது.

9. விவேகபாநு, 'அறிவிப்பு', வால்யூம் 2, புத்தகங்கள் 1 - 2, ப.1

10. மேலது, ப.2

11. இதே சமயத்தில் மதுரையிலிருந்து மற்றொரு இதழ் வெளிவரத் தொடங்கியது. மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் வெளியீடான அந்த இதழின் பெயர் 'செந்தமிழ்' என்பதாகும். தமிழ் இதழியல் வரலாற்றிலும் இலக்கிய வரலாற்றிலும் தடம் பதித்த தனிச்சிறப்பு வாய்ந்த இதழான செந்தமிழ், ரா. இராகவையங்காரை ஆசிரியராகக் கொண்டு டிசம்பர் 1902இல் இருந்து வெளிவந்தது. சமகாலத்து இதழ்களான

விவேகபாநுவையும் செந்தமிழையும் ஒப்பீட்டு நோக்கில் ஆராய்வது தமிழுக்குப்புதிய வரவாக அமையும்.

12. விவேகபாநு, வால்யூம் 2, புத்தகங்கள் 1 - 2, முகப்புப்பகதி (இதழின் மேல் அட்டை)

13. மேலது, ப.4

14 விவேகபாநு, 'நமது பத்திரிகை', வால்யூம் 4, புத்தகம் 1, ப.3

15. விவேகபாநு தொகுதிகள்

16. வித்தியாபாநு, 'தூத்துக்குடி மு. சண்முகம் பிள்ளையவர்கட்கு உண்மை அறிவிப்பு', தொகுதி 6, பகுதி 5, ப.159

17. விவேகபாநு, தொகுதி 7, பகுதி 10 - 12, பின்அட்டை.

18. விவேகபாநு, வால்யூம் 2, புத்தகங்கள் 1 - 2, ப.2

19. மேலது, Opinion of The Press, The South Indian Mail, இதழின் பின் அட்டையில் உள்ளது.

20. **அகமே புறம்**

இப்பெயருடைய அருமைப்புத்தகம் தூத்துக்குடி ஸ்ரீமாந் வ.உ. சிதம்பரம்பிள்ளை அவர்களால் இங்கிலீஷிலிருந்து சொற்பொலிவும், பொருட் செறிவும் கொண்ட தமிழில் மொழி பெயர்க்கப்பட்டதாகும். ஒழுக்கத்தைக் கற்பித்து, அதன்வழியாய் நான்கு புருஷாத்தங்களையும் தெளிவுற போதிப்பதில் இணையற்ற குருவைப் போன்றது. இந்நூல் போலும் இனிய தமிழ்நூல் இனிய வசன நடையில் எப்போதும் தமிழுலகம் கண்டிராதென்போம்.

- விவேகபாநு, டர்பன், தென்ஆபிரிக்கா

- வ.உ.சி., பாடல் திரட்டு, நூலின் பின் அட்டை

**வள்ளியம்மை சரித்திரம்**

இந்நூல் நம் தேச பக்த சிரோன்மணியாகும் ஸ்ரீமாந் வ.உ. சிதம்பரம் பிள்ளையவர்களின் முதல் மனைவியாரான உத்தம பத்தினியின், உண்மைச் சரித்திரமாம். இதனை இயற்றியவர் நமது பிள்ளையவர்களின் சமீப பந்து. ஆதலின் அவ்வம்மையாரின் செயல்களைக் கண்ணாரக் காணும் பாக்கியம் பெற்றவர். இக்காலத்தும் இத்தகைய பெண்மணிகள் நம் பாரத நாட்டிடை உதித்து வருகின்றனர் என்பதை நம்மனோர் அறிந்து கொள்ளவும், இவ்வுலகிலுள்ள மாதரெல்லாம் கற்றுத் திருந்தவும் ஏதுவாயிருத்தலால், இந்நூல் நம் சகோதரரினும் சகோதரிகட்கு மிக்க பயன் விளைக்கத்தக்கதொன்றாம்

- விவேகபாநு, டர்பன், தென் ஆபிரிக்கா

- வ.உ.சி., மனம் போல வாழ்வு, ப.80

**மெய்யறிவு**

இந்நூல் போன்ற தெளிவரன நூல்களே இக்காலத்துக்கு அவசியம் வேண்டப்படுவனவாம். இந்நூலை ஓதி, உணர்ந்து அவ்வாறே நடக்கப் பயிலுதல் தமிழ் மக்கள் கடனாம். ஏனெனில், பல நாளும் பல நூல்களையும் பயின்று தெளிந்து, உணர்ந்த உண்மைகளே இந்நூலில் பொதிந்துள்ளன. இந்நூல் பயிலப் பெற்ற தமிழ் மக்களே தமிழ் மக்கள். அவர்கள் அனுபவிக்கும் இன்பமே இன்பம்.

- விவேகபாநு, டர்பன், தென் ஆபிரிக்கா

வ.உ.சி., அகமே புறம், 80

21. முன்னுரை, பக்.XXVI - XXVII

22. இவரே தென்னாப்பிரிக்காவிலிருந்து 'ஞானசம்பன்னன்' என்னும் புனைபெயரில் சுதேசமித்திரனுக்குப் பல ஆண்டுகளாகக் கடிதங்களை எழுதியவர். அக்கடிதங்கள் எல்லாம் தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் பட்ட துன்பங்களின் வெளிப்பாடாக அமைந்தவை. 1892ஆம் ஆண்டிலிருந்து காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவை விட்டுப் புறப் பட்ட 1914ஆம் ஆண்டு வரை, 'சுதேசமித்திரனில் வெளிவந்த தென் னாப்பிரிக்கா கடிதங்களின் எண்ணிக்கை 195. அவற்றுள் 117 கடிதங்களை எழுதியவர் ஞான சம்பன்னன்.

- புண்ணியவரன் காந்தி, முன்னுரை, ப.XXVI

23. 1908 இல் தம்முடைய வயது 39 என்று கவிராயரே குறிப்பிட்டுள்ளார் (தனிச் செய்யுட் சிந்தாமணி, ப. 715). இதைக் கொண்டே இவர் பிறந்த ஆண்டு முடிவு செய்யப்பட்டுள்ளது.

24. கந்தசாமிக் கவிராயர், தனிச்செய்யுட் சிந்தாமணி, ப. 715

25. வித்தியாபாநு, 'தூத்துக்குடி மு. சண்முகம்பிள்ளையவர்களுக்கு உண்மை அறிவிப்பு', தொகுதி 6, பகுதி 5, ப.159

26. ஆ.இரா. வேங்கடாசலபதி, வ.உ.சி.யும் திருநெல்வேலி எழுச்சியும், ப.34

27. மயிலை சீனி. வேங்கடசாமி, பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், ப.258

28. மு. இராகவையங்கார், முகவுரை, தனிச்செய்யுட் சிந்தாமணி, ப.6

29. வி.மி. ஞானப்பிரகாசம், க.சி. கமலையா (பதிப்பாசிரியர்), ஆய்வு லகம் போற்றும் ஆசிரிய மணிகள், ப.27

30. மேலது, ப.29

31. தனிச் செய்யுட் சிந்தாமணி, ப.715

32. ஆய்வுலகம் போற்றும் ஆசிரிய மணிகள், பக்.51,55,56,58

33. 1929ஆம் ஆண்டு மதுரையில் இந்நூல் வெளியிடப்பட்டது

34. SURENDRANATH BANERJEA, A Nation in Making, p.207

35. வங்கப்பிரிவினை 1905 அக்டோபர் 16இல் நடை முறைக்கு வந்தது. ஆனால், 1905 செப்டம்பர் இதழிலேயே விவேகபாநு இச்செய்தியைக் குறிப்பிட்டுக் கட்டுரை எழுதியுள்ளது. இது எவ்வாறு இயலும் என்னும் ஐயம் எழுவது இயல்பேயாகும்.

தமிழ் இதழ்களின் வரலாற்றை அறிந்தவர்கள் இதன் உண்மையை உணரமுடியும். அக்காலத்தில் இதழ்கள் தாமதமாக வருவது என்பது, அதாவது அக்டோபர் இதழ் நவம்பரிலும் நவம்பர் இதழ் டிசம்பரிலும் டிசம்பர் இதழ் சனவரியிலும் அதற்குப் பின்னும் கூட வெளிவருவது என்பது தவிர்க்க முடியாத நடைமுறையாக இருந்தது. பல்வேறு சூழல்களின் காரணமாக இந்தத் தாமதம் அமைந்தது. இந்த அடிப்படை விவேகபாநுவிற்கும் பொருந்தும்.

1907 டிசம்பர் இறுதியில் சூரத்தில் நடந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க காங்கிரசு மகாசபையின் ஆண்டுக் கூட்டம் பற்றிய விரிவான செய்திகள், 'காங்கிரஸ் மகாசபை' என்ற தலைப்பில் ம. கோபால கிருஷ்ண ஐயரால் கட்டுரையாகத் தரப்பட்டுள்ளன. 1908 சனவரி இதழில் வெளிவர வேண்டிய அக்கட்டுரை 1907 டிசம்பர் இதழிலேயே இடம் பெற்றது எண்ணத்தக்கது.

இதேபோன்று 1908 சனவரியில் வெளிவந்த பாரதியின், 'சுதேச கீதங்கள்' என்னும் நூலுக்கான மதிப்புரை 1907 டிசம்பர் இதழில் வெளிவந்துள்ளது.

இன்னுமொரு சான்றும் காணலாம். 1908 அக்டோபர், நவம்பர், டிசம்பர் ஆகிய மூன்று மாதங்களுக்கும் சேர்த்து ஒரே இதழாக விவேகபாநு வெளிவந்தது. அதுவும் பிப்பிரவரி 1909ல் வெளிவந்தது, (சான்று: தொகுதி 7, பகுதி 12 - 1908 அக்டோபர், நவம்பர், டிசம்பருக்கான இதழின் பின் அட்டை). 'நமது பத்திரிகாபிமானிகட்கு விஞ்ஞாபனம்' என்ற தலைப்பில் அமைந்த இவ்விதழின் பின் அட்டைச் செய்தி, '1909 சனவரி முதல் யாம் தேக சுகமின்றிப் பிணியால் வருந்தி வருதலாலும்' என்று தொடங்குகிறது. 1909 சனவரி பற்றிய செய்தி 16.2.09 தேதியிடப்பட்டு, 1908 அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாதங்களுக்கு உரிய இதழில் இடம் பெற்றுள்ளது நோக்கத்தக்கது.

காலதாமதம் இயல்பாகிப் போனதைப் போலவே, கால உணர்வற்ற நிலையும் இதழுலகில் அன்று இருந்தது. சனவரிக்கு உரிய செய்தியைப் பிப்பிரவரியில் குறித்து, அதை முந்தைய டிசம்பர் இதழில் வெளியிடுவது கால உணர்வற்ற தன்மைக்குச் சான்று.

36. பக்.417 - 418

37. ப.420
38. ப.421
39. ப.47
40. பக்.48 - 49
41. வால்யூம் 5, புஸ்தகம் 8 - 11 (1906 ஆகஸ்டு - நவம்பர்), பக்.285 - 293
42. இளசை மணியன், பாரதி தரிசனம் (முதல் பாகம்), பக்.168 - 169
43. 'சுதேசிய முயற்சி' ப.291
44. ப.292
45. ப.293
46. தொகுதி 6, பகுதி 7 - 8 (1907 சூலை - ஆகஸ்டு), ப.249
47. மேலது, ப.250
48. பெ.சு. மணி, இந்திய தேசியம்: பங்கிம் சந்திரர் ப்ங்களிப்பு (அமுதசுரபி தீபாவளி மலர், 1998), ப.284
49. A Nation in Making, p.206
50. பெ.சு. மணி, முன் குறித்த கட்டுரை, ப.286
51. வால்யூம் 5, புஸ்தகம் 8 - 11 (1906 ஆகஸ்டு - நவம்பர்), பக்.281 - 285
52. மேலது, ப.281
53. மேலது, ப.282
54. மேலது, பக்.282 - 283
55. மேலது, ப.284
56. மேலது, ப.284
57. பெ.சு. மணி, வ.உ. சிதம்பரம்பிள்ளை, பக்.86 - 87
58. மேலது, ப.87
59. தொகுதி 6, பகுதி 3 - 6 (1907 மார்ச்சு - சூன்), பக்.125 - 135
60. மு. வீரராகவாச்சாரியார் தொடங்கி நடத்திய 'இந்துநேசன்' என்னும் புகழ்மிக்க இதழில் பணியாற்றியவர்; பின்னாளில் அவ்விதழின் உரிமையாளராகவும் ஆசிரியராகவும் ஆனவர்; பலகாலம் அவ்வித ழைச் சிறப்பாக நடத்தியவர்; இவருடைய இதழியல் பணிகள் தனித்த ஆய்வுக்கு உரியன.
61. தொகுதி 6, பகுதி 3-6, ப.135

62. மதுரைக் கல்லூரித் தமிழ்ப் பண்டிதரான இவர், மதுரையில் மாணவர் செந்தமிழ்ச் சங்கத்தின் தலைவராகவும் விளங்கியவர். மதுரை 'வித்தியாபாநு' இதழில் மு.ரா. கந்தசாமிக் கவிராயருடன் இணைந்து ஆசிரியர் பொறுப்பில் இருந்தவர்; 'விவேகோதயம்' என்னும் இதழின் ஆசிரியர். இந்த நூற்றாண்டின் தொடக்க காலத்தில் வாழ்ந்த குறிப்பிடத்தக்க அறிஞர்களில் ஒருவர்; தனி ஆய்வுக்கு உரியவர்.

63. நவம்பர் 1946இல் இந்நூல் வெளிவந்தது

64. தொகுதி 6, பகுதி 12 (1907 டிசம்பர்), பக்.441-450

65. மேலது, ப.442-443

66. மேலது, ப.443

67. மேலது, ப.450

68. A Nation in Making, p.43

69. மேலது

70. காஞ்சிபுரம் கிருஷ்ணசாமிசர்மா, 'ஜோசப் மாஜினி' என்ற பெயரில் ஒரு நூல் எழுதியுள்ளார்.

 -பெ.சு. மணி, கார்ல் மார்க்சின் இலக்கிய இதயம், ப.301

 'மாஜினி', 'மாஜினியின் மணி மொழிகள்', 'மாஜினியின் மனிதன் கடமை' ஆகிய தலைப்புகளில் வெ. சாமிநாதசர்மா நூல்களைப் படைத்துள் ளார்.

 -பெ. சு. மணி, வெ. சாமிநாத சர்மாவின் தமிழ்ப்பணி, பக்.274, 526

71. ம. ரா. போ. குருசாமி (பதிப்பாசிரியர்), பாரதி பாடல்கள் (ஆய்வுப் பதிப்பு), பக்.81-86

72. தொகுதி 6, பகுதி 12 (1907 டிசம்பர்), புத்தகக் குறிப்பு, பின் அட்டையின் உட்புறம்

73. தொகுதி 7, பகுதி 6-8 (1908 சூன் - ஆகஸ்டு), பக்.153-157

74. மேலது, ப.154

75. மேலது, ப.155

76. தொகுதி 5, புத்தகம் 8 - 11 (1906 ஆகஸ்டு - நவம்பர்), பக்: 339 - 340

77. இளசை மணியன், பாரதிதரிசனம் (முதல்பாகம்), ப.170

78. விவேகபாநு, தொகுதி, புத்தகம் 8 - 11 (1906 ஆகஸ்டு - நவம்பர்) பக்: 339 - 340

79. இளசை மணியன், பாரதி தரிசனம் (முதல் பாகம்), பக்: 169 - 170

80. மேலது

81. பாரதியாரும் தமிழ்ப் புலவர்களும், ப.125

82 'நமது சந்தாதாரர்கட்கு விஞ்ஞாபனம்' என்னும் தலைப்பில் அமைந்த செய்தியில் பாநுவின் நன்கொடையாளர்களில் ஒருவராக வ.உ.சி.யின் பெயர் குறிக்கப்பட்டுள்ளது - 1903 பிப்பிரவரி இதழின் பின் அட்டை

83. 1905 சனவரி இதழ், ப.6

84. 1906 சனவரி இதழின் தனித்தாளில் (பக்க எண் இல்லாமல்) 'வேண்டுகோள்' என்னும் தலைப்பில் வெளிவந்துள்ள செய்தியின் ஒரு பகுதி இது.

85. 1905 சனவரி இதழ், ப.6

96. வ.உ.சி. சுயசரிதை, ப.154

87. வ.உ.சி. வ.உ.சி. கண்ட பாரதி, ப.2

88. பெ.சு. மணி வீரமுரசு சுப்பிரமணிய சிவா, ப.15

89. வால்யூம் 4, புத்தகம் 9 (1905 செப்டம்பர்) பக். 430

90. வால்யூம் 5, புத்தகம் 6 (1906 சூன்) முன் அட்டையின் உட்புறம் இச்செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

91. 'சுதேச கீதங்கள்' என்பது பாரதி எழுதிய கவிதைகளின் தொகுப்பாகும். 1908 சனவரியில் சென்னையில் வெளியிடப்பட்ட இந்நூல் பாரதியின் சொந்த வெளியீடாகும்

மு. இராகவையங்காரால் எழுதப்பட்டு, செந்தமிழ் இதழில் வெளி வந்த மதிப்புரையே இந்நூலைப் பற்றி அன்னாளில் வெளிவந்த ஒரே மதிப்புரை என்று ஆய்வுலகம் கருதியது. இதுவரையில் அறியப்படா மல் இருந்த இந்நூலுக்கான விவேகபாநுவின் மதிப்புரை இக்கட் டுரையாளரால் கண்டறியப்பட்டு முதன் முதலாக இக்கட்டுரையில் இணைக்கப்பட்டுள்ளது.

92. தொகுதி 6, பகுதி 12 (1907 டிசம்பர்), 'புத்தகக்குறிப்பு' என்னும் தலைப்பில் முன் அட்டையின் பின்புறமும் பின் அட்டையின் உட் புறமும் வெளியாகியுள்ளது.

93. வித்தியாபாநு, 'தூத்துக்குடி மு. சண்முகம் பிள்ளையவர்கட்கு உண்மை அறிவிப்பு', தொகுதி 6, பகுதி 5, ப.159

94. சீனி. விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, ப.113

95. தொகுதி 6, பகுதி 3, (1907 - 1908) பக்.105 - 106

96. சீனி விசுவநாதன், மகாகவிபாரதி நூற்பெயர்க்கோவை, ப. 52.

# பஞ்சாமிர்தம்

ஒரு மாதாந்தரப் பத்திரிகை

நான் ஒரு மானுடன்: நான் மதியாதன
மானுட வாழ்வில் இலை.

மாலை-I | சித்திரை—1924 | காசு-1

## முன்னுரை



மியிலே மனிதன் தோன்றிய பிறகு அவனாக இயற்றின புதுமைகளில், தன் கருத்தைப் பிறருக்கு வெளியிடும்படி பாஷையை உண்டாக்கிக் கொண்டது ஒன்று. அருகில் இருப்பவருக்கு மட்டும் வாய்மொழியாய்ச் சொல்லுவதன்றி, நெடுந்தொலையில் உள்ளவருக்கும் தன் கருத்தைத் தெரிவிக்கும்படி, பாஷைக்கு வடிவு கொடுத்து எழுத்துக்களை அமைத்துக்கொண்டது ஒன்று. அவ்வெழுத்துக்களையும் தன் கை நோவ எழுதி எழுதி இடர்ப்படாதபடி, சிறுபொழுதில் பல்லாயிரம் பிரதிகளைச் செய்து குவிக்கும் அச்சு யந்திரத்தை நிருமித்துக்கொண்டது ஒன்று. இம்மூன்றுமே மற்றெல்லாவித அர்ப்புதங்களினும் சிறந்து, நமது நாகரிக வளர்ச்சிக்குப் பேருதவி ஆயின என்று சொல்லலாம். தற்காலத்திலே இவ்வாறு சிலர் கருத்துக்களைப் பலர்க்குள் பரவச்செய்து நாகரிகத்தைப் பெருக்கும் அச்சு யந்திரத்தின் விளைவுகள், புஸ்தகங்களும் பத்திரிகைகளுமாம். இவற்றுள், நாள்தோறுமேனும் அடிக்கடியேனும் வெளிவரும் பத்திரிகைகள், தினசரி நடபடிக்கைகளையும், அவற்றைப்பற்றிய குறிப்புக்களையும் அவசரத்தில் கூறிக் கழிவன. மாதந்தோறுமோ இன்னும் தாமதித்தோ வெளிவரும் பத்திரிகைகள்,

# பஞ்சாமிர்தம்

## ந. கடிகாசலம்

ஏற்றமுறச் செய்வதுவும் மாற்றமுற
வைப்பதுவும் ஏடேயாகும்!
தோற்றபுது நிலையுணர்ந்து தோன்றாத
வழிகூறித் துணைபு ரிந்து
சேற்றிலுயர் தாமரைபோல் திருநாட்டின்
உளங்கவர்ந்து தீந்த மிழ்த்தொண்
டாற்றுந்தாள் அங்கங்கே அழகழகாய்
அறிஞர்களால் அமைத்தல் வேண்டும்!
(தமிழியக்கம்)

எனும் பாவேந்தரின் விருப்பத்துக்குச் செயல் வடிவம் தந்திட்ட இதழ் தான் பஞ்சாமிர்தம்:

### சொல்–விளக்கம்

பஞ்சாமிர்தம் (pamnean + awrta) எனும் சொல்லுக்கு, "வாழைப் பழம், தேன், சர்க்கரை, நெய், திராட்சை என்ற இனிய பண்டங்களால் ஆக்கியதும் அபிஷேகத்திற்கு உபயோகிப்பதுமான பண்டம்" என்று Tamil Lexicon (p. 2414) தருகிறது. 'உண்மை, அன்பு, அறிவு, ஒற்றுமை, உழைப்பு என்னும் ஐந்தையும் கலந்ததாகும் இப்பஞ்சாமிர்தம்' என்று முதல் இதழின் முன்னுரையில் (ப.2) ஆசிரியர் அ. மாதவையா குறிப் பிடுகிறார்.

## நோக்கம்

இந்தப் பூமியில் மனிதன் தோன்றிய பிறகு அவனாக நிகழ்த்திய புதுமைகளில், மொழியை உண்டாக்கிக் கொண்டது, அதற்கு வடிவம் தந்து எழுத்துக்களை உருவாக்கிக் கொண்டது, பலருக்கும் பயன்படும் வகையில் அச்சு இயந்திரத்தை நிருமித்துக்* கொண்டது ஆகிய மூன்றும் தலைசிறந்தன என்கிறார் (ப.1) அ. மாதவையா. பஞ்சாமிர்தம் எனும் பெயரில் மாத இதழைத் தோற்றுவித்ததன் நோக்கம் என அவர் குறிப்பிடுவதாவது :

> 'நாடெங்கும் ஆங்கு ஆங்கு முளைத்தெழும் தேசிய உணர்ச்சிப் பயிருக்கு இப்பத்திரிகை மூலமாய் ஊக்க உரம் இட்டு, அறிவு நீர் பாய்ச்சி, அவ்வுணர்ச்சியைத் தழைத்தோங்கச் செய்ய முயலுவது என் முக்கிய நோக்கம்' (பக். 2-3)

## மூலகாரணம்

இத்தகைய நல்ல நோக்கத்துடன் தமிழிதழ் தொடங்குவது எளிதானதல்ல என்றபோதிலும், தான் இவ்விதழைத் தொடங்க முனைந்தது ஏன் என்பதற்கு ஆசிரியர் காரணம் கற்பிக்கின்றார் :

> 'நமது நாகரிக வாழ்க்கைக்குரிய பல துறைகளையும் தழுவி நடைபெறும் மாதப் பத்திரிகை, நான் அறிந்தவரை, ஒன்றேனும் தமிழில் இல்லை... நமது அருமைத் தாய்மொழிக்குள்ள இக்குறையை நிரப்புவது என்னினும் மிக்க அறிவும் படிப்பும் உள்ளவர் பணியாயினும், வேறு எவரும் முன்வராமையினால் நாட்டுப் பற்றும் பாஷாபிமானமும் உள்ள தமிழ் மக்களின் உதவியைக் கொண்டு உழைத்துப் பார்க்கத் துணிந்து, நான் முன்வரலானேன்' (ப. 2)

## பஞ்சாமிர்தம் – தோற்றம்

அ. மாதவையாவின் துணிச்சலை மட்டுமே அடித்தளமாகக் கொண்டு, பஞ்சாமிர்தம் எனும் பெயரில் மாத இதழ் 1924ஆம் ஆண்டு சித்திரைத் திங்களில் வெளிவரலாயிற்று. டெம்மி 1 x 8 அளவினது. தலைப்பில் குடம்; அதன் முனையில், இலைகளின் மேல் உண்மை, அறிவு, அன்பு, ஒற்றுமை, உழைப்பு எனக் குறிக்கப்பட்டிருந்தது.

---

* நிருமித்தல் - படைத்தல்

பஞ்சாமிர்தம் எனும் தலைப்பின் அடியில், 'சித்திர சகித மாதப் பத்திரிகை' என்பது அடைப்புக் குறிக்குள் அச்சாகியிருந்தது. அதனை யடுத்து,

> நான் ஒரு மானுடம்; நான் மதியாதன
> மானுட வாழ்வில் இலை

எனும் கூற்று இடம்பெற்றுள்ளது. சென்னை மயிலாப்பூர் எட்வர்டு எலியட் ரோடில் இருந்தது பஞ்சாமிர்தம் பத்திரிகை ஆபீசு என்பது தெரியவருகிறது. 88 பக்கங்களுடன் 18 படங்களைக் கொண்டு வெளி வந்தது. மாலை-1, காசு-1 என அட்டையில் இதழின் எண் குறிக்கப் பட்டது. இவ்விரண்டும் இடையில் சித்திரை - 1924 என அச்சிடப் பட்டுள்ளது. தொடர்ந்து இவ்வாறே ஒவ்வொரு இதழிலும் அச்சாகி யிருந்தது.

## உள்ளடக்கம்

பெயருக்கேற்பப் பல்வேறு துறைச் செய்திகளை இவ்விதழ் உள்ள டக்கியிருந்தது குறிப்பிடத்தக்கது. 1924 சித்திரையில் வெளி வந்த பஞ்சாமிர்தம் 1925 கார்த்திகையில் நின்று போய்விட்டது வருந்தத் தக்கது. 1925 அக்டோபர் 22இல் அ. மாதவையா இயற்கை எய்தியதே இதற்குக் காரணமாகும். அவர் தயார் செய்து வைத்திருந்த ஓர் இத ழும், அவர் நினைவாக ஓர் இதழும் என இரு இதழ்கள் மட்டுமே அவரது மரணத்திற்குப் பிறகு வெளிவந்தன என்பது அவரது மகன் மா. அனந்த நாராயணன் வெளியிட்டுள்ள அறிவிக்கை மூலம் தெரிய வருகிறது.

முதல் இதழ் வெளியானதும் அது குறித்து வேறு சில ஏடுகளும் இதழ்களும் வெளியிட்ட கருத்துக்கள் இவ்விதழின் உள்ளடக்கத்தை உள்ளங்கை நெல்லிக்கனி என எடுத்துக்காட்டுவதாகக் கருதலாம்.

> இக்கால நிலைமைக்கேற்றபடி தமிழ் மக்கள் அறிந்துகொள்ள வேண்டிய சிறந்த சில விடயங்கள்... இனிய தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கின்றன. (செந்தமிழ்)
>
> பத்திரிகையின் ஒவ்வொரு பக்கமும் பல அரிய விஷயங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கின்றது. (தாய்நாடு)
>
> எவர்க்கும் பயன்படும் குறிக்கொண்டு நிற்பது கவனிக்கத்தக் கது... மனத்தைக் கவரத்தக்க கட்டுரைகள் பல மிளிர்கின்றன. (நவசக்தி)

தமிழ் ஏடுகளும் இதழ்களும் இவ்வாறு கருத்து வெளியிட்ட நிலையில் ஆங்கில நாளேடுகளின் கருத்து யாது எனக் காண்போம்:

> The style is throughout simple and readable. We have no hesitation in saying that Mr. Madhaviah has achieved a very high standard of excellence. The magazine deserves to be in every Tamil Home. (The Hindu)
>
> Unlike other Tamil Magazines in this country Mr. Madhaviah seems to be intent upon making his Journal a really well-got up, neatly printed, interesting and readable,. (The Daily Express)

மேற்சுட்டிய கருத்துக்கள் உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை என்பது இருபது இதழ்களையும் ஆராய்ந்து பார்க்கும்போது தெளிவாகிறது. அரசியல், இலக்கியம், சமயம், வரலாறு, தத்துவம், சட்டம், கல்வி, கூட்டுறவு, கைத்தொழில் எனப் பல்வேறு துறைகள் தொடர்புடைய செய்திகளைத் தாங்கி, கனமான உள்ளடக்கத்துடன் வெளிவந்த மாத இதழ் பஞ்சாமிர்தம் எனலாம்.

## அரசியல்

விரிவஞ்சி, பஞ்சாமிர்தம் இதழில் இடம்பெற்றுள்ள செய்திகளைச் சுருக்கமாக மிக முக்கிய தலைப்புகளில் இங்குக் குறிப்பிடலாம். இந்திய விடுதலைக்கு முந்தைய இதழ் என்ற நிலையில் அரசியல் தொடர்பான கட்டுரைகள், வினா-விடை போன்றவை இடம்பெற்றுள்ளன. 'அரசிறை கொடுத்தலும் மறுத்தலும்' எனும் தலைப்பில் (பக். 89-91) சுதேசமித்திரன் ஆசிரியர் A. ரங்கஸ்வாமி ஐயங்கார் எழுதியுள்ள விமர்சனக் கட்டுரை குறிப்பிடத்தக்கது. S. சத்தியமூர்த்தி அவர்கள் 'இனி நான் செய்யவேண்டிய வேலை' (பக் 267-71) எனும் தலைப்பில் கராசாரமான கட்டுரை எழுதியிருக்கிறார். நூல் (இராட்டையில்) முடிந்தால் நூற்கலாம்; கதர் (முடிந்தால்) கட்டலாம் என்று ஆணித் தரமாக அவர் எடுத்துரைக்கிறார். காந்திக்கு எதிராகச் சில கருத்துக் களை இதில் மிகத் துணிச்சலாக அவர் வெளியிட்டிருக்கிறார்.

'சுயராச்சிய நிபந்தனைகள்' எனும் தலைப்பில் T.V. சேஷகிரி ஐயர் எழுதிய அரசியல் கட்டுரை (பக் 17-18) சுயராச்சியம் குறித்து

வெகுசிறப்பாக அலசுகிறது. தமிழிலக்கியத்தில் அரசியல் பொருண்மை குறித்து ஆராயும் போக்கில், ரெவ். H.A. பாப்புலி என்பார். 'திருக்குறளில் கண்ட குடியரசு' (பக். 73-78) எனும் அரிய கட்டுரையை - மிக விரி வான கட்டுரையாகத் தந்திருக்கிறார்.

காந்தி வினா விடை எனும் தலைப்பில் (பக் 11-15) C. இராச கோபாலாச்சாரி வழங்கியுள்ள விடைகள் இன்றைய நிலையிலும் உயிரோட்டம் மிக்கனவாக விளங்குவது கண்கூடு.

வினா : நாம் சுதந்தரம் பெற இன்றியமையாதது என்ன?

விடை : ஒற்றுமை.

வினா : பல ஜாதி மத பேதங்கள் இருக்க, ஒற்றுமை எப்படி உண்டாகும்?

விடை : ஜாதி மத பேதங்கள் இருந்தாலும் அன்பினால் ஒற் றுமை உண்டாகும்.

வினா : ஹிந்துக்களும் முஸ்லீம்களும் அன்புடன் வாழ முடி யுமா?

விடை : அவர்களுள் பகைமைக்குக் காரணமே இல்லை. ஹிந்துக்களும் முஸ்லீம்களும் என்னும் மற்றெல் லோரும் அன்புடன் கூடி வாழலாம். அப்படி வாழ்ந் தாலொழிய, சுதந்திரத்தை அடையவாவது நிலை நிறுத்தவாவது முடியாது. (பக் 11-12)

இன்றைய இந்தியாவிலும் இக்கருத்துக்கள் ஏற்புடையனவாக அமைந்துள்ளன. இதுபோன்றே, கதர் என்றால் என்ன? என்ற வினா வுக்கு,

> கைராட்டினத்தால் நூற்ற நூலைக் கொண்டு கைத்தறியில் நெய்த துணிக்கு, கத்தர் அல்லது காதி என்று பெயர். இதைத் தமிழ் நாட்டில் கதர் என்று வழங்குகிறார்கள் (ப. 12)

என மிகத் தெளிவாக அவர் விடையளிக்கிறார். இவ்வாறே, பல்வேறு சிக்கலான வினாக்களுக்கும் எளியநடையில், வாசகர்கள் படித்தவு டன் புரிந்து கொள்வதோடு உள்ளத்தில் பதியுமாறும் விடையளிப்ப தில் C. இராசகோபாலாச்சாரியாரின் கைவண்ணம் வெளிப்படுகிறது.

## இலக்கியம்

இப்பகுதியில் - அ) சிறுகதை ஆ) தொடர்கதை இ) கவிதை ஈ) கட்டுரை உ) மொழிபெயர்ப்ப ஊ) மதிப்புரை ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

### அ) சிறுகதை

ஒவ்வோர் இதழிலும் ஒரு சிறுகதை - தரமான சிறுகதை இடம் பெற்றுள்ளது. முதல் 12 இதழ்களில் 13 சிறுகதைகள் இடம் பெற்றுள் ளன. இவற்றில், நான்கு கதைகள் டால்ஸ்டாய் கதைகள்; தமிழாக் கம் செய்யப்பட்டவை. பஞ்சாமிர்தம் இதழில் வெளியான சிறுகதை களைத் தொகுத்துக் காணும்போது, அ. மாதவையா எழுதிய நிலவரி ஏலம், கந்தையாவின் கதி, முருகன் ஆரூடம்; விசாலாக்ஷியம்மாள் எழு திய மூன்றில் எது? தூரத்துப் பச்சை, மேஸ்திரி கோவிந்தன் கதி; ஏ. அரங்கசாமி ஐயங்கார் எழுதிய கோபாலன் விஷயம், சிர. பா. பாமணி எழுதிய மௌன குருக்கள் ஆகிய சிறுகதைகள் உள்ளடக்கத்தாலும் விறுவிறுப்பான நடையினாலும் தனியிடம் பெறுகின்றன. இவற்றி லும், தனித்து விளங்கும் மூன்று சிறுகதைகள் பற்றிக் குறிப்பிட்டாக வேண்டும்.

### முருகன் ஆரூடம்

முருகதாசர் என்பவர் ஆரூடம் சொல்லுவதில் வல்லவர். இரங்க ராமாநுஜ ஐயங்கார் என்பது இயற்பெயர். 'சங்கனூர் ஜமீன்தாரின் செயலாளர் சாமிநாதப்பிள்ளை நான்' எனக் கூறிக் கொண்டு அவரது வீட்டிற்கு ஒருவர் வருகிறார். ஜமீன்தார் ஜாதகம் பார்க்க விரும்புவ தாகக் கூறி, ஹோட்டலுக்கு அழைத்துச் செல்கிறார். சிற்றுண்டி உண்ட பின், நகைக் கடைக்கார குமாஸ்தா ஒருவர் வைர மோதிரம் கொண்டு வந்து ஜோதிடரிடம் காண்பிக்கிறார். அப்போது, பிள்ளை அங்கே வந்து, 'இன்னொரு மோதிரமும் கடையில் உண்டு; போய் வாங்கி வா' என்று கூறி குமாஸ்தாவை அனுப்புகிறார். பின்னர், ஜோதிடரிடம் இருந்த வைர மோதிரத்தை வாங்கிக் கொண்டு வெளி யேறி விடுகிறார். சற்று நேரத்தில் குமாஸ்தா அங்கே வருகிறார்; குட்டு வெளிப்படுகிறது. ஜமீன்தார் அவரது செயலாளர் என்று எவரும் இல்லை. ஜோதிடர் போலீசாரிடம் ஒப்படைக்கப்படுகிறார். ஐம்பது ரூபாய்க்கு ஆசைப்பட்ட அவர், ஹோட்டலுக்கு ரூ 2-3-9; நகைக் கடைக்காரருக்கு ரூ 2370 செலுத்த வேண்டி நேரிடுகிறது. 'சங்கனூர்

ஜமீன்தார் யார்? நீர்தான் சொல்லுமேன், நான் அறியேன்' என்று கதையை முடிக்கிறார் அ. மாதவையா.

**மூன்றில் எது?**

கமலாம்பாளின் மூன்று வயது மகன் வேது. வாழை மட்டையைச் சீவும்போது கையில் காயம் ஏற்படுகிறது. கையை எடுத்துவிட வேண்டும் என்று டாக்டர் கூறுகிறார். தெருவழியே சென்ற பண்டாரம் பச்சிலை, விபூதி ஆகியவற்றைக் கொடுக்கிறாள். பச்சிலையைப் பூசி, கமலாம்பாள் கண்ணீர் வடிக்கிறாள். அம்மனுக்குப் பிரார்த்தித்துக் கொள்கிறாள். மறுநாள், குழந்தையின் கை குணமாகிவிடுகிறது. டாக்டர் மேனன் FRCSக்கு ஆச்சரியம். அப்போது, கமலாம்பாளின் ஏழு வயது மகன் சீமா, தமிழ்ப் பத்திரிகையை எடுத்து, 'கண்ணீர் - மனிதரை வாட்டி வதைக்கும் நோய்கள் பல கண்ணுக்குப் புலப்படாத சிறு விஷ ஜெந்துக்களினால் உண்டாகின்றன என்பது பிரபலம். இந்த விஷ ஜெந்துக்களை நசித்துவிடும் ஒரு வஸ்து மனிதர் வடிக்கும் கண்ணீரிலிருக்கிறதாம். இதில் ஒரு சொட்டு, பல கோடி விஷ ஜெந்துக்களைக் கொன்று விடும். இன்னும் கண்ணீரிலிருந்து இந்த வஸ்துவைத் தனித்துப் பிரிக்க முடியவில்லை' என்று வாசிக்கிறான்.

'That is it! Out of the mouths of babes and sucklings' என்கிறார் டாக்டர். 'நேற்று இந்த அம்மாள் கண்ணீர் பட்டுக் குழந்தை கை நனைந்ததே, அதனால் இவ்வளவு சீக்கிரம் விஷப்பூச்சி பாக்டீரியாக்களைக் கொன்று, கையைச் சரிப்படுத்தியிருக்க வேண்டும். அமெரிக்க டாக்டர் ஒருவர் கண்ணீர் 'ஆன்டிசெப்டிக்' என்று எழுதி இருந்ததை நானும் பார்த்தேன்' என்று கூறுகிறார் டாக்டர் மேனன். 'ஒருவேளை பச்சிலையின் மகிமையோ' என்கிறார் குழந்தையின் தந்தை. 'முருகன்தான் ஆண்டிப்பண்டாரம் வடிவில் வந்திருக்க வேண்டும்' என்பது கமலாம்பாளின் கருத்து. குழந்தையைக் காப்பாற்றியது - கண்ணீர், பச்சிலை, இறையருள் ஆகிய மூன்றில் எது? என்று விடை காண்பது வாசகர் பொறுப்பில் விடப்படுகிறது.

**கோபாலன் விஷயம்**

அதிகம் சாப்பிட்டுவிட்ட காரணத்தால், உடம்பைக் குறைக்க நினைத்த கோபாலன், 'உடம்பு லேசாவதற்கு' என எழுதப்பட்ட குப்பி

யில் இருந்த மருந்தைக் குடித்துவிடுகிறான். உடனே, பஞ்சு போல லேசாகி விடுகிறான். இதையறிந்த அவனது நண்பர் பேண்ட், கோட் ஆகியவற்றில் காரீயத்தகடு வைத்து தைத்து, அவனுக்குப் போட்டு விட்டு, ஒருவழியாக நடக்க வைக்கிறார். ஆனால், இவ்விருவருக்கு மட்டுமே தெரிந்த இரகசியத்தை நண்பர் வெளியே சொல்லி விடு வாரோ என எண்ணி, கோபாலன் அவரையே சுற்றிச் சுற்றி வருகிறான். இதுதான் கதை. The invisible man என்ற கதை போன்றது. ஹிட்ச்காக் பாணியில் கதையின் முடிவு வரையில் இரகசியம் காப்பாற்றப்படுவது இக்கதையின் சிறப்பு

## ஆ) தொடர்கதை

அ. மாதவையா எழுதிய பத்மாவதி சரித்திரம் - மூன்றாம் பாகம் பஞ்சாமிர்தம் இதழில் தொடர் கதையாக வெளிவரலாயிற்று. 18 ஆவது அதிகாரத்துடன் நின்றுவிடுகிறது. ஆசிரியரின் மறைவே காரணம்.

> குழந்தைகள் எழுதின கடிதத்தைக் கண்டு கோபாலைக் கடைசியில் ஜேன் கலியாணம் செய்து கொள்ளவில்லையென்றும், மெஸபொடேமியாவுக்குப் போய் அங்கிருந்து உடம்பு கெட்டுத் திரும்பி வந்தாரென்றும், நவநாகரிகத் திற்கேற்ப பத்மாவதியம் மள் குடும்ப சம்பவங்களை விவரித்துக் கதையை எழுதி முடிக்கப் போவதாக என் தகப்பனார் சொல்லிக் கொண்டிருந்தார் (ப. 697)

என அவரது மகன் தெரிவிக்கிறார். இதுபோலவே, மோகினிமாசா. ஒரு தமிழ்நாட்டுச் சரித்திர நாவல் என்பது இரண்டு அத்தியாயங் களில் - ஆசிரியரின் மறைவையடுத்து நின்று போனது.

> 'மோகினிமாசா என்ற தலைப்பில் சரித்திர சம்பந்தமான நாவல் ஒன்றை என் தகப்பனார் எழுத உத்தேசித்திருந்தார். 'தக்ஷிண சரித்திர வீரருள்' ஒருவரான, ஆங்கிலரின் ஆதிக்கத்தை எதிர்த்து உயிர்விட்ட மகமது யூஸப் கான் என்பவரே இந்நூலின் கதாநாயகர்' (ப. 574)

என்று அ. மாதவையாவின் மகன் குறிப்பிட்டுள்ளார். ஆக, நல்ல தமிழ் நாவலாசிரியர் ஒருவரைத் தமிழ் இலக்கிய உலகம் இழந்து விட்டது மட்டும் உண்மை

**இ) கவிதை**

தரமான கவிதைகள் பஞ்சாமிர்தம் இதழில் வெளிவந்துள்ளன. விகடப்பா எனும் தலைப்பில் நகைச்சுவையுணர்வு மிளிரும் பாக்கள் குறிப்பிடத்தக்கவை. முதல் இதழிலேயே, விகடப்பா எனும் தலைப்பில் அ. மாதவையா சில செய்திகளைத் தொகுத்துத் தருகிறார். தமிழில் காணும் சில விகடப்பாக்களை எடுத்து இயம்புகிறார். மாதிரிக்கு ஒன்று :

**பச்சைமா ; மலைபோல் மேனி;**
**பவளவாய்; கமலச் செங்கண்;**
**அச்சுதா! அமரர் ஏறே!**
**திருவரங்கத் தம்மானே?**
**இச்சகம் அனைத்தும் வேண்டேன்;**
**இந்திரலோகம் வேண்டேன்;**
**நிச்சலும் இந்தத் தோசை**
**நேர்ந்திடா தருளுவாயே! (ப. 256)**

இவ்வண்ணம் இயற்றப்படும் விகடப்பாக்கள், மேலாக எழும் நகைப்பு மட்டோடு நில்லாது, மூளைக்கும் நல்விருந்தாகும். பழைய காலத்தில் 'ஊசிமுறி' என்று, இவ்வகைநூல் ஒன்றிருந்ததாம். அக்காலத்தில் "கீத்திசுழ்" "கிறள்" என்று இரண்டு நூல்கள் அச்சேறியுள்ளனவாம் (ப. 258) என்ற குறிப்பு தருகிறார் ஆசிரியர்.

அடுத்த இதழில், "கிறள்" நூலில் இடம்பெற்ற பத்து புதிய குறள் வெண்பாக்களை அவர் தருகிறார். அவற்றில் சில வருமாறு :

தின்ற தனாலாய பயனென்கொல், அப்பந்தான்
நன்று வராத தெனின்?

பயற்றம் பருப்புண்டை பத்தெட்டுத் தின்றால்
வயிற்றுவலி மாற்ற லரிது.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை, உறுபொழுதில்
காப்பி டீயல்ல பிற.

நீரில் பால் ஊற்றுவான் பால்காரன்; பாலில்நீர்
ஊற்றிலென் ஊற்றாக்கா லென்?

யான் உண்ணும்காலை மதியுண்ணும்; உண்ணாக் கால்
தான், 'உண்! உண்!' என்னும் மது.

இதைத் தொடர்ந்து வாசகர்கள் அனுப்பிய விகடப் பாக்களில் காட்டுக்குச் சில :

ஆபத்துக் குதவாத் துட்டு,
அரும்பசி யெடுக்காத் தொந்தி,
கோபத்தில் துடிக்கா மீசை,
குருவினை யெதிர்க்காச் சீடன்,
சோபத்தைத் தணியாக் காப்பி,
சொத்தெல்லா மழிக்காப் பிள்ளை,
பாபத்தி லுழலா ஜென்மம்
பயனில்லை யேழுந் தானே! (ப. 789)

சென்னையைச் சேர்ந்த ஸ்ரீமான் ஸி.எம். இராஜு செட்டியார் எழுதியது இது. அவர் எழுதிய கீமாயாயம் வருமாறு :

நாடிய பொருள் கைகூடும்
நாமுமே பாடுபாட்டால்;
வீடது வெளியாய்ப் போகும்
மேற்கூரை பிரித்து விட்டால்;
ஆடிக்கு முந்தி ஆனி; அப்பனைப்
பெற்றாள் பாட்டி;
காடிதான் புளித்திருக்கும்;
கருப்பட்டி இனிக்கும் தானே? (ப. 513)

அவரே எழுதிய 'கிறள்' இது :

சிறப்பொடு பூனை இறப்பில் இருந்தால்
புறப்பட மாட்டா எலி

சங்கப்பாடலை நையாண்டி செய்து P.R. கிருஷ்ணமாச்சாரியார் என்பவர் எழுதிய புரவராற்றுப்படை (ப. 274) சுட்டத்தக்கது. ஆற்றுப் படை இலக்கணத்தில் அமைந்த இப்பாடலின் இறுதி வரிகளுக்குப் பொருள் இது:

...பழையதாகிய நாட்படப் புளித்த மாவினை யொக்கும் நீர்ச்சோற் றினை மோர் பெய்து மாவடுவாகிய ஊறுகாயோடே யேந்துந் தோறும் மிகவார்த்துப் பூளைப் பூவினை யொத்த ஆடையினையும் தந்து விற் பான்......

**ஈ) கட்டுரை**

இலக்கியம் தொடர்பானவை, பயணம் தொடர்பானவை, பொது வானவை என மூவகையாகப் பிரிக்க வாய்ப்புண்டு. பாரதியார் தமிழ்ப் பற்று, திருஅருட்பா, மறச்சுவை முதலானவற்றை முன்னதற்குக் காட்டாக்கலாம். அ. மாதவையா எழுதிய மறச்சுவை (பக் 311-318) எனும் கட்டுரையானது, கட்டுரை எவ்வாறு அமைந்து உருவாக்கப் படவேண்டும் என்பதற்கு இலக்கணமாகத் திகழ்கிறது.

> 'நாச்சுவைகளில், சிலர் தித்திப்பையும், சிலர் புளிப்பையும், சிலர் கார்ப்பையும் மிக்கு விரும்புவது போல, இவ்வுள்ளச் சுவைகளிலும், இயற்கைப் பண்புக்கும் பயிற்சிக்கும் பருவத் துக்கும் ஏற்றபடி, மக்களுக்குள் விருப்பு வெறுப்பு வேற்றுமை களைக் காணலாகும்.

என முன்னுரை கூறி,

> 'மறச்சுவை என்னும் வீர ரஸம் உள்ள நிகழ்ச்சிகளை மட்டு மின்றி உடல் வன்மையையும் திமிரையும் ஒருவாறு பொறுத்த தாதலின், ஆண் மக்களுக்குள்ளே சிறந்து விளங்குகின்றது. எனினும் பல சமயங்களில், பெண்பாலார்க் குள்ளும் மிகைபடத் தோன்றி மிளிர்வது முண்டு. நமது தமிழ் நாட்டுப் பண்டை நாளைய 'வீரத்தாய்மார்' இதற்குச் சான்றாவர்'

என்று ஆசிரியர் தொடர்கிறார்.

ஆர். அனந்தகிருஷ்ண சாஸ்திரி என்பார், ஸம்ஸ்கிருத சுவடிகள் எனும் தலைப்பில் எழுதியுள்ள கட்டுரை பல அரிய செய்திகளைத் தாங்கியுள்ளது. அடுத்துக் குறிப்பிடத்தக்கதோர் உரைத்தொடர் பாவலர் விருந்து என்பதாகும். கிரேக்க நாட்டு பிளேட்டோ இயற்றிய விருந்து (Banquet) எனும் கட்டுரையைத் தழுவி எழுதப்பட்டது. மயிலை ஸ்ரீமத் விபுலாநந்த ஸ்வாமிகள் ஆக்கிய இவ்வுரைத் தொடரில்,

Socrates - சாத்தனார் - வடம வண்ணக்கன் பெரிய சாத்தனார்
Agatho - நன்மாறன்
Eryxmachus - உறையூர் மருத்துவன் தாமோதரனார்
Alcihiades - மருதனிள நாகனார்
Pausanias - பரணர்

Aristophaues - கணக்காயனார் மகனார் நக்கீரனார்
Diotima - ஔவையார்
ßaedrus - காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

என்று கிரேக்க அறிஞர்க்கு ஈடாகத் தமிழ்ப் பாவலர்கள் குறிக்கப் பட்டிருப்பது சிறப்புக்குரியது எனலாம்.

சீமைக் கடிதம் எனும் தலைப்பில் இலண்டனிலிருந்து ஆ. லக்ஷி யம்மாள் எழுதிய கடிதங்கள், அவர்தம் ஐரோப்பிய நாடுகளிலான பய ணம் பற்றியதாக அமைகின்றன. தவிர, ரெவ். கு. கிங்ஸ்பெரி என்பார். 'ஜப்பானும் ஜப்பானியரும்' எனும் தலைப்பில் அரிய கட்டுரை வழங்கியிருக்கிறார். ஜப்பான் நாட்டைப் பற்றியும் ஜப்பானியர் பற்றி யும் மிக விரிவாகவும் மேலதிகமான செய்திகளுடனும் இக்கட்டு ரைத் தொடர் அமைந்துள்ளது. இதேபோன்று, இலங்கையும் இலங் கையரும் எனும் தலைப்பிலான கட்டுரையும் சுட்டத்தக்கதொன்றா கும். ஸயாம் நாடு - வெள்ளை யானைப் பிரதேசம் பற்றிய கட்டுரைத் தொடரும், எனது அயர்லாந்து வாழ்க்கை எனும் தலைப்பில் சேலத்தி லிருந்து ஒரு பாரிஸ்டர் எழுதிய கட்டுரைத் தொடரும் சுவையானவை.

பொதுவான தலைப்புகளில் அமைந்த கட்டுரைகளில் முகஸ் துதி எனும் கட்டுரையை - ரசமான கட்டுரையை- ஒரு பிராமண ஸ்திரி எனும் புனைபெயரில் ஒருவர் எழுதியிருக்கிறார். முகஸ்துதிக்கு இனி மேல் மயங்குவதில்லை என்று முடிவெடுத்த ஒரு மன்னனை, முகஸ் துதி கூறியே தோற்கடித்தான் ஒருவன் என்று நயம்படக் கூறுகிறது இக்கட்டுரை.

2) மொழிபெயர்ப்பு : உலகப் புகழ்பெற்ற கூற்றுகள் இனிய தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியாகியுள்ளன. மொழிபெயர்த் தவர் அ. மாதவையா 'இரு மொழியாளன்' எனும் புனைபெயரில், பஞ்சாமிர்தம் நூலின் அட்டைத் தலைப்பில் இடம்பெற்றுள்ள கூற் றும் மொழிபெயர்ப்புதான்.

We call our fathers fools,
as wise we grow;
No doubt, our wise sons
will call us so

என்பதற்கு ஆசிரியர் தரும் தமிழாக்கம் வருவாறு:

அறிவோங்க, நம் முன்னோர் அறிவிலிகள் என்குவம் யாம்;
உறுதி, நம்மையும் பின்னோர் அவ்வண்ணம் உரைப்பர் (ப. 32)

இதேபோன்று,

Sad is it to be weak,
It is sadden to be wrong,
But if the strong God's statutes break,
It is saddest to be strong

என்பதற்கான தமிழாக்கம் சிறந்து விளங்குகின்றது:

மெலிவு துயரே; தவறு மேல் துயரமே;
மெலியா வலியினர் அறநெறி மீறிடின்
மெலியா வலிதான் மேலிலாத் துயரமே (ப. 32)

**ஊ) மதிப்புரை**

பஞ்சாமிர்தம் இதழில் பல நூல்களின் மதிப்புரைகள் வெளியாகி யுள்ளன. சென்னைப் பல்கலைக்கழகம் 1924 இல் வெளியிட்ட 'தமிழ் அகராதி'யின் முதல் தொகுதியின் முதல் பகுதிக்கான மதிப்புரையை (ப. 949) அ. மாதவையா எழுதியிருக்கிறார். அதில், அகராதியில் காணும் சில குறைகளைக் காரணங்களுடன் எடுத்துக் காட்டுகிறார். காட்டுக்கு ஒன்று :

"அபின் - கசகசாச் செடியின் பால்" ஆங்கிலத்தில் `inspissated juice' என்றதைத் தமிழில் விளக்காமையால், தமிழிற் கூறியிருப்பது விபரீத ஞானத்தையே விளைக்கும்.

**சமயம்**

சமயம் தொடர்பாகப் பல கட்டுரைகள் இவ்விதழில் இடம் பெற் றுள்ளன. KRR சாஸ்திரி எழுதிய 'நமது கோயில்கள்' எனும் கட்டுரை குறிப்பிடத்தக்க ஒன்றாகும். ஹிந்து தேவஸ்தானச் சட்டம், சர்வ சமய சமரச தர்சநி என்பனவும் சமயம் தொடர்பான செய்திகளை உள்ளடக்கி யுள்ளன.

### வரலாறு

வரலாறு தொடர்புடைய கட்டுரைகளும் தகவல்களும் தவறாது இடம்பெற்றுள்ளன. தேசிகன் என்பார் எழுதிய 'பூர்வீக இந்தியக் குடியரசு நாடுகள்', சிவத்தியானானந்த மகரிஷி எழுதிய 'ரிக்வேத ஆரியர்', மகேச குமார சர்மா எழுதிய 'பௌத்தர் ஆட்சியில் அருங்கலமாட்சி', ரா. வாசுதேவ சர்மாவின் 'பண்டைத் தமிழர் நீதிமுறை', K. R. சுப்பிரமணிய ஐயரின் 'அறுபத்து மூவர்களின் காலம்' ஆகியவை குறிப்பிடத்தக்கவையாகும். இவ்விதழில் P.T. ஸ்ரீநிவாஸையங்கார் 'மதுரைச் சரிதை'யை மிக விரிவாகவும் விளக்கமாகவும் எழுதியிருப்பது சிறப்பாகச் சுட்டத்தக்கது.

### வாழ்க்கை வரலாறு

சரிதைகள் (ஜீவிய) எனும் தலைப்பின்கீழ் டானியன் பாதிரியார், ஸ்ரீராமாநுஜர், முகம்மது நபியின் சரிதம் ஆகியவை வெளியாகியுள்ளன. தளவாய் அரியநாத முதலியார் குறித்து 'தக்ஷிண சரித்திர வீரர்' எனும் தலைப்பில் அரியதொரு வாழ்க்கை வரலாற்றினைச் சுவைபட அ. மாதவையா எழுதியிருக்கிறார்.

### கல்வி

கல்விப் பொருண்மை குறித்தும் பல் கட்டுரைகள் இடம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. பெண் கல்வி, இந்திய தேசியக் கல்வி ஆகிய தலைப்புகளில் இதழாசிரியர் அ. மாதவையா அரிய கட்டுரைகளைப் படைத்திருக்கிறார். வே. நாரணையர் என்பவர், ஜப்பானிய கலாசாலைகள் எனும் தலைப்பில் ஜப்பானில் உள்ள பல்கலைக் கழகங்கள் குறித்து மிக நீண்ட தொடர்கட்டுரையினை வடித்திருக்கிறார். அரிய செய்திகளின் கருவூலமாக இது விளங்குகிறது.

### சமூகவியல்

சமூகத்துடன் தொடர்புடைய பல பிரச்சினைகள் இவ்விதழில் அலசி ஆராயப்பட்டுள்ளன. 'சிசு மரணம்' எனும் தலைப்பில் டாக்டர் S. முத்துலக்ஷ்மி எழுதியுள்ள கட்டுரைத் தொடர், சிசு மரணத்திற்கான காரணங்களை மட்டுமல்ல அதை நீக்குவதற்கான வழிவகைகளையும் விரிவாக ஆராய்கிறது. 'தீண்டாமை யென்னுந் தீங்கு' எனும்

தலைப்பில் வே. ஆ. சிதம்பரம்பிள்ளை உணர்ச்சிமிக்க கட்டுரையினைத் தருகிறார். நாகரிக சமூக வாழ்க்கைக் குறிப்புக்களும் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன.

## சட்டம்

சட்டம் பற்றிய செய்திகளும் இடம்பெறாமலில்லை. சுதேச மித்திரன் இதழில் வெளிவந்த ஒரு வழக்கு பற்றிய செய்தியைப் பஞ்சாமிர்தம் இதழ் பயன்படுத்திக் கொண்டிருக்கிறது. 'விவாகமா? நரமாம்ச விக்கிரயமா?' எனும் தலைப்பில் அந்த வழக்கு பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது.

## கூட்டுறவு

கூட்டுறவே நாட்டுயர்வு என்பதனால் கூட்டுறவு இயக்கம் தொடர்பான பல கட்டுரைகளைக் காண முடிகிறது. 'கூட்டுறவு இயக்கம்' எனும் தலைப்பிலான கட்டுரையில், இவ்வியக்கத்தைப் பொது நிலையில் அலசுகிறார் M.S. சேக்ஷாசலையர். ந. வேங்கடபதி ராஜு என்பார் எழுதிய 'பிறநாடுகளில் கூட்டுறவு இயக்கம்' எனும் கட்டுரை பயன்மிக்கது.

இதேபோன்று, தத்துவம், சுகாதாரம், சாஸ்திரம், கைத்தொழில், விளையாட்டுக்கள், துணுக்குச் செய்திகள், சிறுவர் பகுதி, நகைச் சுவைத் துணுக்குகள் ஆகியனவும் பஞ்சாமிர்தம் இதழில் இடம் பெற்றுள்ளன.

## பலதுறைப் பொறுக்குமணிகள்

பல்சுவை மிக்க செய்திகள் பல இத்தலைப்பில் காணப்படுகின்றன. பத்திரிகை ஆராய்ச்சி எனும் உள்தலைப்பிட்டு ஆசிரியர் இவற்றைத் தருகிறார். எடுத்துக்காட்டாகச் சிலவற்றை இங்குக் காண்போம்:

### அ) நாம் நாகரிகம் அடைந்திருக்கிறோமா?

'நடக்கை நயம் என்பது இப்பொழுது சிறிதும் இல்லை... தெருவில் ஒருவன் கீழே விழுந்தால் அவனைச் சுற்றிலும் வேடிக்கை

பார்த்துக் கூடும் கும்பல் நாகரிகக் குறைவையே காட்டும். ஓநாய்களும் நரிகளும் இப்படிக் கூடுவது இயற்கை. மனிதன் அவ்வாறு செய்தால், அவற்றின் ஸ்திதிக்குத் தாழ்கிறான்.' (பக். 47-48)

**ஆ) மண்ணைத் தின்பவர்**

'ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா முதலிய பிரதேசங்களிலே, மண்ணைத் தின்னும் காட்டுமிராண்டிகள் பலர் இருக்கிறார்களாம். வண்டல் மண் க்ஷயரோகத்தை நன்றாக்கும் அன்று அவர்கள் நம்புகின்றனர்.' (ப. 146)

**இ) பால் கறத்தல்**

'பால் கறக்கும்போது மாட்டுக்கும் பாற்காரனுக்கும் அன்னியோன்னிய அன்பு இருக்க வேண்டியதவசியம். ஏனெனில், கறக்கும் சமயத்தில் மாடு சாந்தமாயில்லாதிருந்தால், பால் அளவு குறைவதன்றி, அதன் வெண்ணெய்ச்சாரமும் குறைந்து, நயமில்லாததாய் விடும்'. (ப. 218)

**ஈ) ஒரு நாட்டின் விலை**

'இப்பொழுது அமெரிக்காவில் கெண்டக்கி (Kentucky) மாகாணமாய் விளங்கும் பிரதேசத்தை, முதலில் அங்குச் சென்று குடியேறின வெள்ளையர்கள், அந்நாட்டு வாசிகளுக்கு ஆளுக்கொரு உள்ளங்கி (ஷேற்டு) விலை கொடுத்து நாட்டை வாங்கிக் கொண்டனரென்பது உண்மை.' (ப. 220)

**உ) பிச்சைக்காரர் தினசரிப் பத்திரிகை**

'பிரான்சு தேசத்து பாரிசில் பிச்சைக்காரர்களுக்கென்றே ஒரு தினசரி வெளியாகிறது. பலதரப்பட்ட பிச்சைக்காரர்களுக்கு உபயோகமாகும் சமாசாரங்கள் இதில் வெளிவருகின்றன.' (ப. 328)

**ஊ) சென்னைச் சர்வகலா சங்கம்**

'இச்சங்கத்தின் பரிபாலன சபையார் (Senate) 16.3.1925 மாலையில் கூடி... மொத்தம் மூன்று நாள் பிற்பகல்களில் வேலை செய்தனர்.

அப்பால் காரிய அட்டவணைப்படி இன்னும் பல விஷயங்கள் மீதமிருந்தும், அவற்றைக் கவனியாமல் கைவிட்டு, மூன்றாம் நாள்

மாலையில் கூட்டம் குலைந்து போயினர். அறிவிலும் படிப்பிலும் சிறந்த சர்வகலா சங்கத்தாரின் கடமைப்பற்றே இவ்வாறாயின் பொது ஜனங்களை எவரே பழிக்கலாகும்! சம்பளமில்லாத வேலை சளபளர் என்பது இதனால் துலங்குகின்றது. (பக். 1014-15)

## நகைச்சுவைத் துணுக்குகள்

கருத்துக் கருவூலமாகப் போற்றப்படும் செய்திகள் இவ்விதழில் இடம்பெறும் அதே வேளையில் நகைச்சுவைத் துணுக்குகளும் தவறாது இடம்பெற்றுள்ளன. சிலவற்றைக் காண்போம். விகட விநோதம் எனும் தலைப்பில் இவை இடம்பெற்றுள்ளன.

அ) கிழவன் : 'தோஷம்' என்பதற்கும் 'ஸந்தோஷம்' என்பதற்கும் வித்தியாசம் என்ன?

வாலிப மனைவி : நான் உங்களை விஷமிட்டுக் கொன்றால் 'தோஷம்'; நீங்களாகக் காலரா வந்து செத்தால் 'ஸந்தோஷம்'. (ப. 338)

ஆ) வீட்டுக் கனவான் : நாய் குலைக்கிறதென்று பயப்பட வேண்டாம். சும்மா வாருங்கள். 'குலை நாய் கடியாது' என்று பழமொழி கேட்டதில்லையா?

விருந்தாளி : நான் கேட்டிருக்கிறேன். நாய் கேட்டிருக்குமோ என்னவோ என்றுதான் பயம்.

இ) ஹைகோர்ட் ஜட்ஜ் : நான் எதற்காக இந்த ஸ்தானத்தில் இருக்கிறேனென்று நினைக்கிறாய்?

குற்றவாளி : மாதம் நாலாயிரம் ரூபாய்க்காக. (ப. 680)

ஈ) குழந்தை : அம்மா, இதுதானா இன்று பிறந்த என் தம்பி?

அம்மா : ஆமா; சுவாமி உனக்குத் துணையாக அனுப்பினார்.

குழந்தை : பல்லுமில்லே, தலைமயிருமில்லே. சுவாமி உன்னை ஏமாத்திட்டார். (ப. 885)

உ) பிரயாணி : வில்லிவாக்கத்துக்குப் போகும் கடைசி வண்டிக்கு ஒரு டிக்கெட் கொடு.

டிக்கட் கொடுப்பவர் : அது புறப்படும் வரை நீர் உயிரோடிருப் பீரோ?

## சிறுவர் பகுதி

ஓராண்டுக்குப் பிறகு பஞ்சாமிர்தம் இதழின் அளவு மாறுகிறது (ராயல்). இதன் காரணமாக, ‘சிறுவர் பக்கம்’ எனும் புதிய பகுதி இடம்பெறலாயிற்று. இப்பக்கத்தில் இடம்பெற்ற - சிறுவர்களுக்கு அறிவூட்டும் - செய்திகள் சிந்தனையைத் தூண்டுவனவாக விளங்கின. எடுத்துக்காட்டாக, ‘குதிரை மனிதனுக்கு அடிமையானது’ எனும் பகுதியைக் குறிப்பிடலாம்.

குதிரை மேய்ந்து வந்த இடத்தில், மான் அத்துமீறி வந்து விட்டது. மானைக் கொல்லுமாறு மனிதனை வேண்டியது குதிரை. ‘மான் வேக மாக ஓடுமே! என்னால் எப்படி முடியும்?’ என்று மனிதன் கேட்டான். ‘என் மீது அமர்ந்து கொள்’ என்று குதிரை கூறியது அன்று முதல் மனிதனைச் சுமப்பதாக குதிரை மாறிவிட்டது. (ப. II - 73)

## பிற செய்திகள்

முதல் பத்தியின் முதல் எழுத்து ஓவியப் பாணியில் அமைந் திருப்பது இவ்விதழின் சிறப்பாகும்.

உரிய இடங்களில் படங்களை இணைத்து வெளியிடும் பாணி பாராட்டுக்குரியது.

இரண்டாம் ஆண்டின் தொடக்கத்தில், சந்தாதாரர் எண்ணிக்கை குறைந்து போயிற்று. ‘போன வருஷம் புத்துணவுண்ட சிலர்க்குத் தெவிட்டிவிட்டது போலும் தோன்றுகிறது’ (II - 3) என்று ஆசிரியர் குறிப்பிட்டிருக்கிறார்.

22.10.1925இல் அ. மாதவையா மரணம் அடைகிறார். அதனை யடுத்து இரண்டு இதழ்கள் மட்டுமே வெளிவருகின்றன. பிறகு, நின்று போகிறது.

ஆண்டுச் சந்தாதாரர்க்கு நூல்களின் விலையைக் குறைத்துக் கொடுத்த போதிலும் சந்தாதாரர் எண்ணிக்கை கூடவில்லை; மாறாக் குறைந்து போய்விட்டது.

குறள் நானூறு, ஸ்ரீமத் பகவத் கீதை, தாருல் இஸ்லாம், ஜவாஹிருல் புர்கான், இந்துநேசன், குசிகர் குட்டிக் கதைகள் பற்றிய விளம்பரம் மட்டுமே பஞ்சாமிர்தம் இதழில் காணக்கிடக்கிறது.

அச்சுப்பிழையின்றி இதழ் வெளிவந்திருப்பது பெரிதும் பாராட்டுக்குரியது.

ஆபாசம் என்பது துளியேனுமின்றி இதழ் வெளியானது சிறப்பாகப் போற்றுதற்குரியது.

**நிறைவுரை**

8 அணா விலையில், பல்வேறு துறைச் செய்திகளைத் தாங்கி, தமிழ்மொழிக்குச் சேவை செய்வதையே நோக்கமாகக் கொண்டு, சிந்திக்கத் தூண்டும் வகையில் சீரும் சிறப்புடன் வெளிவந்த பஞ்சாமிர்தம் எனும் பல்சுவை மாத இதழ், தமிழ் இதழியல் வரலாற்றில் போற்றுதலுக்குரியது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இதழியல் கோட்பாடுகளின் அடிப்படையில் இதனை மேலும் விரிவாக ஆராய்வதற்குக் களனுண்டு.

அ. மாதவையாவின் பஞ்சாமிர்தம், பழநி பஞ்சாமிர்தம் போல் இனிக்கிறது என்னும் பண்டிதை அசலாம்பிகை அம்மையாரின் கூற்று உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை.

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் ௧௫. சென்னை, யுவ ஹூ புரட்டாசி மீ 18உ வெள்ளி (4-10-1935) இதழ் ௧௪


இந்நிலத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
தனமேறி ஈடில் லாத
செந்தமிழ் செழியத் தமிழ்ப்பேச்சு
யாண்டுமே சகவாழ் வெய்த
இந்நிலம் வந்தவருள் இனிதெனப்பின்
இந்தியர்எனும் இயற்கை ஓங்க
நன்னெறி வழியுமே நான்கொண்டேன்
என்னவென் நாளும் வாழ்க!

## மதுரையின் வெற்றி

இந்தக் கிழமை நடந்த நகர சபைத் தேர்தலில் மதுரையில் காங்கிரசுக்கு நல்ல வெற்றி கிடைத்தது. இன்னும் அதிகமாகக் காங்கிரசுக்கு ஸ்தானங்கள் கிடைக்கக்கூடும் எனப் பலர் எதிர்பார்த்ததுண்டு. அந்த வகையில் ஓரளவு குறைவுதான். ஆனாலும், நகர சபையின் மொத்த எண்ணிக்கையில் சரி பாதிக்கு மேல் மூன்று ஸ்தானங்கள் அதிகமாகக் கிடைத்தது ஓர் குறைந்த வெற்றி என்று கொள்ளுமாறு இல்லை. இப்போது தெரிந்தெடுக்கப் பெற்றிருக்கும் காங்கிரஸ்க்காரர் மட்டுமே வேறு எவரையும் சிறிதும் எதிர்பாராமல் எந்தக் காரியத்தையும் செய்யவல்ல அளவு மதுரை நகர பரிபாலன சபையில் காங்கிரஸ் இடம் பெற்று விட்டது.

தமிழ் நாட்டில் முதலாவது பெரிய நகரம் மாகாணத் தலைநகரான சென்னை. இரண்டாவது பெரிய நகரம் மதுரை நகரமேயாகும். மதுரையின் காங்கிரஸ் வெற்றி மற்றைய நகர மக்கட்கு ஓர் பாடமாக அமைந்திருக்கிறது. மதுரை நகர் அரசியல் உழைப்பில் முதன்மை பெற்ற இடங்களில் ஒன்று. அதுகொண்டுதான் இந்தத் தேர்தலின் வெற்றியை இன்னும் அதிகமாகப் பலர் எதிர்பார்த்தனரே யன்றி வேறன்று. இன்றேல் இப்போது பெற்ற வெற்றியின் தன்மை குறைவென்று கூறுதற்கில்லை.

மதுரை நகர சபைக்கு ஒதுக்கப்பட்ட இடங்களும் சேர்த்து மொத்தம் முப்பத்தாறு ஸ்தானங்கள். இந்த முப்பத்தாறில் இருபத்தொன்பது இடங்கட்கே காங்கிரஸ் ஆட்கள் நிறுத்தப் பெற்றனர். இருபத்தொன்பதின்மருள் இருபத்தொருவர் வென்றனர். இன்று மதுரை நகர சபையிலுள்ள முப்பத்தாறு அங்கத்தவர்களுள் இருபத்தொருவர் காங்கிரஸ்க்காரர். ஏனையோர் பதினைவர். மற்றனைவரையும்விட ஆறு பேர் அதிகமாகக் காங்கிரஸ்க்காரர் இருக்கின்றனர். எனவே காங்கிரஸ்க்காரர் விருப்பத்தின் வழியே மதுரை நகர சபையை நடத்திச் செல்ல முடியும்.

மதுரை நகர சபை வாக்காளருள் பெரும்பாலார் காங்கிரஸின் பெருமையையும் தியாகத்தையும் உணர்ந்து நடந்து கொண்டது பெரிதும் போற்றத்தக்கது. சென்ற விடுதலைப் போரில் தங்கள் ஊர்த் தொண்டர்களும் தலைவர்களும் நாட்டு விடுதலை ஒன்றே காரணமாகப் பட்ட கொடுந் துன்பங்களை நேரில் அறிந்த மதுரை மக்கள் அவற்றை மறவாது நினைந்து இந்தத் தேர்தலில் செய்கையில் காட்டியது, அவர் தம் உயர்தகைமையை உணர்த்துகிறது.

கிடைத்த வெற்றியால் மதுரையில் காங்கிரசுக்கு மதிப்புக் கூட்டப்பட்டு விட்டதென எண்ணிக் காங்கிரஸ்க்காரர் எவரும் இறுமாப்பு அடையமாட்டார் என நம்புகிறோம். அவ் எண்ணமே வீழ்ச்சிக்குக் கொண்டுபோகும் கருவி என்பது அறிஞர் துணிபு. நகர சபை போன்ற இடங்களைக் கைப்பற்றுதல் மூலம் மக்கட்கு நன்மை செய்யலாம் என்ற ஒரே நோக்கத்தோடுதான் காங்கிரஸ்க்காரர் இன்ன காரியங்களில் புகுகின்றனர் என்ற உண்மையை உலகறியக் காட்டுதல் வேண்டும். நகர

# ஊழியன்

## ப. மகாலிங்கம்

### முன்னுரை

இந்திய நாடு விடுதலையை வேட்டுநின்ற காலகட்டத்தில் இந்தியாவின் பல பகுதிகளிலும் நாளிதழ்களும் வார இதழ், திங்கள் இதழ் ஆகியனவும் வெளிவரத் தொடங்கின. அதேபோல் தமிழகத்தி லும் குறிப்பிடத்தக்க அளவில் தமிழ் இதழ்கள் வெளிவந்து விடுதலை இயக்கத்திற்குத் தம் பங்களிப்பை அளித்துள்ளன. அந்த வரிசையில் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபதுகளின் தொடக்கத்தில் தொடங்கி முப்பதுகளின் இறுதிவரையில் ஏறக்குறையப் பத்தொன்பது அல்லது இருபதாண்டுகள் சீரோடும் சிறப்போடும் வெளிவந்து தொண்டாற் றிய இதழ்களுள் ஒன்று 'ஊழியன்'. இதன் ஆசிரியராக இருந்து பணி யாற்றியவர் காரைக்குடி தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் (30.10. 1898 - 1974) அவர்களாவர். ஊழியன் இதழின் தோற்றம், தோற் றத்திற்கான பின்னணி, வளர்ச்சி நிலைகள், மக்களிடையே அது பெற்றி ருந்த செல்வாக்கு, நாட்டு விடுதலை - சமுதாய விடுதலை குறித்த கண் ணோட்டத்தில் ஊழியன் இதழின் பங்களிப்பு ஆகியன குறித்து அறி வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### ஊழியன் வார இதழ் – ஓர் அறிமுகம்

காரைக்குடியைச் சேர்ந்த விடுதலைப் போராட்ட வீரரும், காந்திய நெறிச் சிந்தனையாளருமான தமிழறிஞர் ராய. சொக்கலிங்கம் அவர் களால் நடத்தப்பட்டு வந்த வார இதழ் 'ஊழியன்'. அக்காலத்தில்

தமிழகத்தில் வெளிவந்த செல்வாக்குமிக்க குறிப்பிடத்தக்க வார இதழ்களுள் ஒன்று ஊழியன் எனலாம். ஊழியன் பின்னாளில் - முப்பது களில் சென்னையிலிருந்து வெளிவந்தது. அந்தக் காலகட்டமே ஊழி 'யன் இதழ் மக்களிடையே செல்வாக்கின் உச்சத்தில் இருந்த காலம் எனத் தெரிகிறது. வண்ணப் படங்கள் - ஆப்டோன் படங்கள், கீற்று வரை படங்கள், கேலிச் சித்திரங்கள் ஆகியவற்றை அதிக எண்ணிக்கையில் தாங்கியதாகக் 'கால் டிம்மி' அளவில் நாற்பத்தாறு பக்கங்களைக் கொண்டதாகத் 'தேசிய சித்திர வாரப் பத்திரிகை' என்னும் பெயர் தாங்கியதாக வெளிவந்தது.

நாட்டு விடுதலை - சமுதாய விடுதலை - அறிவியல் முன்னேற் றம் - வணிகம் தொடர்பான செய்திகள் - காந்தியக் கருத்துக்கள் - காங்கிரஸ் இயக்கச் செய்திகள் - இலக்கியப் பகுதிகள், உலக நாடுகளின் வளர்ச்சி பற்றிய கட்டுரைகள் - தொழிலாளர் நலம் - தொழில் முன்னேற்றம் - விளையாட்டு - கலைத்துறைச் செய்திகள் - திரையுலகச் செய்திகள் ஆகியவற்றை உள்ளடக்கியதாக ஊழியன் வடிவம் கொண்டுலவியது. முதியோர், இளைஞர், ஆடவர், பெண்டிர் எனச் சமுதாயத்தின் எல்லாப் பிரிவு மக்களுக்கும் உரிய இதழாக ஊழியன் தன்னை வடிவமைத்துக் கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

ஒவ்வொரு இதழிலும் விளம்பரப் பகுதிகளும் ஏராளமாக இடம் பெற்றுள்ளன. வணிக நிறுவனங்கள் ஊழியன் இதழில் போட்டிபோட்டு விளம்பரம் செய்தனவோ என எண்ணத் தோன்றுகிறது. ஆதலின், இதழ் களை நடத்துவதில் எல்லா இதழாசிரியருக்கும் வழக்கமாக நேர்ந்து விடும் பொருளாதார நெருக்கடி சிறிதும் ஊழியன் இதழுக்கோ அதன் ஆசிரியருக்கோ இருந்திருக்க வாய்ப்பில்லை என்றே தோன்றுகிறது. இதழின் செய்தி வெளிப்பாட்டு நிலையிலும் இதழின் வெளியீட்டுப் பின்னணி நிலையிலும் வளமையும் செல்வாக்கும் பெற்ற இதழாக ஊழியன் திகழ்ந்துள்ளது.

ஊழியன் இதழின் வாசகர்களும் சந்தாதாரர்களும் தமிழகத் தில் மட்டும் அல்லாது, கடல் கடந்து தமிழர்கள் வாழும் அயல் நாடு களான சிங்கப்பூர், மலேசியா, சைகோன், இலங்கை, பர்மா ஆகிய வற்றிலும் இருந்துள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

வெகுசனப் பத்திரிகை என்பதற்கு எத்தகைய தன்மைகள் இருக்குமோ அவற்றையெல்லாம் முழுமையாகப் பெற்றிலங்கிய முன்னோடி இதழாக ஊழியன் திகழ்ந்தது என்றால் அது மிகையாகாது.

## ஊழியனின் தொடக்கம் – தனவைசிய ஊழியன்

1925ஆம் ஆண்டு சூலைத் திங்களில் தன் பெயரை 'ஊழியன்' என மாற்றி அமைத்துக் கொண்டதோடு மட்டுமல்லாது, தனது இதழ்த் தொண்டின் நோக்கத்தையும் விசாலப்படுத்திக் கொண்ட நிலையை 'ஊழியன்' இதழின் வரலாறாக அறியமுடிகிறது. ஊழியன் இதழின் தொடக்கம் 'தனவைசிய ஊழியன்' அல்லது தனவைசிய ஊழியன் இதழின் தொடர்ச்சியே 'ஊழியன்' என்பதே பொருந்தும். ஆதலின், ஊழியன் இதழின் தோற்றமும் வளர்ச்சியும் குறித்து அறிய முற்படுகையில் தனவைசிய ஊழியன் குறித்த வரலாற்றையும் இணைத்துப் பார்க்க வேண்டுவது இன்றியமையாத நிலைப்பாடாகிறது.

## தனவைசிய ஊழியன்

தனவைசிய சங்கத்துக்கு உரியதாக ரௌத்திரி ஆண்டு ஆவணி 24இல் 8.9.1920 புதன்கிழமை காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திர சாலையில் அச்சியற்றி, 'தனவைசிய ஊழியன்' என்னும் பெயரில் 4 பக்கங்கள் கொண்டதாக 20 x 33 செ.மீ. என்னும் அளவில் வடிவம் கொண்டு முதல் இதழ் வெளிவந்தது. முதல் இதழ் புதன் கிழமை வெளிவந்திருந்தாலும் வெள்ளிக்கிழமைதோறும் வெளிவரும் என்னும் குறிப்பு முகப்புப் பகுதியிலேயே இடம் பெற்றுள்ளது. தனவைசிய ஊழியன் தொடங்கப்பட்ட காலத்து அதன் முதல் இதழாசிரியர் பொறுப்பை ஏற்றுப் பணிசெய்தவர் செந்தமிழ்ச் சீர்திருத்தச் செம்மல் காரைக்குடி திரு. சொ. முருகப்பச் செட்டியார் அவர்களாவர். இந்த இதழைத் தொடங்கும்போதே, பொதுநலப்பணிகளில் - குறிப்பாகத் தனவைசிய சமூகத்துக்குரிய பணிகளில் தங்களை இணைத்துக் கொண்டு தொண்டாற்றிய திரு. முருகப்பச் செட்டியார், திரு. ராய. சொக்கலிங்கம் ஆகியோர் இணைந்துநின்று தொண்டாற்றியிருக்கின்றனர். முதல் இதழின் மூன்றாம் பக்கத்தில் 'மனிதனும் அவன் கடமையும்' என்னும், திரு. ராய. சொ. அவர்களின் ஒரு பக்கக் கட்டுரை இடம் பெற்றுள்ளது.

இதழின் முகப்புப் பகுதியின் தொடக்கத்தில் பிள்ளையார் சுழி இடப்பட்டு, சிவமயம் என்னும் வாசகம் மிளிர்கிறது. இடதுபக்கம் மேல் பகுதியில் பதிவு எண்ணும் வலது பக்கத்தில் 'Dhanavyasia Oolian' என்றும் ஆங்கிலத்தில் இடம் பெற்றுள்ளன. இதழின் தொடக்கத்தி லேயே வாரந்தோறும் வெளிவரக் கூடியதாக திருக்குறள் இரண்டு - 'குடிசெய்வ லென்னுமொருவர்க்கு' எனத் தொடங்கும் குறளும், 'ஊழையும் உப்பக்கங் காண்பர்' என்னும் குறளும் இடம் பெற்றுள்ளமை குறிக்கத்தக்கது. கிழமையும் திங்களும் இடம் பெற்றுள்ள வரியில் 'மலர் க', 'இதழ் க' எனக் குறிக்கப்பட்டுள்ளது.

## தலையங்கப் பகுதி

தனவைசிய ஊழியனின் தலையங்கப் பகுதி இரண்டாம் பக்கத் தில் இடம் பெற்றுள்ளது. தலையங்கத்திற்கு மேற்பகுதியில் வேலும் மயிலும் துணை எனத் தலைப்பிட்டு 'நாளென் செயும்! வினைதானென் செயும்!' என்னும் கந்தரலங்காரப் பாடல் முதல் இதழ் தொடங்கி ஒவ் வொரு இதழிலும் இடம் பெற்றுள்ளது.

'நமது பத்திரிகை' எனத் தலைப்பிடப்பட்டுத் திரு. முருகப்பச் செட்டியார் அவர்களால் எழுதப்பட்டுள்ள தலையங்கம், தனவைசிய ஊழியன் இதழின் நோக்கத்தைப் புலப்படுத்துவதாக வெளிப்படு கிறது. 'நமது பத்திரிகை சிறப்பாக நமது சமூக முன்னேற்றத்திற்கும் பொதுவாக இந்தியர்களின் முன்னேற்றத்திற்கும் உழைக்கும்' என அது உறுதி கொண்டுள்ளமை தெரிய வருகின்றது.

## முதல் கட்டுரை

இதழின் முதல் பக்கத்தில் முதல் கட்டுரையாக மகிபாலன்பட்டி எம். சின்னையா செட்டி அவர்களின் 'சமூக ஊழியம்' என்னும் கட்டுரை இதழின் நோக்கத்தை விளக்கிடும் திறத்துடன் அமைந்திருப்பது பொருத்தமுடையது.

## இதழ் சந்தா விவரம்

இந்தியா, பர்மா, சிலோன் முதலிய உள்நாடுகளுக்கு ஆண்டு சந்தா ச - 0 - 0 (நான்கு உரூபாய்) சிங்கப்பூர், சைகோன் முதலிய வெளிநாடுகளுக்கு ஆண்டுச் சந்தா ரு - 0 - 0 (ஐந்து உரூபாய்)

தனிப்பிரதி O - க - சு (ஒரு அணாவும் ஆறு காசுகளும்) என மேனேஜர் பெயராலே வெளியிடப்பட்டுள்ளது.

## இடம் பெற்றுள்ள செய்திகள்

பொதுவர்த்தமானம் என்னும் தலைப்பில், சென்னையிலிருந்து மலாய் ஸ்டேட்டிற்கு 'பீஸ்டார்' என்ற கப்பல் செல்லுகிற குறிப்பு, திருவண்ணாமலை அண்ணாமலையார் பற்றிய பக்திக் குறிப்புகள் ஆகியன இடம் பெற்றுள்ளன. 'கண்டது' என்ற தலைப்பின் கீழ் தமிழறிஞர் உ.வே.சா. அவர்கள் தலைமையேற்று நடத்திய தமிழ் நிகழ்ச்சி பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது. 'நமது பல சரக்கு' என்னும் தலைப்பிட்டு அஞ்சாநெஞ்சன் எழுதுகிறார் எனக் குறிக்கப்பட்டுள்ளது. அதில் 'தைரியம்', எந்த அளவுக்கு வாழ்வின் இன்றியமையாத துணையாகின்றது என்னும் நிலைகள் விளக்கப்பட்டுள்ளன. இளைஞர்களுக்கும், மற்ற அனைவருக்குமே தன்னம்பிக்கை ஊட்டும் உளவியல் கட்டுரையாக இது நின்று சிறக்கிறது.

## இரண்டாம் இதழ்

இரண்டாம் இதழ் 17.9.1920 வெள்ளிக்கிழமை எட்டுப்பக்க அளவில் வெளிவந்துள்ளது. 'நமது பத்திரிகை திறப்பு விழா' என்ற தலைப்பில் 'தனவைசிய ஊழியன்' இதழின் சென்ற வாரத் தொடக்க விழா நிகழ்ச்சி பற்றிய செய்திகள் பதிவாகியுள்ளன. இதழின் திறப்பு விழாவுக்குச் சிறப்பு விருந்தினராக வருகை தந்த தேவகோட்டை கனம் டிப்டி கலெக்டர் ஒய்.வி. ஸ்ரீநிவாஸையரவர்கள் செய்த உபந்யாசத்தின் சுருக்கம் இடம் பெற்றுள்ளது.

காரைக்குடி கே.எஸ். சிங்காரவேற்பிள்ளை அவர்கள் 'பத்திரிகை படித்தல்' என்னும் தலைப்பில் அமைந்த கட்டுரை இதழியலின் வருகைக்கும் தொண்டுக்கும் நல்லதோர் ஆற்றுப்படுத்தலாக அமைந்துள்ளது.

அரசியல் பகுதியில் இந்திய தேசிய விசேஷ மகாநாடு, லாலா லஜபதியின் அக்ராசனம், காந்தியடிகளின் ஒத்துழையாமை பற்றிய தீர்மானம் ஆகியவை இடம் பெற்றுள்ளன. கடைத்தெரு என்ற பகுதியில் பவுன் விலை (க அ - அ - O) பதினெட்டு ரூபாய் எட்டணா என்பது

தொடங்கி, பல பொருள்களின் விலைவாசிப் பட்டியலைக் குறித்து, வணிகர்களின் - மக்களின் பொருளியல்சார் அறிவுக்குத் துணையாகி யுள்ளது. இளைஞர்களுக்கென்று ஒரு தனிப்பகுதியும் இடம் பெற் றுள்ளமை சிறப்பிற்குரியது.

## ராய. சொக்கலிங்கம் ஆசிரியர் பொறுப்பேற்றல்

தனவைசிய ஊழியன் ஆசிரியர் பொறுப்பில் திரு. முருகப்பச் செட்டியார் அவர்கள் 7.7.1922 வரையில் பணி செய்துள்ளார். 'எனது தொடர்பு' என்னும் தலைப்பிட்டு அவர் எழுதியுள்ள தலையங்கத்தில் தம் உடல்நிலையின் ஆற்றாமை காரணமாக ஊழியன் தொடர்பை நீக்கிக் கொள்வதாகவும், தமது ஆப்த நண்பரும் - தமது முயற்சிக ளில் பெரிதும் உடனிருந்து வேலை செய்பவருமான ஸ்ரீமான் ராய. சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்கள் ஆசிரியர் பொறுப்பை ஏற்று நடத்துவார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

தனவைசிய ஊழியனின் 14.7.1922 தேதியிட்ட இதழ் முறைப் படியாகத் திரு. ராய. சொக்கலிங்கம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவரத் தொடங்கியுள்ளது. அவருடைய 'எனது வருகை' என்னும் தலையங்கத்தில், இந்த இதழுக்கும் தமக்கும் ஏற்கெனவே நிலவி வருகின்ற தொடர்பு நிலைகளைச் சுட்டிக் காட்டுகின்றார். துன்மதி ஆண்டு ஐப்பசித் திங்கள் இருபத்தி ஏழாம் நாள் ஊழியர் சங்கத்தா ரால் ஊழியன் பத்திரிகைக்கு ஆசிரியனாக நியமிக்கப்பட்ட சூழல் களையும் குறிப்பிடுகின்றார். திரு. முருகப்பச் செட்டியார் ஆசிரியராகச் செயல்பட்ட காலங்களிலும், திரு. ராய. சொக்கலிங்கம் அவர்களின் பங்களிப்பு முழுமையாக இருந்து வந்ததாகத் தெரிகிறது. இரண்டா வது ஆண்டில் 2.12.1921 நாளிட்ட 13ஆவது இதழ் முதல் 39ஆவது இதழ் வரையிலும் திரு. ராய. சொ. அவர்களே ஆசிரியப்பொறுப் பேற்றுச் செயலாற்றியிருக்கிறார். ஏதோ சில அரசு விதிமுறைக் கார ணங்களுக்காக வேண்டி இடையில் சில வாரங்கள் திரு. முருகப்பச் செட்டியார் இதழ் பொறுப்பைக் கவனித்து வந்திருக்கிறார். இரண் டாம் ஆண்டின் 45ஆவது வார இதழ் தொடங்கி மீண்டும் முறைப்படி யாக ராய. சொ. அவர்கள் இதழாசிரியர் பொறுப்பை முழுமையாக மேற்கொள்ளத் தொடங்கியுள்ளார்.

திரு. ராய. சொ. ஆசிரியர் பொறுப்பேற்ற 14.7.1922 நாள் முதற்கொண்டு தனவைசிய ஊழியன் சிற்சில மாற்றங்களை மேற் கொள்ளத் தொடங்குகிறான். தலையங்கப் பகுதியில் வழக்கமான கந்தரலங்காரப் பாடலுடன் முருகர் மயிலுடன் விளங்கும் படம் இடம் பெறுகின்றது. அரசியல் தொடங்கி எல்லா நடைமுறைச் செய்திகளும் இடம் பெறுகிற இடமாக 'இடிமுழக்கம்' என்ற பகுதியைப் புதிதாக அறி முகப்படுத்துகின்றார். இந்த இடிமுழக்கம், 'தனவைசிய ஊழியன்' தொடங்கிப் பின்னர் 'ஊழியனாக'த் தொடர்கின்ற காலம் முழுவதும் அவர்தம் தனி முத்திரையாக விளங்குகிறது.

## தனவைசிய ஊழியன் 'ஊழியன்' என மாற்றம் பெறுதல்

திரு. ராய. சொக்கலிங்கம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு நடைபெற்று வந்த தனவைசிய ஊழியன், தனது ஐந்தாவது ஆண்டில் 'ஊழியன்' எனப் பெயர் மாற்றம் பெற்றது; தமது நோக்கத்தையும் விசாலப்படுத்திக் கொண்டு இந்திய மக்களுக்காக - அரசியல் சமூக விடுதலைக்காகக் குரல் கொடுக்கின்ற இதழாகத் தன்னை உரு வாக்கிக் கொண்டது. 1925ஆம் ஆண்டு சூலை முதல் வாரம் முதற் கொண்டு 'ஊழியன்' என்ற பெயருடன் இந்த வார இதழ் வெளிவரத் தொடங்கியது.

'ஊழியன்' என்னும் பெயருடன் வந்த ஊழியனில் தலையங்கப் பகுதியின் இலச்சினை - இந்திய வரைபடத்துடன் கூடிய பாரத மாதா இடம் பெற்றுள்ளது. ஒவ்வொரு இதழிலும்,

**மன்னர் தமக்கும் அஞ்சேன்**<br>
**மாண்பெரும் நாட்டிற் காக**<br>
**என்னுயிர் தனையும் ஈவேன்**<br>
**எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்**

**பன்னரும் பார தத்தாய்**<br>
**பண்டைவாழ் வெய்தப் பாரில்**<br>
**ஒன்னலர்க் கஞ்சா தல்ல**<br>
**ஊழியம் தலைமேற் கொண்டேன்**

என்னும் பாடல் தொடர்ந்து இடம்பெறுகிறது.

## முகப்புப் பகுதி

ஊழியனின் முகப்புப் பகுதியில் இடது பக்கத்தில் 'சென்னைப் பதிவு எண். '1509' என்றும் வலது பக்கத்தில் தந்தி விலாசம் 'Oolian' என்றும், குறிப்பிடப்பட்டுள்ளது. மையத்தில் செவ்வாய்தோறும் திகழ்வது என்றும், ஆசிரியன் - ராய. சொக்கலிங்கன் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. 'குடிதழீஇக் கோலோச்சும்' என்னும் திருக்குறளும், 'நல்லாண்மை யென்ப தொருவற்கு' என்னும் திருக்குறளும் பக்கத்திற்கு ஒன்றாக இடம் பெற்றுள்ளன. காரைக்குடியிலிருந்தே வெளிவருகின்றது. முதலில், 20 x 33 செ.மீ அளவில் சிறிய வடிவில் பன்னிரெண்டு பக்கங்களைக் கொண்டிருந்த ஊழியன், ஐந்தாவது ஆண்டு நிறைவிலிருந்து 27 x 43 செ.மீ அளவில் பெரிய வடிவில் பதினாறு பக்கங்களைக் கொண்டு வெளிவரத் தொடங்குகிறது.

ஊழியனின் ஆறாவது ஆண்டின் தொடக்க இதழ் 8.9.1925 இல் வெளிவந்துள்ளது. அதில் ஆசிரியர் ராய. சொக்கலிங்கம் அவர்களின் 'ஆறாவதாண்டு' என்னும் தலையங்கம் அணி செய்கின்றது. அந்தத் தலையங்கம் ஊழியன் இதழின் தோற்றம் - வளர்ச்சி - நோக்கம் ஆகிய அனைத்தையும் உள்ளடக்கி, தமிழ் இதழ்களுக்கான வழி காட்டுதலாக அமைந்துள்ளது எனலாம். ஊழியன் இதழின் நிலையை அப்படியே படம் பிடித்துக் காட்டும் அந்தத் தலையங்கத்தை அப்படியே அறிவதன் சிறப்புக் கருதி அது இங்கு இடம் பெறுகின்றது:

> 'நமதருமை 'ஊழியன்' ரெளத்ரி ஆண்டு ஆவணித் திங்கள் இருபத்தி நான்காம் நாள் தோன்றினான். நேற்றோடு ஐந்து ஆண்டுகள் நிரம்பப் பெற்றான். குரோதன ஆண்டு ஆவணி இருபத்தி நான்காம் நாளாகிய இன்று ஊழியனுக்கு ஆறாவதாண்டு பிறந்திருக்கிறது.
>
> கடந்த ஐந்து ஆண்டுகளாக 'ஊழிய'னைத் தொடர்ந்து படித்த அன்பர்கள் 'ஊழிய'னின் நீர்மையையும் வளர்ச்சியையும் அறிந்தேயிருப்பர். 'ஊழியன்' பிறந்த நாட்டொட்டு ஆண்டு தோறும் வளர்ச்சியுற்றே வந்திருக்கின்றான். முந்திய ஆண்டுகளைக் காட்டிலும் சென்ற ஐந்தாவதாண்டில் 'ஊழியன்' உடல் வளர்ச்சியும் பொருள் வளர்ச்சியும் மிகுதியும் பெற்றிருக்கிறான். சென்ற ஐந்தாவதாண்டில் 'ஊழியன்' பல மாற்றங்களை அடைந்திருக்கிறான். முன்னர் தனவைசிய ஊழியர் சங்கத்திற்குச் சொந்தமாக

விருந்த 'தனவைசிய ஊழியன்' ராய. சொக்கலிங்கனுக்குச் சொந்தமானதும், பின்னர் ஒரு அளவுடைய கூட்டத்தாருக்குச் (ஊழியன் கம்பெனி லிமிடெட்) சொந்தமானதும் ஐந்தாவ தாண்டிற்றான். 'தனவைசிய ஊழியன்' 'ஊழிய'னாக மாறியதும் அவ் ஐந்தாவதாண்டிலேயே'. நாற்பதாயிரம் மக்கள் எண் கொண்ட ஒரு வகுப்பிற்கு மட்டும் ஊழியன் என்ற பெயரோடு வெளி வந்த 'ஊழியன்' பலகோடி மக்களின் ஊழியன் எனக் குறிக்கும் விரிந்த பெயர் தாங்கி வெளிவருவதற்குக் காரணமாகவிருந்த ஐந்தாவதாண்டு மற்ற ஆண்டுகளைக் காட்டிலும் ஊழியனுக் குக் குறிப்பிடத்தக்க ஓர் நல்லாண்டாகும்.

'ஊழியன்' என்ற பெயர் தாங்கிய பின்னர் ஐந்தாவதாண்டில் எட்டு இதழ்கள் வெளிப்போந்திருக்கின்றன. ஆண்டின் இறுதி நாளிலேயே அப்பெயர் காணப்பெற்றதால் அவ்வெட்டாவது இதழோடு அம்மலர் முடிவுறுகிறது. இன்றைய ஊழியன் ஆறாவது மலரின் முதல் இதழ் ஆகும்.

'ஊழியன்' முன்னர் சிறிய அளவில் பன்னிரெண்டு பக்கங்களோடு வெளிவந்து கொண்டிருந்தான். இப்பொழுது பெரிய அளவில் பதினாறு பக்கங்களோடு வெளிவருகின்றான். முந்திய அளவின் இரண்டு பக்கங்களில் போதரும் பொருள்கள் இப்பொழுதைய அளவில் ஒரு பக்கத்தோடு அமைகின்றது. எனவே பழைய அளவுக் கணக்குப்படி முப்பத்திரண்டு பக்கப் பொருள்களை ஊழியன் ஈண்டுக் கொணர்ந்தளிக்கிறான். எனினும் சந்தாச் சிறிதும் உயர்த்தப்படவில்லை. இன்னும் சின்னாளில் இருபது பக்கங்கட்குக் குறையாமல் வெளியிட எண்ணம். அப்பொழுதும் சந்தா உயர்த்தப் பெறமாட்டாது.

இவ்வாண்டின் 'ஊழியன்' சிறந்த கருத்துக்களடங்கிய பற்பல அரிய பொருள்களைத் தாங்கி வருவதோடு மக்கட்கு மகிழ் வூட்டக் கூடிய உயர்ந்த பல சித்திரங்களை வாரந்தவறாது காட்டி உவகையூட்டுவான். 'ஊழியன்' என்றும்போல் தனது நேர்மை யையும், அஞ்சாமையையும் விடாதொழுகுவான்; தன் பெருங் கடமையைத் தடுப்பது எதுவாயினும் கடமையிற் சிறிதும் வழுவ மாட்டான்.

ஊழியனின் ஊழியத்தை ஒல்லுமாறு பயன்படுத்திக் கொள்ளு தல் தமிழ் நாட்டான் தனிப்பெருங்கடன்.

ஊழியன் அறத்தாற்றில் தனது ஊழியமாகிய உயர்கடனை விடாதாற்றி ஊழி வாழ்வேற்று உலகை உய்விக்க ஒப்பாரும் மிக்காரும் இல்லா ஒரு தனிமுதல்வன் அருள்வானாக!'

மேற்குறித்த ஆறாவது ஆண்டுத் தலையங்கத்தின் வாயிலாக ஊழியன் இதழின் வரலாற்றையும், இதழியல் வரலாற்றில் ஊழிய னின் நிலையினையும் நன்கு கணித்தறிய முடிகிறது.

## ஊழியன் – உள்ளடக்கம்

நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தவர் வாழும் காரைக்குடி யிலிருந்து வெளிவந்த ஊழியன் தனது எல்லையை விசாலப்படுத்திக் கொண்டு, பலதுறைத் தகவல்களையும் தாங்கி, இந்திய விடுதலை யையும், சீர்திருத்தத்தையும் முன்வைத்து முழுவீச்சுடன் தொண்டாற் றத் தொடங்கியதை அறிய முடிகிறது. அதன் ஆறாவது ஆண்டின் தொடக்க இதழ் அதற்குச் சான்றாகத் திகழ்கிறது.

காந்தியத்தில் ஈடுபாடும் விடுதலைப் போரில் நேரடிப் பங்கேற் பும் கொண்டிருந்த திரு. ராய. சொக்கலிங்கம் அவர்களின் உணர்வின் பிரதிபலிப்பாகவே ஊழியன் விளங்கினான். ஒவ்வொரு இதழிலும் காந்தியடிகள் குறித்த பகுதி உறுதியாக இடம் பெற்றிடும். 'ஹரிசன்' இதழ் வாயிலாகக் காந்தி விடுக்கும் கட்டுரைகளையும் செய்திகளை யும் மொழியாக்கம் செய்து, ஊழியன் வெளியிட்டுக் காந்திய மணம் பரப்பிடும். காங்கிரஸ் பேரியக்கத்தின் மாநாடுகள் குறித்த செய்தி களும், காங்கிரஸ் இயக்கத்தின் திட்டங்கள், தலைவர்களின் வேண்டு கோள்கள், கருத்து வெளிப்பாடுகள் ஆகியவற்றிற்குக் களம் அமைத்து, அவற்றை மக்களிடம் முன்நிறுத்தித் தொண்டாற்றிய இதழ்களில் ஊழியன் ஒரு குறிப்பிட்ட இடத்தைப் பெற்றுள்ளது. காந்தியடிகள், பாபு இராஜேந்திர பிரசாத், பண்டித நேரு ஆகியோருடைய திருஉருவப் படங்களையும், அவர்கள் கலந்து கொண்ட நிகழ்ச்சிப் படங்களையும் இடம் பெறச் செய்து, இவற்றின் செல்வாக்கை மக்களிடம் உருவாக்கி யுள்ளது.

காங்கிரஸ் இயக்கத்துக்கு உள்ளேயே நிலவிய முழு அரசிய லில் சுயராஜ்யக் கட்சி குறித்த, காந்தியச் சார்புத் தலைவர்களின் கருத்துக்களைக் கட்டுரைகளாக ஊழியன் வெளியிட்டுள்ளது. அவ் வகையில் 22.9.25 நாளிட்ட இதழில், சுயராஜ்ய கட்சிக்கு மாறு பட்ட கண்ணோட்டத்தில், திரு.வி.க. அவர்கள் ஸ்ரீனிவாச ஐயங்கா ருக்கு மறுப்புரையாக வழங்கியுள்ள கருத்துகள், 'ஸ்ரீமான் ஸ்ரீனிவாச

ஐயங்கார் கனவு' என்னும் கட்டுரையாக வெளிவந்துள்ளது. இதன் வாயி லாக விடுதலை இயக்கக் காலத்தில் நிலவிவந்த தலைவர்களுக்கிடை யிலான பண்பார்ந்த கருத்து மோதல்களை அறிந்து கொள்ள முடிகிறது.

ஒவ்வொரு இதழிலும் 'மலர் மணம்' என்னும் பகுதி ஏதேனும் ஒரு கருத்தை முன்வைத்து மணம் பரப்பிடும். வைத்தியப் பகுதி, கோணல் உலகம், விவசாயப் பகுதி, காதற் கடிதங்கள், தனவணிகர் உலகம், வெளிநாடு, தாய்நாடு, தமிழ்நாடு, தனவணிகர் நாடு, தலையங்கம், இடிமுழக்கம், உள்ளூர், தந்தி, கடிதங்கள், கப்பல், சிறுவர் பக்கம், மகளிர் கோட்டம் ஆகிய பகுதிகளைக் கொண்டதாக விளங்கியது.

கதைப் பகுதியில் 'இரண்டு பிரயாணிகள்', கட்டுரைப் பகுதி யில் கைத்தொழில், பண்டை வேந்தர், பாடல் பகுதியில் தீண்டாமை, ஆன்மிகப் பகுதியில் கீதா ரகசியம் ஆகியனவும் கருத்துப்படம் பகுதி யில் தனவணிகர் சமூகத்தை ஒரு பயன்தரு மரமாகக் குறிக்கப்படுத லும் என்ற 8.9.25 அன்றைய இதழின் வெளிப்பாடுகள், அவ்வித ழின் பொழுது போக்குகளை அறிவித்து நிற்கின்றன.

## புதிய பகுதி அறிமுகம்

'கோணல் உலகம்' என்னும் தலைப்பில் குறும்பன் கூறுவதாக அமைக்கப்பட்டுள்ள புதிய பகுதியைப் பற்றி இதழாசிரியர் குறிப்பி டும் போது, ஊழியனில் எல்லா உலகமும் வருகின்றது. இந்தக் கோணல் உலகம் மட்டும் இதுவரை வெளிவந்ததில்லை என்பதோடு குறைகளைச் சுட்டிக்காட்டித் திருத்துவது நோக்கம் என்பதையும் சொல்லி, புதுப்பகுதியைப் பற்றி அறிமுகம் செய்கின்றார்.

## காதற் கடிதங்கள்

காதலன் காதலிக்கு எழுதுகின்ற காதற் கடிதங்களாக இப் பகுதி வடிவம் கொண்டுள்ளது. காதல் உணர்வின் இழையோட்டத் திற்கிடையே பெண்கள் நகைப்பித்தினைக் குறிப்பாக, வைர நகை கள் மீது கொண்டுள்ள வேட்கையினை விட்டொழிக்க வேண்டும் என்பது தொடங்கி, ஒவ்வொரு இதழிலும் சீர்திருத்தக் கருத்துகள் பலவற் றையும் வெளிப்படுத்துவதற்குரிய இடமாக இதழாசிரியர் இப்பகுதி யைப் பயன்படுத்திக் கொண்டுள்ளார்.

தொடக்க காலங்களில் ஊழியன் இதழின் முதல் பக்கத்தில் 'மலர் மணம்' என்னும் பகுதி இடம் பெறுவது வழக்கம். அதில் ஆறாவ தாண்டு முதல் இதழில் இடம் பெற்றுள்ள 'மலர் மணம்' என்னும் பகுதியில் 'பத்திரிகைகள்' என்னும் தலைப்பில் அமைந்த கட்டுரை, உலகில் இன்றைய பத்திரிகைகள் இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ள நிலையைப் பாராட்டுகிறது. அக்காலத்தில் தொடக்க நிலையிலி ருந்த தமிழ்ப்பத்திரிகை உலகின் ஒட்டு மொத்தத் திறனாய்வாக அது விளங்குகிறது. தமிழ்ப் பத்திரிகை உலகின் நோக்கும் போக்கும் வளர்ச்சியும் வாழ்வும் வரலாற்று அடிப்படையில் அணுகப்பட்டுள்ளன. அன்றைய பத்திரிகை களுக்குள் கருத்து வேறுபாடுகளும் தொழில் முறையிலான போட்டி களும் நிலவியதையும் இக்கட்டுரைவழி அறிய முடிகிறது. மேலை நாட்டவர் பத்திரிகை படித்தலிலும், பத்திரிகை நடத்துதலிலும் காணப்படுகின்ற சீர்மை சிறப்பாகக் குறிக்கப்படுகிறது. உபயோகமற்ற பத்திரிகைகள் பல தமிழ்நாட்டில் வெளிவரத் தொடங்கி விட்ட நிலையை வருத்தத்துடன் சுட்டுகிறது. நல்ல வாரப் பத்திரிகை சிலவே இருக்கின்றன என்ற நிலையையும் அது உணர்த்துகின்றது. எனவே ஒழுங்கிலாப் பத்திரிகைகளை ஒழித்தலும், ஒழுங்குநெறிப் பத்திரிகைகளை ஓம்பலும் உயர்மக்கள் கடமை என்பதைக் கட்டுரை வலியுறுத்துகிறது.

## ஊழியன் – இடமாற்றமும் வடிவ மாற்றமும்

தொடக்கம் முதல் காரைக்குடியிலிருந்து வெளிவந்து கொண்டி ருந்த ஊழியன் இதழ் 1934ஆம் ஆண்டு சூலை முதல் வாரம் முதற் கொண்டு சென்னையிலிருந்து வெளிவரத் தொடங்கியது. வடிவமும் மாற்றம் கொண்டது. கால் டிம்மி என்னும் 22 X 25 செ.மீ. அளவில் 46 பக்கங்களை உடையதாகத் தேசீய சித்திர வாரப் பத்திரிகை என்ற குறிப்பை முகப்பில் தாங்கி வெளிவரத் தொடங்கியது. அதற்கேற்ப ஆப்டோன் வண்ணப் படங்களும், கீற்று வரைபடங்களும் இதழில் அணிசெய்து நின்றன.

தலையங்கப் பகுதியின் இலச்சினையான பாரத அன்னையின் திரு உருவத்திற்குக் கீழ் முன்னர் இடம் பெற்றிருந்த ஊழியனைத் தழு வியதாகக் குறிக்கோளை வெளிப்படுத்துவதாக அமைந்த பாடல் மாற்றமும் செழுமையும் பெற்றுத் திகழ்வதாகியது. அப்பாடல் இவண் குறிக்கப்படுகிறது:

இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
தனமேறி ஈடி லாது
சொந்தவர சேபுரியத் துயர்போக்கி
யாவருமே சுகவாழ் வெய்த

இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்
இழிவுயர்வென் இயற்கை ஒங்க
நந்தலிலா ஊழியமே நான்கொண்டேன்
நல்லனவெந் நாளும் வாழ்க!

ஒவ்வொரு இதழிலும் அமைந்த இந்தத் தலையங்கப் பகுதிப் பாடல் இந்திய விடுதலை உணர்வை எழுச்சியோடு ஊட்டுவதாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

## காந்தியடிகளை முன்னிலைப்படுத்துவதில் ஊழியன்

ஊழியன் இதழ் தொடக்கம் முதலே காந்தியடிகளை முன்னிலைப் படுத்துவதையும், காந்தியத்தைப் போற்றிப் பரப்புவதையுமே ஒரு பெருங்கடமை எனக் கொண்டிருந்தது. காந்தியடிகளைப் பற்றிய செய்தியோ, அவர்தம் கட்டுரையோ இடம்பெறுதல் ஊழியனின் மரபு என்றே கொள்ளலாம்.

'மகாத்மா அரசியல்வாதியல்ல' என்னும் தலைப்பில் சாதுவாஸ் வானியின் பேச்சு, 3.8.1934ஆம் நாளிட்ட ஊழியனில் பதிவாகியுள் ளது. 'நிஷ்களங்கமானவர் காந்தி' என்னும் சார்லஸ் லாண்டுபோர்டு வின் கருத்தும் அதே இதழில் இடம் பெற்றுள்ளது.

ஊழியன் இதழ் ஒன்றில் (10.8.1934) 'அடிகள் தவம்' என்னும் தலைப்பிட்டு, இதழின் முதல்பக்கத்தில் காந்தியடிகளின் படம் வெளியிடப்பட்டுள்ளது. தீண்டாமைக்கு எதிராகக் காந்தியடிகள் உண்ணாமை மேற்கொண்டுள்ளமை உணர்வுப்பூர்வமாக வெளியிடப் பட்டுள்ளது. தன்னைப் பார்த்து அனைவரும் உபவாசம் நடத்தக்கூடாது எனக் காங்கிரஸ் ஊழியர்களுக்கு உபவாசத்திற்குமுன் மகாத்மா அறிக்கை விடுத்துள்ளார். இது அதே இதழின் 5ஆம் பக்கத்தில் இடம் பெற்றுள்ளது. 'காந்திஜி சுற்றுப்பிரயாணம்' என்னும் தலைப் பில் 'ஹரிஜன்' பத்திரிகையின் தலையங்கம் எட்டாம் பக்கத்தில் ஒரு பக்கக் கட்டுரையாக வெளிவந்துள்ளது.

'காந்திஜியைக் கொல்ல சதி' என்னும் இலண்டன் 'டெய்லி எக்ஸ்பிரஸ்' செய்தியை ஊழியனின் இடிமுழக்கம் பகுதியில் (10.8.1934) இதழாசிரியர் திரு ராய. சொக்கலிங்கம் அவர்கள் மறுத்துள்ளதோடு, இத்தகைய, மக்களின் உணர்வைத் தட்டி எழுப்பி, உண்மைக்கு மாறாகத் திசை திருப்புகின்ற செய்திகளை வதந்தியாகப் பரப்புகின்ற அயல்நாட்டுப் பத்திரிகைகளின் போக்கை வன்மையாகக் கண்டிக்கின்றார்.

காந்தியடிகள் 1934இல் காரைக்குடிக்கு வந்தபோது திரு. ராய. சொக்கலிங்கம் அவர்களின் அன்பு அழைப்பினை ஏற்றுக் கொண்டு அவருடைய இல்லத்தில் விருந்து உண்டார். இந்நிகழ்வில் உள்ளம் மகிழ்ந்து நெகிழ்ந்த திரு ராய. சொ. அவர்கள் காந்தியடிகள் தம் வீட்டில் விருந்து உண்டதைக் கண்ணபிரான் விதுரன் வீட்டில் உணவு உண்டதற்கு ஒப்பாக்கிக் கவிதை புனைந்து அதனை ஊழியன் இதழிலும் வெளியிட்டுப் பதிவுசெய்து தாம் பெற்ற இன்பத்தைப் பொதுமையாக்கியுள்ளார்.

'மகாத்மாவின் புதிய வாழ்க்கை' என்னும் தலைப்பின் கீழ் காந்தியடிகள் எளிய இயற்கை வாழ்வை மேற்கொண்டு, மாதிரி கிராம வாசியாக இருக்கப் போகிறாராம் என்னும் ஸ்ரீதேசாயின் 'ஹரிஜன்' பத்திரிகைக் கட்டுரையின் மொழியாக்கச் சுருக்கத்தை ஊழியன் (8.3.1935) வெளியிட்டுக் காந்தியத்தைப் போற்றியுள்ளது.

காந்தியடிகளின் தனித்தொகுதி காரணமான உண்ணாவிரத முடிவை முன்னிட்டு ஊழியன் ஆசிரியர் திரு. ராய. சொ. அவர்கள் பாடிய பாடலை 17.8.34 அன்றைய ஊழியன் உண்ணாவிரத முடிவு என்னும் தலைப்பின் கீழ் வெளியிட்டுள்ளது. இக்கவிதை அதற்குச் சில திங்களுக்கு முன்பு விடுதலையை முன்வைத்த போராட்டத்தின் காரணமாக திரு ராய. சொ. அவர்கள் வேலூர் சிறையில் இருந்த காலத்தில் ஆங்கிரச புரட்டாசி 15-ஆம் நாளில் எழுதப்பட்டது என்ற வரலாறும் இதன்வழி வெளிப்படுகிறது.

## நேரு குடும்பம் பற்றி ஊழியனின் மதிப்பு

நேருவின் தியாகத்தையும் தேசபக்தியையும் ஊழியன் வெகுவாக மதித்துப் போற்றுகிறது. காந்தியடிகளுக்கு அடுத்த நிலையில் பண்டித நேருவையும், நேரு குடும்பத்தாரின் அரசியல் தொடர்பு

களையும் - வரவுகளையும் ஊழியன் காலந்தோறும் வரவேற்றுப் பாராட்டியுள்ளது. 'நம் நேருவின் தேசபக்தி' எனத் தலைப்பிட்டு அதில் நேரு தம் தந்தையார் மோதிலால் நினைவாகத் தமது ஆனந்தபவனம் என்னும் சுயராஜ்ய பவனத்தில் வைத்திய சாலையை அமைத்து அதற்காக ரூபாய் நாற்பதினாயிரத்தை அறக்கொடையாக அளித்துள்ளதை ஊழியன் (12.4.1935) மனநிறைவோடு குறிப்பிடுகின்றது.

இந்திய விடுதலைப் போராட்டத்தின் இறுதிக் கட்டத்தில் காங்கிரஸ் பேரியக்கத்தின் தலைமைக்கு உரியவராகக் காந்தியடிகளின் அடிச்சுவட்டில் மக்களை வழிநடத்திச் செல்பவராக விளங்கிய பண்டித நேருவை, காங்கிரஸ் இயக்கத்தின் தலைவர் என்ற முறையில் நம் ராஷ்ட்ரபதி எனக் குறிப்பிட்டு நேருவின் முழு உருவப்படத்தினை முழுப்பக்க அளவில் இதழின் முகப்பாக வெளியிட்டு ஊழியன் (1.1.1937) தன்னை அணிசெய்து கொண்டுள்ளது.

நேருவின் அருமை மகள் இளநங்கையான செல்வி இந்திரா நேருவின் முழு உருவப் படத்தையும் காந்தியடிகளின் திரு உருவப் படத்தையும் ஒரே பக்கத்தில் அடுத்தடுத்து இடம்பெறச் செய்துள்ள ஊழியன் (9.7.1937), செல்வி இந்திராவை ராஷ்ட்ரபதி புதல்வி எனத் தலைப்பிட்டு அறிமுகம் செய்துள்ளது; அத்தோடு 'நம் அருமைச் சகோதரி இந்திரா நேரு' இவரது தியாகத்தைப் பார்க்கத் தேசம் காத்திருக்கிறது' எனக் குறிப்பையும் வெளியிட்டுள்ளது. திருமதி இந்திரா காந்தி அவர்களின் எதிர்காலம் குறித்த இந்தியாவின் எதிர்பார்ப்பினை, அவருடைய இளமைக் காலத்தில் மிகவும் தொடக்க நிலையிலேயே தக்கவகையில் உணர்ந்துள்ள ஊழியனின் தொலை நோக்குத் திறம் ஆழ்ந்து எண்ணத்தக்கது.

## பெண்நலன் பற்றிய சிந்தனைகள்

சமூகத்தில் பெண்கள் நிலை பற்றிச் சுட்டிக்காட்டி, முன்னடையச் செய்யும் போக்கில் பெண் கல்வித் திட்டம் குறித்த ஆராய்ச்சி ஒரு கட்டுரையாக மலர்ந்துள்ளது. பெண் நலன் குறித்த சிந்தனைகளைத் தழுவியே ஊழியன் எப்போதும் நடைபோட்டுள்ளான்.

## இளம்பெண் மறுமணம் வேண்டல்

கணவனை இழந்த நிலையில் வாடும் இளம்பெண்களின் அவல நிலைக்காக வாடுகின்ற ஆசிரியர் திரு. ராய. சொ. அவர்கள், 'ஆனை அருந்தவக் காந்தியின் மீதே!' எனத் தொடங்கும் காந்தி கலித்துறை யந்தாதிக் கவிதையுடன் ஒருபக்கக் கருத்துப்படமாக வெளியிட்டுள் ளார். இல்லத்தில் பெற்றோரின் காதல் வாழ்க்கை ஒருபுறம், விதவை யாகிய இளம் கைம்பெண்ணின் ஆறாத்துயரம் மறுபுறம் என்னும் இந்தச் சமூக முரணை வெளிப்படுத்தி விதவை மறுமணத்திற்குக் குரல் கொடுக்கும் ஊழியனாக மலர்ந்துள்ளது.

## கேலிச் சித்திரத்தில் வேலையில்லாத் திண்டாட்டம்

அன்னியராட்சியில் வேலை வாய்ப்பு நோக்கிப் படித்து விட்டு வேலை கிடைக்காமல் திண்டாடுகின்ற பட்டதாரி இளைஞர்கள் படும் துயரத்தைக் கருத்து விளக்கக் கேலிச் சித்திரமாக அந்நாளி லேயே ஊழியன் வெளியிட்டு இத்துறையில் தொண்டாற்றி இருப் பது குறிப்பிடத்தக்கது.

## பொருளாதார உலகம்

பொருளாதாரத்தில் இன்றியமையாமை, அந்நாளை இந்திய உலகப் பொருளாதாரம் குறித்த திரு. பி.என். ராஜன் அவர்களின் கட்டுரை இடம் பெற்றுள்ளது.

## சுயமரியாதை இயக்கச் செய்திகள்

காங்கிரஸ் இயக்கச் சார்புப் பத்திரிகை என்ற நிலை ஊழிய னுக்கு இருப்பினும், சுயமரியாதை இயக்கச் செய்திகளை வேண் டும் போதெல்லாம் வெளியிட்டு வந்துள்ள போக்கை அறியமுடிகிறது. செட்டிநாட்டில் 'தோழர் ஈ.வெ. ராமசாமி' எனத் தலைப்பிட்டு அதன் கீழ் சுயமரியாதை - சமர்தர்ம இயக்கத் தலைவரான தோழர் ஈ.வெ. ராம சாமி, தோழர்கள் ராம. அழ. சிதம்பரம், ரெங்கம்மாள் போன்றோரின் சமூக முன்னேற்றப் பிரச்சாரம் செய்ய மேற்கொண்டுள்ள சுற்றுப் பிரயாணம் குறித்த நிகழ்ச்சி விவரங்கள் நாள் - நேரத்துடன் வெளியிடப்பட்டுள் ளன. இந்த இயக்கம் தொடர்புடையவர்களுக்கு உதவும் வகையில் இந்த வெளியீடு அமைந்துள்ளமை வரவேற்கத்தக்கது.

திருச்சியில் பெரியார் தலைமையில் நடந்த சிதம்பரம் - ரங்கம்மா ஆகியோர் செய்து கொண்ட சீர்திருத்தக் கண்ணோட்டத்திலான மறுமணம் குறித்த காட்சிப் படங்களும் செய்திகளும் வெளியிடப்பட்டுள்ளன.

## உலக அரங்கம்

தமிழ் நாட்டளவில் அல்லது இந்திய அளவிலான செய்திகளைக் கடந்து, சோவியத் சர்க்கார் ஆட்சிமுறை என்னும் தலைப்பில் இடம்பெற்றுள்ள கட்டுரையில் ஸ்டாலின், ஜினொலில், காமனெவ் காலத்து நிலைமைகள் ஆராயப்படுகின்றன.

மேனாட்டு அரசியல் சக்கரம் என்ற தலைப்பிட்டுத் தொடர்ந்து அதனைச் சுழலும் மாதிரி செய்யும் முஸ்தீப்புகள் எல்லாம் யுத்தத்திற்கே வழி வகுக்கின்ற நிலை சுட்டிக் காட்டப்படுகின்றது.

முசோலினி, கமால்பாட்சா ஆகியோருடைய அரசியல் செயல்பாடுகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

ஜப்பான், ருஷ்ய நாட்டுச் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

சுவிட்ஜர்லாந்து விடுதலை வீரர் - அதன் சுதந்திர வெற்றிக்குக் காரணகர்த்தராய் விளங்கிய வில்லியம் டெல் குறித்த 14-ஆம் நூற்றாண்டின் வரலாற்றுச் செய்தி திரு. எஸ். ஸுந்தா எழுதிய கட்டுரையாக மலர்ந்துள்ளது. பிறநாட்டுச் செய்தியாக இருந்தாலும் கட்டுரையின் தொடக்கமே எழில் கொஞ்சும் மிடுக்கு நடையில் இயற்கையின் அணிவகுப்பாக - படப்பிடிப்பாகத் திகழ்வதை, தொடர்ந்துவரும் பகுதி உணர்த்துகிறது:

'சுவிட்ஜர்லாந்து ஐரோப்பாக் கண்டத்திலுள்ளதோர் தேசமாகும். பச்சைப் பசேலெனப் பசுந்தாளாடை கட்டிய பல குன்றுகளும் வானுறவோங்கி வளர்ந்து நிற்கும் மரங்களின் வரிசைகளும் கானாறுகளின் நீர்ப்பெருக்கும் மலையருவிகளின் நீர் ஓட்டமும் அந்நாட்டை அலங்கரிக்கின்றன. வாவிகளும், தடாகங்களும் அந்நாட்டில் ஏராளம். வனப்புமிக்க அவ்வாவிக் கரையில் மழலை பழகும் கிளியினம் ஒருபுறம், நடைபயிலும் மயிலினங்கள் ஓர் வரிசை, இனிய ஓசையால் இசைத்துப் பாடும் குயிற்கூட்டங்கள் ஒருபுறம், மலர்களிலுள்ள செந்தேனைக் குடித்து மதி மயங்கி ரீங்காரமிட்டுக் கொண்டுலவும் வண்டினங்கள்

மற்றொரு புறம் - இவைகள் யாவும் அதி அற்புதமான காட்சிகளா யிருக்கும்.'

## சினிமா நடிகை

நியூயார்க் சினிமா உலகில் பெரும் பரபரப்புடன் பேசப்பட்ட கரோட்டா கார்போ என்னும் நடிகையைக் குறித்து 'போட்டியில்லா பெறற்பினாள்' என்ற தலைப்பிட்ட சுதன்ஸ் ராய் என்பவர் எழுதிய கட்டு ரையை நடிகையின் படத்துடன் ஊழியன் வெளியிட்டு, திரை உலக இரசிகர்களின் இதயத்தில் இடம் பிடித்துள்ளது. 2½ பக்க அளவிற் கான இந்த விறுவிறுப்பான கட்டுரை வழி நியூயார்க் பத்திரிகை, அந்த நடிகையை ஸ்வீடிஷ் அழகி எனக் குறிப்பிட்டு அந்நடிகை கார் போவின் சரித்திரத்தை எழுதுவோர்க்கு 5000 பவுன் வெகுமதி என்று விளம்பரப்படுத்தியிருப்பது உள்ளிட்ட பல செய்திகளைத் துல்லிய மாக வெளியிட்டுள்ளது.

## கேலிச் சித்திரம்

கீற்று ஓவியங்கள் வழிக் கேலிச் சித்திரங்கள் ஒவ்வொரு இதழி லும் இடம் பெற்று, நையாண்டியான கருத்துக்களை இதன்வழி 'ஊழியன்' வெளிப்படுத்திடும்.

## விகடத்திரள்

நகைச்சுவை உணர்வுக்கு முக்கிய இடம் தந்திடும் 'ஊழியன்' இதழ்தோறும் விகடத்திரள் என்ற பகுதியைப் படங்களுடன் வெளி யிட்டு வந்தது. உச்சிக்குடுமித் தாத்தா விகடங்களைச் சொல்வது போன்றும் சிறுவர் முதல் முதியோர் வரை வயதுடைய மூவர் எதிரில் அமர்ந்து கேட்பது போன்றும் அமைந்த படத்துடன் விகடத்திரள் வெளிவந்தது. இந்தப்படம் ஆனந்தவிகடன் 'தாத்தா'வை நினை வூட்டுவதாக உள்ளது.

## தொடர் கதைகள்

இதழ்தோறும் தொடர் கதைகளும் ஊழியனில் இடம் பெற்று வந்தன. இ. சிவம் எழுதிய 'கார்த்திகை தீபம்' என்னும் தொடர்கதை சிலகாலம் இடம்பெற்று வந்துள்ளது.

## போட்டோப் படங்கள்

ஊழியனின் ஒவ்வொரு இதழிலும் நான்கு பக்கங்களில் போட்டோப் படங்களை வெளியிடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளது. இதழ்தோறும் 23ஆம் பக்கம் முதல் 26ஆம் பக்கம் வரை இப்படங்கள் இடம் பெற்றிடும். உலகச் செய்திகளைச் சித்திரிக்கும் படங்கள் - மகளிர் முன்னேற்றம், மாணவர் கல்வி குறித்தவை, அறிவியல் சாதனைகள், குறிப்பிடத்தக்க கப்பல், விமானம் போன்றவற்றின் படங்கள் அறிவியலின் புதிய கண்டுபிடிப்புகள், திரைப்பட உலகில் புது வரவாக உள்ள திரைப்படக் காட்சிகள் போன்றவை இதில் அடங்கும். ஊழியனின் ஓர் இதழில் (12.4.1935) இவ்வாறு வெளியாகிய ஏழு படங்கள் இங்கே சுட்டிக் காட்டப்படுகின்றன.

1. சர்வதேசப் பெண்கள் மாநாட்டில் கலந்து கொள்ளும் இரு பெண்களான சத்தாராவைச் சேர்ந்த ஸ்ரீமதி ஆமத் அலியும், லாகூர் ஸ்ரீமதி பீகம் கமலுதீனும் ஆகியோர் படங்கள்
2. இயற்கைச் சூழல் சிறக்க ஓடைக் காட்சியுடன் விளங்கும் கேம்பிரிட்ஜ் இளையர் கல்லூரியின் தோற்றம்
3. ஒரு பள்ளி விழாவில் சாரண மாணவர்களின் செயல்பாடு
4. திருச்சி விமானத்திடலில் விமானம் பறக்கும் காட்சி
5. லோட்டஸ் பிக்சர்ஸ் கம்பெனியாரால், பம்பாய் வாடியா மூவிடோன் ஸ்டுடியோவில் தயாரிக்கப்பட்ட படமான 'சாரங்கதாரா' சினிமாவில் ஒரு காட்சி
6. பிரெஞ்சு நிபுணர் கண்டுபிடிப்பான மூழ்கும் படகின் (நீர்மூழ்கி) படம்
7. அதே படகின் மூழ்கிய காட்சி

இத்தகு படங்களின் வழி ஊழியன், உலகப் புதுமைகளையும், அறிவியல் கலை வளர்ச்சியையும் உடனுக்குடன் தம் வாசகர்களுக்குத் திறம்படக் காட்டி, அறிவுறுத்த முனைந்திடும் இனிய முயற்சி வெளிப்படுகிறது. இந்தப் போட்டோப் படங்கள் அச்சிடப்பட்டிருக்கிற தன்மை வியப்பை அளிக்கிறது. சுமார் 60 அல்லது 70 ஆண்டுகளுக்கு முன்பே மிகத் துல்லியமான - உயிர்ப்பான படங்கள் வெளியிட்டுள்ளதன் வழி, போட்டோ மற்றும் அச்சுக் கலையை அரிதின்

முயன்று வாசகர்களிடம் கொண்டுவந்து சேர்த்துள்ள ஊழியனின் ஆற்றல் பாராட்டுதற்குரியது.

## விளம்பரங்கள்

சினிமா விளம்பரங்கள் - ஒரு பக்க விளம்பரமாக ஊழியனில் இடம் பெற்றுள்ளன. சினிமா குறித்த பல தகவல்களைத் தாங்கியதாக இவை அமைந்திடும். 'தூக்குத் தூக்கி' என்ற சினிமாவுக்கான விளம் பரம், 'டாக்கி நேயர்களுக்கு நல்ல விருந்து' என்ற தலைப்பிட்டு வாசகர் களைக் கவர்ந்திழுக்கும் வகையில் வெளியிடப்பட்டுள்ளது.

ஊழியன் இதழில் தொடக்கம் முதலே விளம்பரப் பகுதி ஒரு முக்கிய இடத்தைப் பெற்று வந்துள்ளது. பெரும் வணிக நிறுவனங் கள் தொடர்ந்து ஊழியனில் விளம்பரம் செய்து பலன் அடைந்து வந்திருக்கின்ற போக்கை அறிய முடிகிறது. ஊழியனின் முகப்புப் பகுதியிலேயே இடதுபுறத்தில் சந்தா விவரமும் வலது பக்கத்தில் விளம்பர விகிதமும் இடம் பெற்றிருப்பதிலிருந்து, ஊழியன் விளம் பரப் பகுதி மீது செலுத்தி வந்த நாட்டம் குறித்து அறியமுடிகிறது. பொது விளம்பரங்கள் - நீதிமன்ற விளம்பரங்கள் - ஒப்பந்த விளம்பர விகிதம் என வகை பிரித்து அங்குலத்திற்கு ஒரு வாரத்திற்கு இவ் வளவு என்ற அறிவிப்பை ஊழியன் கட்டம் கட்டி வெளியிட்டுள்ளது.

காரைக்குடியின் புதிய கார் கம்பெனியின் 1925ஆம் ஆண்டு வாக்கிலான விளம்பரம் ஒருபக்க அளவில் வெளிநாட்டுக் கார்களின் படங்களுடன் வெளியிடப்பட்டுள்ளது. சிரமத்துடன் பணச்செலவு செய்து கொண்டு மதராஸ் போய் கார் வாங்க வேண்டிய அவசிய மில்லை; காரைக்குடியிலேயே வாங்கிக் கொள்ளலாம் என்ற விளம் பரம் அது.

பொதுவாக, ஜோதிடம், மருத்துவம் பற்றிய விளம்பரங்கள், பல் பொருள் விற்பனை நிலையம் குறித்த விளம்பரங்கள், சகலவிதமான மோட்டார் ரிப்பேரிங் மற்றும் நூல் விற்பனை நிலையங்கள் குறித்த விளம்பரங்கள் போன்றவை ஊழியனில் இடம் பெற்றுள்ளன. 1934 ஆம் ஆண்டு வாக்கில் ஊழியன் இதழ் ஒன்றில் 'தமிழ் டைப்ரைட்டர்' குறித்து விளம்பரம் வெளியாகியுள்ளது. அவ்விளம்பரப் பகுதியில்

'ராஜா சர் அண்ணாமலை செட்டியார், ஸ்ரீமான் எம்.சி.டி. சிதம்பரம் செட்டியார் முதலிய கனவான்கள் மேற்படி தமிழ் டைப்ரைட்டரை எங்களிடம் வாங்கி 4, 5 வருஷங்களாய் உபயோகித்து வருகிறார்கள்' என்ற விளம்பரம் இடம் பெற்றுள்ளது. இதன் வாயிலாகத் தமிழ் தட்டச்சு குறித்த வரலாற்றுச் செய்தியையும் அறிய முடிகிறது.

## சிறப்பிதழ்களில் விளம்பரம்

அதிகப் பக்கங்களுடன் வெளிவரும் ஊழியனின் சிறப்பிதழ்களிலும் விளம்பரப் பகுதி ஓர் இன்றியமையாத இடத்தைப் பெற்று வந்துள்ளது. 1934இல் வெளிவந்துள்ள தைமாதச் சிறப்பிதழில் அறுபத்தியொரு வாணிக - தொழில் நிறுவனங்களின் விளம்பரங்கள் அழகிய படங்களுடன் வெளிவந்திருப்பது ஊழியன் இதழின் வணிகம் சார்ந்த துறையின் நாட்டத்தை வெளிப்படுத்துகிறது.

ஊழியன் இதழ், தொடக்க காலம் முதலே விளம்பரப் பகுதியின் மீது சிறப்புக் கவனம் செலுத்தி வந்திருப்பதற்கு 1.9.1925 அன்றைய இதழ் சான்று பகர்கிறது. ஏஜெண்டுகள் தேவை என்ற தலைப்பின் கீழ் ஊழியன் பத்திரிகை சார்பில் வெளியிடப்பட்டுள்ள விளம்பரத்தில் 'ஊழியனுக்கு சந்தாச் சேர்க்கவும், விளம்பரங்கள் சேர்க்கவும் ஏஜண்டுகள் ஆங்காங்கு தேவை. தக்க கமிஷன் கொடுக்கப்படும்' என்னும் குறிப்பு உள்ளது. இதழுக்கான சந்தா சேர்க்கும் முயற்சிக்கு இணையாக விளம்பரம் சேர்ப்பதற்கான முயற்சியும் ஊழியனிடத்தில் இருந்திருப்பது அதன் தனித் தன்மையாக வெளிப்படுகிறது.

## ஊழியன் சிறப்பிதழ்கள்

ஊழியன் தன்னுடைய வழக்கமான வார இதழையே ஆண்டுக்கு ஒருமுறை தை இதழை - தமிழர் திருநாள் சிறப்பு இதழாக வெளியிட்டு வந்துள்ளது. நூற்று இருபது பக்கங்களில் அமைந்து தேச விடுதலை, இலக்கியம் மற்றும் வாழ்வியல் நோக்கிய மலராக மலர்ந்து மணம் வீசியுள்ளது. ஊழியன் சென்னையிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த 1934ஆம் ஆண்டு தொடங்கி 1938ஆம் ஆண்டு வரையிலான காலகட்டத்தில் தைச் சிறப்பிதழ் குறிப்பிடத்தக்க வகையில் வெளிவந்துள்ளதை உணரமுடிகிறது.

தை இதழின் முகப்பு ஓவியமாக இயற்கைக் காட்சியை மகளிர் தை நீராடலாக அமைத்திடும் ஆசிரியர் ராய. சொ. அதை விளக்கும் பாட்டையும் எழுதி வெளியிட்டுள்ளார். 1934ஆம் ஆண்டின் தை இதழில் அப்போதைய காங்கிரஸ் தலைவராக விளங்கிய பாபு இராஜேந்திர பிரசாத் அவர்களின் திருவுருவப் படத்தை முழுப்பக்க அளவில் வெளியிட்டுள்ளது. காங்கிரசில் தலைமை தாங்கிய பெரியவர்களின் படங்களைக் கால வரலாற்று அடிப்படையில் வெளியிட்டு நினைந்து போற்றியுள்ளது.

அன்றைய காலகட்டத்தின் பல்துறை அறிஞர் பெருமக்களின் படைப்புகளையும் பட்டறிவு அனுபவங்களையும் ஊழியன் தன் சிறப்பிதழில் ஒருசேர வரிசையாக்கி வாசகர்களுக்குப் பரிசாகத் தந்துள்ளது. திரு ரா.பி. சேதுப்பிள்ளையின் அடைக்கல மாதா, கவிஞர் எஸ். தேசிக விநாயகம் பிள்ளையின் காங்கிரஸ் கப்பல் பாட்டு, தேசபக்தர் வ.உ. சிதம்பரம் பிள்ளையின் கடவுளைக் காண்டல், பரலி சு. நெல்லையப்பரின் அழைப்பு - பாட்டு, தோழர் ம. சிங்காரவேலுவின் விஞ்ஞானத்தால் மக்கள் அடைந்துவரும் பயன், கவிஞர் நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளையின் சுதந்திரப்பாட்டு, தேசபக்தர் பொ. திருகூடசுந்தரம் பிள்ளையின் பெண்கள் விரும்புவது எது?, தோழர் எஸ். நீலாவதியின் இந்திய நாட்டில் பெண்கள், திருச்செந்தூர் திரு மு. கிருஷ்ண சர்மாவின் தேகப்பயிற்சி - பாட்டு, திரு. அ. வேதரத்தினம் பிள்ளையின் காந்தி பாஷ்யம், திரு டி. எஸ். அவினாசிலிங்கத்தின் சேவையின் இரகசியம், திரு எஸ். வையாபுரிப்பிள்ளையின் ஆராய்ச்சி, பாவேந்தர் பாரதிதாசனின் கானல் - பாட்டு, பண்டித ந.மு. வேங்கடசாமி நாட்டாரின் ஓர் தமிழ் வேந்தின் இறுதி அறிவுரை, திரு அ. சிதம்பரநாதச் செட்டியாரின் 'நான் வாழ்கிறேனா?, திரு கே. சந்தானத்தின் பழைய கோட்டையா புதிய மாளிகையா?, திரு. தி.ஜ.ர.வின் பரிவர்த்தனை முடிவு, திரு. கே.என். சிவராஜப் பிள்ளையின் இயற்கை நலப் பெருமிதம் - பாட்டு, பாரிஸ்டர் ஸி. சோமசுந்தரம் செட்டியாரின் இத்தாலி - அபிஸினியப் போரும் சர்வதேச சங்கத்தின் எதிர்காலமும், தோழர் ப. ஜீவானந்தத்தின் ஒன்றே வழி, திருமதி இ.டி. ராஜேஸ்வரி அம்மாளின் வான், தோழர் டி.எஸ். குஞ்சிதத்தின் ஒரு கண்ணில் வெண்ணெயும் மறுகண்ணில் சுண்ணாம்பும், ராய. சொ. வின் சிலப்பதிகாரம், 'பிரபஞ்சவாதி'யின் தோழர் லிட்வினாப், திருப்பள்ளியெழுச்சி - ஓவியமும் பாட்டும், உடலோம்பல் குறித்த பயிற்சி படங்கள், தீனபந்து

ஸி.எப். ஆண்டீரூஸின் உருவப் படம், தோழியை வினாதல் - படம் ஆகியவற்றை உள்ளடக்கியதாகப் பதிப்புரையுடன் தொடங்கிடும் ஊழியன் இடையிடையே கண்ணையும் கருத்தையும் ஈர்த்திடும் விளம்பரப் பகுதிகளையும் கொண்டு மனநிறைவைத்தரவல்ல கலைக் கருவூலமாக, கருத்துப் பெட்டகமாக மிளிர்கிறது. ஊழியனின் ஒவ்வொரு சிறப்பிதழுமே பொதுவாக இதே தன்மையைக் கொண்டிலங்குவது குறிப்பிடத்தக்கது.

## தொழில்முறைப் பொறாமை – போட்டி இதழ்

ஊழியன் தொடங்கப்பட்ட சில காலத்திற்குள் காரைக்குடியிலிருந்து வெளிவந்த மற்றொரு இதழ் ‘குமரன்’. தனவைசிய ஊழியனின் நிறுவனர் திருவாளர் முருகப்பச் செட்டியாரால் தொடங்கப்பட்ட இதழ்தான் குமரன். ராய. சொ.வின் ஊழியனுக்கும் குமரனுக்கும் இடையில் பனிப்போர் நிகழ்ந்து கொண்டே இருந்தது. சில நேரங்களில் வெளிப்படையாகவும் வெளிப்பட்டது. ஓரிரு நிகழ்வுகளை இங்குக் குறிப்பிடுவதன் வழி அதன் போக்கைப் புரிந்து கொள்ளலாம். வெளிநாடுகளுடன் தக்க வகையில் தொடர்பு கொண்டிருந்த ஊழியன் இதழ், தங்கம், வெள்ளி உள்ளிட்ட பொருள்களின் அன்றாட விலைவாசியைத் தந்தி வாயிலாக நேரடியாகப் பெற்று, ‘தந்திச் செய்தி’ என்ற தலைப்பில் ஊழியனில் வெளியிடுகின்ற வழக்கத்தைக் கொண்டிருந்தது. தகவல் தொடர்புகள் அருகியிருந்த அந்த காலக்கட்டத்தில் ஊழியனின் இந்த முயற்சி பாராட்டத்தக்க புதுமுயற்சி; உள்நாட்டு வணிகத்திற்கே வழிகாட்டுகின்ற சீரிய பணியை ஊழியன் இதழ் தன்கடமையாய் மேற்கொண்டு செயல்பட்டு வந்தது. இதற்காக ஊழியன் மேற்கொள்கிற பொருட் செலவும் பிற சிரமங்களும் ஏராளம்.

இவ்வாறு ஊழியனுக்கு உரிய சிறப்பு முத்திரையாய் - ஊழியனின் தன்முயற்சியால் தந்திவழி சேகரிக்கப்பட்ட விலைவாசி நிலவரத்தை எவ்வித அனுமதியும் இல்லாமல் அப்படியே எடுத்துக் குமரன் இதழ் அதனை வெளியிட்டுப் பயன்கொண்டு வந்தது. நன்றி ‘ஊழியன் இதழ்’ என மட்டும் இறுதியில் குமரன் குறிப்பிட்டு வந்தது. இதனைப் பன்முறை சுட்டிக் காட்டியும் தன்போக்கை மாற்றிக் கொள்ளாத குமரன் இதழை ஊழியனின் தலையங்கத்தின் வழி ஆசிரியர் ராய. சொ. அவர்கள் கடுமையாகச் சாடுகின்றார். அதற்குப் பதிலும் மறுப்பும்

குமரன் வழங்குகிறது என்றாலும் தம் போக்கைக் கைவிடுவதாகத் தெரியவில்லை. இந்நிலையில் ஊழியன், குமரன் மீது வழக்குத் தொடுக்க நேரும் என்னும் எச்சரிக்கையை விடுக்கிறது. அதற்குப் பதிலிறுக்கும் குமரன் தன் தவற்றுக்காக வருத்தமோ மன்னிப்போ கோரவில்லை. மாறாக நிகழ்ந்து கொண்டிருப்பது காந்தி யுகமாக இருப்பதால் ஊழியனோடு தொடர்ந்து போரிடத் தாம் விரும்பவில்லை; ஆதலின் சமாதானமாக இதை அந்த அளவில் விட்டுவிடுவதாகத் தலையங்கம் தீட்டுகிறது. இறுதியாகக் குமரனுக்கு பதிலிறுத்துத் தலையங்கம் எழுதும் ஊழியன், குமரனின் இத்தகு சமாதானப் போக்கைக் கேலியாகக் குறிப்பிடுகிறது. பிறருடைய உரிமையில் அவர்களின் இசைவு இன்றியே தலையிடுகின்ற - தமக்குச் சாதகமாக ஆக்கிக் கொள்கின்ற குமரனின் செயல்பாடுகளின் தொடக்கநிலைச் சூழலில் குமரனுக்கு அந்தக் காந்தியுகச் சிந்தனை எங்கே போயிற்று? உரிமை மீறலை முதலில் செய்து, அவற்றுக்குக் காரணமான குமரன் இதழே, உருத்திராட்சப் பூனையாகிக் காந்திய சமாதானம் பேசுவது மிகவும் வேடிக்கைதான் என ஊழியன் தலையங்கம் எழுதி அந்தப் போருக்கு முற்றுப்புள்ளி வைக்கிறது.

## பாரதியார் பாடல்

ஊழியனின் ஆசிரியர் ராய. சொ. அவர்கள் மகாகவி பாரதியார் பாடல்களில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டுள்ளமை வெளிப்படுகிறது. இதழ்தோறும் பாரதியார் பாடல் ஒன்றேனும் இடம் பெற்றிருப்பதை ஊழியனின் பொதுத்தன்மையாகக் காணமுடிகிறது. பாரதியாரின் பாடல், எழில்மிகு ஓவியக் காட்சி விளக்கங்களுடன் வெளியிடப்பட்டுள்ளது தனிச்சிறப்பாகும். பாரதியின் சமூகச் சீர்திருத்தப் பாடல்கள், தேசபக்திப் பாடல்கள் ஆகியன இடம் பெற்றிருக்கும். பாரதியின் சீர்திருத்த நோக்கிலான பெண்களின் முகத்திரை களைதல் குறித்த பாடலைக் காட்சி ஓவியத்துடன் வெளியிட்டுள்ள ஊழியன் (8.3. 1935) பாரதியின் பாக்கள் நன்கு விளங்கக் கூடியனவெனினும் அவைகளை மிக எளிதாக அறிந்து கொள்ளுமாறு சித்திரமும் தீட்டித் தரப்பட்டுள்ளது என்ற விளக்கக் குறிப்பையும் அளித்துள்ளது. பாரதியின் பாடல்கள் மக்களிடம் தக்கவகையில் சென்று சேருவதற்கான முயற்சியை ஊழியன் சிறப்பாகவே செய்துள்ளது.

## இலக்கியப் பகுதி

பண்டையத் தமிழ் இலக்கியங்களின் இலக்கிய நுட்பங்களை விளக்குவதற்கு உரிய இடமாக ராய.சொ. அவர்கள் இப்பகுதியை அமைத்துள்ளார். இலக்கியச் சூழல், இயற்கை அழகு மிளிரும் ஓவியப் பின்னணியுடன் விளக்கம் பெறுகிறது. திருக்குறள் காமத்துப் பாலின் 'நாணுத்துறவு உரைத்தல்' குறித்த பகுதியை (8.3.1935) ஊழியனின் இவ்வகை இலக்கியப் பணிக்கான காட்டாக அறிய முடிகிறது.

## பாரதிதாசன் தொடர்பு

பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் கவிதைத் தொகுப்பு வெளி வந்த காலகட்டத்தில் ஊழியன் இதழ் (18.3.1938) மிகச் சிறப்பா கப் பாராட்டி, ஒருபக்க அளவில் மதிப்புரை எழுதியுள்ளது. பாரதிதாச னின் கவிதைகளின் பெருமைதனைக் குறிப்பிடுவதோடு, புதுவை பாரதிதாசனின் வாழ்க்கை வரலாற்று வளர்ச்சிப் போக்கினையும் பெரு மையோடு குறிப்பிட்டுள்ளது.

பாவேந்தர் 'கவிதா மண்டலம்' என்னும் கவிதை இதழை மீண்டும் வெளியிட்டு நடத்த முனைகின்ற அந்தத் தொடக்கப் பகுதியில் - ஆயிரத் துத் தொளாயிரத்து முப்பதுகளின் இடைப்பகுதியில் ஊழியன், பாரதி தாசனின் இந்தக் கவிதை இதழ் முயற்சியை வெகுவாகப் பாராட்டி வரவேற்றுள்ளது. ஆசிரியர் ராய.சொ. குறிப்பிடும்போது, கொள்கை யில் கருத்துவேறுபாடு இருப்பினும் பாரதிதாசன் அவர்களின் எழுச்சி மிகு கவிதைகள் எல்லோராலும் மிகவும் மதிக்கத்தக்கதெனப் போற்றி யுள்ளார்.

## புதுக்கவிதைக்கு இடம்

ஊழியன் இதழ் அன்றைய முன்னணிப் படைப்பாளர்களுக்கும், வளரும் இளம் கவிஞர்களுக்கும் இடம் தந்துள்ளது. பண்டைய மரபுச் செல்வங்களைப் போற்றும் அதே நேரத்தில் தமிழின் புதுவரவாக அமைந்த புதுக்கவிதை படைப்புகளுக்கும் ஊழியன் இதழ் களம் தந்து வரவேற்றுள்ளமை இலக்கிய வரலாற்று நோக்கில் குறிப்பிடத் தக்கது. இவ்வகையில், சிறுகதை மன்னன் புதுமைப்பித்தனின் நவீன கவிதை என்னும் புதுக்கவிதையை 1935ஆம் ஆண்டுவாக்கில் ஊழியன்

இதழ் வெளியிட்டுள்ளதைத் திறனாய்வாளர் திரு. வல்லிக்கண்ணன் குறிப்பிடுகின்றார்.

## ஊழியன் குறித்த சமகால இதழ்களின் மதிப்புரைகள்

ஊழியன் இதழ் அலுவலகம் காரைக்குடியிலிருந்து சென்னைக்கு மாற்றப்பட்டுச் சென்னையிலிருந்து வெளிவரத் தொடங்கிய காலத்தில் புதுப்பொலிவுடன் வெளிப்பட்டது; புது வடிவுடனும், புது வண்ணத்துடனும் வெளிவந்த ஊழியனைக் குறித்த சமகாலத்துக் குறிப்பிடத்தக்க இதழ்கள் மதிப்புரைகளை வழங்கி ஊழியனின் இதழ்த் துறைத் தொண்டை வரவேற்றுள்ளன. அவ்வரிசையில் 'செட்டிநாடு', 'ஹிந்து', 'ஆனந்தவிகடன்', 'குமரன்', 'ஜெயபாரதி', 'காந்தி', 'இந்து நேசன்', 'மணிக்கொடி' ஆகிய இதழ்கள் குறிப்பிடத்தக்கன.

'சென்னை நகரில் வெளியாகும தமிழ் வாரப் பத்திரிகைகளுடன் 'ஊழியன்' நன்கு வரவேற்கப்படவேண்டிய ஓர் பத்திரிகையாகும்' என 'ஹிந்து' (31.7.34) பாராட்டியுள்ளது.

'ஊழியன் எப்போதுமே அரசியலிலும் சமூகத் துறையிலும் தீவிரவாதி. வழவழ கொழகொழப்பேச்சே அறியாதவன். இப்பொழுது உயர்தரப் பத்திரிகைக்குரிய பல சிறந்த அம்சங்களுடன் ஏராளமான சித்திரப் படங்களுடனும் வெளிவருகிறான். தமிழ்நாட்டார் ஊழியனுக்குச் சிறந்த வரவேற்பளிப்பார்கள் என்பதில் எனக்கு யாதொரு சந்தேகமும் இல்லை' என 'ஆனந்த விகடன்' (5.8.34) அதற்கே உரிய தன்மையில் மதிப்புரை வழங்கியுள்ளது.

இதழ் உலகில் ஊழியனுக்குப் போட்டியாகத் தன்னைக் கருதிக் கொண்டு சில காலங்களில் சற்று மாறுபட்டு நடந்து கொண்ட குமரன் (9.8.34) இதழ் வனப்புடன் விளங்கும் ஊழியனையும் அதன் ஆசிரியரையும் வரவேற்றுப் பாராட்டுகிறது.

'ராய.சொ. அவர்கள் சிறையிலிருந்த காலத்தில் பாடிய பாட்டுகள் இதழ்தோறும் வெளிவருகின்றன. என்றும்போல் காந்தியடிகளையும் காங்கிரசையும் பற்றிச் செல்லும் கொள்கையுடன் விளங்குகிறது. இனிய தமிழில் சிறந்த கருத்துக்களைக் கொண்டு புத்துயிரும் புதுத் தோற்றமுங் கொண்டு வெளிவரும் ஊழியனைத் தமிழ் மக்கள் யாவரும் ஆர்வமுடன் ஆதரிக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர்.'

மேற்கண்ட குமரனின் மதிப்புரை வாயிலாக, மாறுபட்ட கருத்துக் கொண்டவர்களும் மதிக்கும்படியான உயர்வையும் மேன்மையினையும் ஊழியன் பெற்று வளர்ந்த சிறப்பை அறிய முடிகிறது. குமரனும் ஊழியனும் தாம் மேற்கொண்டொழுகிய இதழ்த் துறைப் பண்பும் இதனால் வெளிப்படுகிறது.

## அயல்நாட்டு நடப்புகளுக்கும் செய்திகளுக்கும் சிறப்பு இடம்

ஒவ்வொரு ஊழியன் இதழிலும் வெளிநாடு தொடர்பான குறிப்புகளும் படங்களும் சிறப்பாக இடம் பெற்றிடும்; தேசம் சுதேசியத்தை வேட்டு நின்றாலும் அயல்நாட்டின் அறிவியல் வாழ்வியல் வளர்ச்சிகளை நம் நாட்டவர்கள் அறியும்படிச் செய்து ஆற்றுப்படுத்துகின்ற பேராவல் முயற்சி இதன்வழி வெளிப்படுகிறது. அயல் நாட்டுக் கல்விக்கூடங்கள், தொழிற் சாலைகள், உலக முக்கியத்துவம் வாய்ந்த நினைவுச் சின்னங்கள், வளர்ந்த நாட்டு மக்களின் அறிவுத்திறம், அரசியல் முறைமை, உலகத் தலைவர்களின் மாண்பு போன்றவற்றின் தகவல்களும் படங்களும் இடம் பெற்றிடும்; புதுவரவாக அமைகின்ற பெரிய கப்பல்கள், விமானங்கள் ஆகியவற்றின் காட்சி விளக்கப் படங்களும் இடம் பெற்றிடும்.

கடல்கடந்த அயல்நாட்டு வணிகத்தில் தமிழகத்தில் சிறப்பிடம் பெற்றிருந்த நாட்டுக்கோட்டை நகரத்தார் எனப்படும் தனவைசிய வணிகப் பெருமக்களின் சூழலில் தோன்றி வளர்ந்த ஊழியன், அதன் சார்புநிலை காரணமாக அயல்நாட்டு அறிவுச் செல்வத்தை மிகுதியும் தம் வாசகர்களுக்கு வழங்கித் தொண்டாற்றியுள்ளது எனக் கருத முடிகிறது.

## ஊழியனின் மொழிநடை

தமிழ்ப் பேரறிஞராக விளங்கிய ராய.சொ. அவர்களை ஆசிரியராகக் கொண்டிலங்கிய ஊழியன் இதழில் தமிழ் வளமும் இலக்கிய மணமும் செறிந்திருந்தது. எழுத்துப் பிழையோ அச்சுப் பிழையோ இன்றி வெளிவந்த ஒருசில இதழ்களில் இதுவும் ஒன்று எனலாம். எழிலும் எளிமையும் மிக்க மொழிநடை கொண்டே ஊழியன் உலவி வந்துள்ளான். தேசிய அளவிலும் உலக அளவிலும் செய்திகளை வெளியிடுகிற முயற்சிக்கு இடையில் சிற்சிலபோது வடமொழி மற்றும் ஆங்கிலக் கலப்பை ஊழியன் எதிர்கொண்டுள்ளான்.

வணிக நோக்கோடு அமைகின்ற விளம்பரப் பகுதிகளைப் பொருத்த வரையில் நடைமுறைப் போக்கிற்கு ஏற்ப ஆங்கிலம் உள்ளிட்ட பிற மொழிக் கலப்பை ஊழியன் அப்படியே பயன்படுத்திக் கொண்டுள்ளது. எனினும், தமிழ் உணர்வு இழையோட்டத்தை அறியமுடிகிறது. எல்லா விளம்பரங்களும் தமிழ்மொழி வழியிலேயே வெளியிடப்பட்டுள் ளமை குறிப்பிடத்தக்கது. தவிர்க்க இயலாத சூழலில் இரு மொழி நிலை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஊழியன் அச்சும் வெளியீடும்

ஊழியன் இதழ் தொடக்கத்தில் காரைக்குடியிலிருந்து வெளி வந்தபோதும் பின்னர் சென்னையிலிருந்து வெளிவந்தபோதும் இறுதி யாக மீண்டும் காரைக்குடிக்கு மாறியபோதும் தமக்கென்று தனியே அச்சுக்கூடத்தை நிறுவி அதன் வழியாகவே அச்சிட்டு வந்துள்ளது. இதன் காரணமாகப் பிழையின்றித் தம் விருப்பத்திற்கு ஏற்ப வெளி யிடுகின்ற வாய்ப்பை ஊழியன் பெற்று வந்துள்ளது. தொடக்கத்தில் காரைக்குடியில் இருந்தபோது 'ஊழியன் அச்சுக்கூடம்' என்ற பெயரி லும், பின்னர் சென்னையில் அச்சுக்கலைத்தொழில்நுட்ப வளர்ச்சி களையெல்லாம் பெற்று வளர்ந்த நிலையில் 'ஊழியன் பவர் பிரஸ்' என்ற பெயரிலும் தொண்டாற்றியுள்ளது.

ஊழியன் பவர் பிரஸ், ஊழியனுக்கான இதழ் உருவாக்கப் பணிகளையும் கடந்து, மற்றவர்களுக்காகச் செய்து தருகின்ற 'ஜாப் வேலை'களையும் மேற்கொண்டுள்ளது. இது குறித்த ஒரு பக்க விளம் பரத்தை ஊழியன் தை இதழில் (1934 சிறப்பிதழ்) வெளியிட்டுள்ளது. பலவித வண்ணங்களில் குறித்த காலத்தில் எல்லாவித அச்சு வேலை களும் செய்து தரப்படும் என்ற உறுதிப்பாடும் வால்போஸ்டர்களும், ரூலிங், பைண்டிங் முதலியனவும் உறுதியாகவும் அழகாகவும் செய்து தரப்படும் என்னும் அறிவிப்பும் ஊழியன் அச்சுக்கூடத்தின் அன்றைய நாளின் சிறப்பான தொழில்நுட்ப வளர்ச்சி நிலையை அளந்தறிய உதவு கிறது. இத்தகு நல்ல பின்னணியில் வெளிவந்த ஊழியன் வண்ண மும் எழிலும் கொண்ட 'தேசிய சித்திர வாரப் பத்திரிகை' என்னும் குறிப் பிற்கு ஏற்ப எல்லோரும் வியக்கத்தக்க வரவேற்கத்தக்க வகையில் வாரந்தோறும் சீரிய அணிவகுப்பை நடத்திவந்தான் என்றால் அது மிகையாகாது.

## ஊழியன் இதழ் – தொகுப்பு நூலாக மாறுதல்

ஊழியன் இதழ்களை ஆண்டு வாரியாகத் தொகுத்து அழகிய அட்டைக் கட்டுக்களுடன் தொகுப்பு நூலாக ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் வெளியிடுவதை 'ஊழியன்' ஒரு வழக்கமாக மேற்கொண்டு வந்துள்ளது. இந்தத் தொகுப்பு இதழ் விற்பனை குறித்த விளம்பரமும் ஊழியன் இதழில் இடம் பெற்றுள்ளது. வாசகர்கள், இதனை ஒரு வரலாற்றுக் கலைப்பெட்டகம் போல ஆர்வத்துடன் வாங்கியுள்ள நிலை, ஊழியன் இதழின் நிலைபேற்றுத் தன்மைக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. அந்த நேரத்துக்கு மட்டுமே பயனளிக்கத் தக்கதாகக் கருதப்படும் இதழ்கள், காலங்கள் பல கடந்தும் பயன் நல்கக்கூடிய நயத்தக்க நூல்களாக வடிவம் பெறுகின்ற சிறப்பினை ஊழியன் இதழின் வரலாற்று வழி அறியமுடிகிறது. இதழின் வணிக நிலையிலும் பயன்பாட்டு நிலையிலும் இது குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறுகிறது. பிற இதழ்களுக்கும் ஊழியன் வழிகாட்டுதலாக அமைகிறது.

## ஊழியன் துணை ஆசிரியர்கள்

ராய. சொ. அவர்களை ஆசிரியராகக் கொண்டு தொண்டாற்றிய ஊழியன், சென்னையிலிருந்து வெளிவந்த காலகட்டத்தில் தமிழகத்தின் சிறப்புக்குரிய படைப்பாளர்களாக விளங்கிவந்த ஆர்வம்மிக்க அறிஞர்களையும் ஆற்றல்மிக்க இளைஞர்களையும் துணையாசிரியர்களாகக் கொண்டு இயங்கி வந்துள்ளது. இவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் திரு வ.ரா., திரு தி.ஜ.ர., திரு புதுமைப்பித்தன் போன்றோராவர். இத்தகையோரின் பல்துறைக் கலை அனுபவம் ஊழியனுக்கு மேலும் பெருமை சேர்ப்பதாகியது.

## ஊழியன் – விளம்பர முகவர்கள்

விளம்பரத் துறையில் கருத்து செலுத்தி, அதன்வழி தம்முடைய வணிக நிலைபேற்றை உறுதி செய்து கொண்ட ஊழியன், தம் இதழுக்கான விளம்பர ஏஜெண்டுகளை - முகவர்களை ஊர்தோறும், நிருபர்களைப் போலவே கொண்டிருந்திருக்கிறது. அவ்வகையில் சென்னை விளம்பர முகவராக ஜெமினி திரு எஸ்.எஸ். வாசன் அவர்கள் பணியாற்றியிருக்கிறார்கள் என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது.

ஊழியன் இதழ்களிலும், சிறப்பிதழ்களிலும் கலைத் துறையைக் குறிப்பாகச் சினிமாத் துறையைச் சேர்ந்த விளம்பரங்கள் அதிக எண்ணிக்கையில் இடம்பெற்றுள்ளதற்கான பின்னணியை இதன்வழி உணரமுடிகிறது.

## ஊழியன் – திரை உலக முக்கியத்துவம்

தேச விடுதலை - தமிழ் மொழி இலக்கிய உணர்வு - காந்தியடிகளின் மாண்பு போற்றல் - உள்நாட்டு மற்றும் உலக அரங்கின் அரசியல், சீர்திருத்தச் செய்திகள் ஆகியவற்றைக் கொண்டு மக்களுக்கு இலக்கு நோக்கிய அறிவுச் செல்வத்தை அளிப்பதை ஒரு வேள்வியாக மேற்கொண்டு முன்மாதிரியாக அமைந்து இதழ்த்தொண்டாற்றி வந்த தமிழ்க்கடல் ராய. சொ. அவர்களின் ஊழியன் இதழ், தம்முடைய தொடக்கம் முதல் ஓரளவிலும், சென்னையிலிருந்து வெளிவந்த காலகட்டத்தில் சற்றுக் கூடுதலாகவும் திரையுலகச் செய்திகளுக்கு இடம் அளித்துவிட்டதோ என எண்ணத் தோன்றுகிறது. இதழ்தோறும் திரைச்செய்திகளும், நடிகர் நடிகைகளைப் பற்றிய தகவல்களும் புது வரவுத் திரைப்படங்களின் ஒருபக்க அளவிலான காட்சிப் படங்களும் முழுப்பக்க விளம்பரங்களும் அணி செய்திடும். இதன் வளர்நிலையாக ஊழியன் இதழின் முகப்புப் பகுதியையே திரை உலகம் தனதாக்கி வெற்றி கொண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. ஊழியனின் ஓர் இதழ் (1.3.1935) முகப்பில் கதாநாயகன் வைத்யாவும் கதாநாயகி பத்மாவும் இணைந்து இடம் பெற்றுள்ள ரங்க பூமி திரைப்படத்தின் காட்சிப்படம் துல்லியமான அழகிய அச்சுக்கலை நுட்பத்துடன் எழிலோவியமாக வெளியாகியுள்ளது.

இலட்சிய நோக்குடைய ஊழியன் போன்ற இதழ்களும் கூட நன்கு வளர்ந்துவிட்ட தமிழில் வெகுசனப் பத்திரிகை என்னும் தம் நிலையைத் தக்கவைத்துக் கொள்ள வேண்டிய கட்டாயத்திற்காகவும், வணிகக் காரணங்களுக்காகவும் ஏற்பச் செயல்படவேண்டியுள்ளது. கவர்ச்சி மிக்க திரை உலகம் போன்ற பகுதிகளுக்கு இடம் அளித்தாக வேண்டிய நெருக்கடிகட்கு இதழ்கள் ஆட்படுகின்றன. ஆதலின் இலட்சியத் தளர்வுக்கு இடம் தந்து இணங்கி அதற்கு இரையாக வேண்டிய சூழல் நேர்ந்து விடுகிறது; இது ஆழ்ந்த கவலையோடு எண்ணத்தக்கதாகின்றது.

## ஊழியன் – மீண்டும் காரைக்குடிக்கு மாற்றம்

சென்னையிலிருந்து, முதன்மை நிலைபெற்ற இதழாக வெளிவந்து கொண்டிருந்த ஊழியன், மீண்டும் காரைக்குடிக்கு மாற்றம் பெறுகிறது. சென்னையிலிருந்து வெளிவந்த இறுதி இதழ் 18.3.1938 அன்றைய இதழேயாகும். இந்த இதழில்தான் ஊழியன் ஊர்மாற்றம் என்ற தலைப்பிட்டு, இனிக் காரைக்குடியிலிருந்து வெளிவரும் எனக் குறிப்பிட்டு ஊழியன் ஆசிரியர் ராய.சொ. அவர்கள் இந்தியா பப்ளிகேஷன்ஸ் லிமிடெட்டின் மானேஜிங் டைரக்டர் என்ற முறையில் அதன் சார்பில் கீழ்க்காணும் அறிவிப்பு ஒன்றை வெளியிட்டுள்ளார்.

> "நமது 'ஊழியன்' பத்திரிகை இன்னும் சில வாரங்களில் காரைக் குடியினின்றும் வெளிவரும். சில காரணங்களால் 'ஊழியன்' காரியாலயமும் பத்திரிகை வெளியீடும் சென்னையினின்றும் காரைக் குடிக்கு மாற்றப்பெறுகின்றன. எத்துணை வாரங்கள் செல்லும் எனச் சொல்லுதற்கில்லை. அனேகமாக மூன்று அல்லது நான்கு வாரங்களில் வெளிவரக்கூடும். தாமதம், இயந்திரம் முதலியன வந்துசேர வேண்டுவதிலும் டிக்ளரேஷன் பெறுவதிலுமேயாகும். வெளிவந்ததும் சந்தாதார்க்குத் தொடர்ந்து அனுப்பப் பெறும். இடைக்காலத் தாமதம் பொறுத்துக் கொள்க!"

எனக் கனிவோடும் பணிவோடும் இதழாசிரியர் தன்னிலை விளக்கத்தை அறிவித்துள்ளார்.

ஆதலின் இந்த அளவில் ஊழியனின் உச்ச நிலையிலிருந்த சென்னை வெளியீடு நிறைவு காண்கிறது.

## காரைக்குடிக்கு மாற்றத்திற்கான காரணம்

ஊழியன் இதழ் சில காரணங்களால் சென்னையிலிருந்து காரைக்குடிக்கு மாற்றப் பெறுவதாக ஆசிரியர் ராய.சொ. அவர்கள் தமது அறிவிப்பில் குறிப்பிட்டுள்ளார். காரணங்கள் என்ன என்பது தெளிவாகவில்லை. சீரோடும் சிறப்போடும் நடந்துவந்த ஊழியன் இதழின் வளர்ச்சிப் பயணத்தில் நேர்ந்துவிட்ட ஓர் இடையீடு என்றே கருதத் தோன்றுகிறது.

ஊழியன் காரைக்குடிக்கு மாற்றப்படுவதற்கான காரணங்கள் சொல்லப்படவில்லை என்றாலும் சிலவற்றை உய்த்தறிய முடிகிறது.

திரு. ராய.சொ. அவர்களின் விடுதலை இயக்கத் தொண்டையும், தியாகத்தையும் அறிந்த ஊர் மக்கள், 1938ஆம் ஆண்டில் காரைக் குடி நகர மன்றத் தலைவராக அவரைத் தேர்ந்தெடுத்தனர்; நான்கு ஆண்டுகள் நகரமன்றத் தலைவராகப் பொறுப்பேற்றுச் செயல்பட் டார். நகரமன்றத் தலைவர் என்ற பதவியை ஏற்ற பின்னர் மக்களுக்குப் பணியாற்ற அவர் காரைக்குடியிலேயே இருக்கவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆதலின், சென்னையிலிருந்து ஊழியன் இதழ்ப் பணியைத் தொடரமுடியாத சூழலுக்கிடையில் அதனைக் காரைக்குடிக்கு மாற்றி யிருக்கக்கூடும். ஆதலின் ஊழியன் ஊர் மாற்றத்திற்கான சில கார ணங்களுள் நகரமன்றத் தலைவர் பொறுப்பைத் திரு ராய.சொ. அவர் கள் ஏற்றுக் கொண்டதுதான் தலையாய காரணமாக இருக்கலாம் என எண்ணமுடிகிறது.

## காரைக்குடியிலிருந்து மீண்டும் ஊழியன்

ஆசிரியர் திரு. ராய.சொ. அவர்கள் அறிவித்திருந்தது போலக் குறுகிய கால இடைவெளிக்குப் பின்னர் ஊழியன் இதழ் 1938ஆம் ஆண்டின் மையப் பகுதிவாக்கில் காரைக்குடியிலிருந்து மீண்டும் வெளிவரத் தொடங்கியதாகத் தெரிகிறது. இதனைப் பேராசிரியர் முனைவர் வீ. அரசு உள்ளிட்ட இதழியல் திறனாய்வாளர்கள் உறுதிப் படுத்தியுள்ளனர்.

காரைக்குடியிலிருந்து மீண்டும் வெளிவந்த ஊழியன், தன் முந்தைய சிறப்புத் தன்மைகளையும், செல்வாக்குப் பெற்ற வெகுசன இதழ் என்னும் நிலையையும் தக்க வைத்துக் கொண்டு தொடர முடிந் ததா? என்பது தெளிவாக அறியப்படவில்லை. ஆசிரியர் திரு ராய. சொ. அவர்களின் பல்வேறு பொதுநலன் நோக்கிய அரசியல் பணிக ளுக்கு இடையில் ஊழியன் மீது காட்டப்படவேண்டிய கவனமும் அர வணைப்பும் குறைபட்டிருக்குமோ என்ற ஐயமும் ஏற்படுகிறது. இத்தகு சூழல்களுக்கிடையில் ஓரிரு ஆண்டுகள் அளவுக்கே ஊழியன் இதழ் வெளிவந்திருக்கக்கூடும் எனத் தோன்றுகிறது. ஏறக்குறைய 1940ஆம் ஆண்டுவாக்கில் சுமார் இருபது ஆண்டுகள் சீரிய இதழ்த் தொண்டாற்றிய ஊழியன் தன் தொண்டுக்கு நிறைவு கண்டிருக்கக் கூடும் என்ற முடிவுக்கு வர இடமுள்ளது.

## ஊழியன் தொண்டுப் பயணத்தின் இடையீடுகள்

'ஊழியன்' இதழ் 'தனவைசிய ஊழியன்' என்ற பெயரோடு தொடங்கப்பட்ட 8.9.1920 என்னும் அன்றைய காலம்தொட்டு, ஏறக்குறைய 1940ஆம் ஆண்டில் அது நிறைவு பெற்றது வரையிலான காலகட்டத்தில் ஊழியன் இதழ் தன் பயணத்தில் நான்கு முறை தடைப்பட்டு இடையீட்டை எதிர்நோக்கியுள்ளது. தேசிய பத்திரிகைக்கு நேரக்கூடிய அவக்கேடுகளெல்லாம் ஊழியனுக்கும் நேர்ந்தது. ஆங்கில அரசாங்கத்தினரால் ஈடுகாணம் - ஜாமீன் கேட்கப்பட்டது; இந்தச் சூழலுக்கும் கெடுபிடிக்குமிடையில் ஊழியன் முதல் இருமுறையும் தடைப்பட்டு நின்றது.

பின்னர் 1933ஆம் ஆண்டில் திரு. ராய.சொ. அவர்கள் சட்ட மறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டு ஓராண்டு சிறைவாய்ப்பட்டிருந்தார். இதன் காரணமாக மூன்றாவது முறையாக சுமார் ஓராண்டு அளவிற்கு ஊழியன் வரவும் தடைப்பட்டிருந்தது; அதனையடுத்து 1934-இல் சென்னையிலிருந்து ஊழியன் வெளிவரத் தொடங்கியது.

இறுதியாக, திரு ராய. சொ. அவர்கள் காரைக்குடி நகரமன்றத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட 1938ஆம் ஆண்டு காலகட்டத்தில் சென்னையிலிருந்து காரைக்குடிக்கு ஊழியனை இடமாற்றம் செய்கிற முயற்சிக்கு இடையில் குறுகிய காலம் நான்கு அல்லது ஐந்து வாரங்கள், ஊழியன் வெளிவராமல் தடைபட்டிருந்தது.

இந்த நான்கு முறை தவிர, அந்த இருபதாண்டுக் கால எல்லையில் ஊழியன் தேச சேவைக்கரகத் தன்னையே முழுமையாக அளித்துப் போற்றுதலுக்குரிய தொண்டை நிறைவுடன் ஆற்றியுள்ளான்.

## ஊழியன் பெயர்ச் சாயலில் வெளிவந்த பிற இதழ்கள்

'ஊழியன்' மற்றும் அதன் தொடக்கமான 'தனவைசிய ஊழியன்' என்னும் இதழ்களின் பெயர்ச் சாயலில் தமிழ்நாட்டில் அதே கால கட்டத்திலும் பின்னாளிலும் பல இதழ்கள் வெளிவந்து உலவியுள்ளன.

திரு டி.வி.கே. நாயுடு அவர்கள் 1932ஆம் ஆண்டில் திருச்சிராப்பள்ளியிலிருந்து 'வர்த்தக ஊழியன்' என்னும் இதழை வெளியிட்டு வந்துள்ளார். திறனாய்வாளர் திரு. வல்லிக்கண்ணன் அவர்களை ஆசிரி

யராகக் கொண்டு 1937ஆம் ஆண்டுவாக்கில் 'கிராம ஊழியன்' என்னும் இதழ் வெளிவந்துள்ளது. அதேபோன்று 'உலக ஊழியன்', 'தேச ஊழியன்' ஆகிய இதழ்களும் வெளிவந்துள்ளதாகத் தெரிகின்றது.

## ஊழியன் வரலாற்றில் ஐந்து காலகட்டங்கள்

ஊழியன் இதழ் வரலாற்றின் நோக்கையும் போக்கையும் ஐந்து காலகட்டங்களாகப் பகுத்து அறிவதன் வழி அதன் தொண்டைத் தெளிவாக உணர்ந்து கொள்ள முடியும்.

1. சீர்திருத்தச் செம்மல் திரு செ. முருகப்பச் செட்டியார் அவர்களை ஆசிரியராகக் கொண்ட தனவைசிய ஊழியன் காலம்.

2. தமிழ்க்கடல் திரு ராய. சொக்கலிங்கன் அவர்களை ஆசிரியராகக் கொண்ட தனவைசிய ஊழியன் காலம்.

3. தனவைசிய ஊழியன், ஊழியன் எனப் பெயர்மாற்றம் பெற்று, திரு ராய.சொ. அவர்களை ஆசிரியராகக் கொண்டு, காரைக்குடியிலிருந்து வெளிவந்த காலம்.

4. ஊழியன், காரைக்குடியிலிருந்து சென்னைக்கு மாற்றப்பட்ட புகழின் உச்சக்காலம்.

5. ஊழியன் சென்னையிலிருந்து மீண்டும் காரைக்குடிக்கு மாற்றப்பட்ட காலம்.

மேற்குறித்த இந்த வகைப்பாட்டின் அடிப்படையிலேயே ஊழியன் பற்றிய ஆய்வும் இங்கே நிகழ்த்தப்பட்டு முடிவுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## தொகுப்புரை

தொடக்கத்தில் தனவைசிய ஊழியன் என்னும் பெயரால் வந்த ஊழியன் இதழ் தாம்கொண்ட குறிக்கோளினைச் செம்மையோடு நிறைவு செய்துள்ளது.

இந்திய விடுதலைப் போரில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவரும் காந்தியச் சிந்தனையாளரும் தமிழறிஞருமான காரைக்குடி தமிழ்க்கடல் திரு ராய. சொக்கலிங்கம் அவர்கள் ஊழியனின் நிறுவனராகவும், அதன் ஆசிரியராகவும் இருந்து சீரிய முறையில்

தொண்டாற்றி ஊழியனை இதழியல் துறைக்கு நல்லதொரு வழி காட்டியாக ஆக்கியுள்ளார் என்பதை உணரமுடிகிறது.

திரு ராய. சொக்கலிங்கம் அவர்கள் மிக இளமையிலேயே தம்முடைய இருபத்து மூன்றாம் அகவையில் ஊழியன் இதழின் ஆசிரியப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, தம்முடைய நாற்பத்து மூன் றாம் அகவை வரையில் அப்பணியைச் சிறப்புற ஆற்றியுள்ளார். திரு ராய. சொ. அவர்களின் இளமை ஆற்றலும் இடையறா ஆர்வமுமே புதுமை எண்ணவேகத்துடனும் புதுமை வண்ண ஓவியத்துடனும் கூடிய வெற்றிக்குரிய இதழாக ஊழியனை உருவாக்க முடிந்துள்ளது எனலாம்.

தாய்த்திருநாடும் தாய்மொழியும் இருகண்கள் என்னும் உணர் வோடு வெளிவந்த புகழுக்கும் செல்வாக்குக்கும் உரிய வெகுசனப் பத்திரிகை என்னும் சிறப்பை ஊழியன் பெற்றுத் திகழ்ந்ததை அறிய முடிகிறது.

1920ஆம் ஆண்டு தொடங்கிச் சுமார் 1940ஆம் ஆண்டு வரை யில் ஏறக்குறைய இருபது ஆண்டுகள் தமிழ்நாட்டிலும் உலகெங்கி லும் உள்ள தமிழர்களின் நெஞ்சில் நீக்கமற நிறைந்திருந்த போற்று தலுக்குரிய இதழ் ஊழியன் என்பது தெரியவருகிறது.

தோற்றமும் முடிவும் உலகின் பொதுத்தன்மை என்பது போல எழுச்சிமிகு தோற்றத்தையும் ஆரவாரமற்ற நிறைவையும் ஊழியனும் பெற்றுள்ளது. எனினும் தோற்றம் முதல் படிப்படியாக நல்ல வீச்சோடு வளர்ந்து வருகின்ற ஊழியனுக்குச் சென்னையிலிருந்து வெளிவந்த 1934 முதல் 1938 வரையிலான நான்காண்டு காலம் புகழின் உச்ச காலம் என்பதையும் அறியமுடிகிறது.

இதழ் துறைக்கே உரிய பொருளாதார நெருக்கடிக்கு ஆட்படாமல், அதிக எண்ணிக்கையிலான சந்தாதாரர்களையும் விளம்பரக் கொடை யாளர்களையும் கொண்டு வளமையுடன் நடத்தப்பட்ட இதழ் 'ஊழி யன்' என்பதை அதன் வெளிப்பாட்டிலிருந்து உணரமுடிகிறது.

ஊழியன் இதழ், மொத்தத்தில் தமிழ்ச் சமுதாயத்தில் அன்றைய காலகட்டத்தில் காந்தியம் - அரசியல் - சீர்திருத்தம் - இலக்கியம் - வாணிகம் - அறிவியல் - உலக ஞானம் மற்றும் அனைத்துத் துறை

களிலும் புதுஎழுச்சியும் புது மாற்றமும் நிகழ்ந்திடத் தன் பங்களிப்பை முழுமையாகவும், சிறப்பாகவும் தந்துதவித் தொண்டாற்றியுள்ளமை நன்கு புலனாகின்றது.

## ஆய்வுக்கான அடிப்படை ஆதார இதழ்கள்

தனவைசிய ஊழியன் இதழ்கள்

ஊழியன் இதழ்கள்

## துணை நூல்கள்

இராமசாமிப் புலவர், சு.அ., 'நாள், கிழமை, திங்கள் இதழ் விளக்க வரிசை', கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, திசம்பர் 1961

குன்றக்குடி பெரிய பெருமாள், 'தமிழ் வளர்த்த நல்லறிஞர்கள்', காமதேனு பப்ளிகேஷன்ஸ், சென்னை, முதற்பதிப்பு, 1996

வல்லிக்கண்ணன், 'புதுக்கவிதை - தோற்றமும் வளர்ச்சியும்', சென்னை, தமிழ் எழுத்தாளர் சங்க வெளியீடு, 1966

தமிழ் எழுத்தாளர் யார்? எவர்?, 1966, தமிழ் எழுத்தாளர் சங்க வெளியீடு, 1966

Regd. No. M. 2923

Nationalist Tamil Daily. JAYA BHARATHI தேசிய தினசரி பத்திரிகை

# ஜய பாரதி

தேர்தல் அனுபந்தம்

# காங்கிரஸுக்கே ஓட்டு செய்க

## இன்று ஆலோசிக்க வேண்டிய பிரச்னை என்ன?

### நாட்டிற்கு விடுதலை வேண்டுமா? இல்லையா?

**தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி தலைவர் வேண்டுகோள்**

மாகாண அசெம்பிளிக்கும் கவுன்ஸிலுக்கும் சில இடங்களில் தவிர மற்ற எல்லா தொகுதிக்கும் காங்கிரஸ் அபேட்சகர்கள் நியமனம் செய்தாகிவிட்டது. எல்லா காங்கிரஸ் அபேட்சகர்களும் மும்முரமாக வேலை தொடங்கி சரியான முறையில் பிரசாரம் செய்து வருகிறார்கள். அபேட்சகர்கள் நியமனம் பற்றி இதற்கு முன் காங்கிரஸ் ஊழியர்களுள் என்ன அபிப்பிராய பேதங்கள் இருந்தபோதிலும் இப்போது அவைகள் இருக்கவே கூடாது. தமிழ்நாட்டிலுள்ள காங்கிரஸ் ஊழியர்கள் அனைவரும் காங்கிரஸ் அபேட்சகர்கள் வெற்றிக்காக உழைத்து வருகிறார்கள்.

சர்தார் வல்லபாய் படேல் சமீபத்தில் ஒரு பொதுக்கூட்டத்தில் கூறியமாதிரி, ஓட்டர்கள் தீர்க்கவேண்டிய பிரச்னை "சுதந்திரமா? அடிமைத்தனமா?" என்பதுதான். சுதந்திர ஆர்வம் நிறைந்த தமிழ் மக்கள் சுதந்திரத்திற்கே ஓட்டுச் செய்வார்கள் என்பதைப் பற்றி எனக்குச் சந்தேகமில்லை. பாமர மக்களின் தேசப் பான்மை பற்றிப் பெய்ஸ்பூர் காங்கிரஸ் வழி காட்டி விட்டது. பார்லிமெண்டரி கமிட்டித் தலைவர் கூறியது போல் தேர்தலில் ஈடுபடுவதன் மூலம் பாமர மக்களுடன் நெருங்கிய தொடர்பு ஏற்பட சந்தர்ப்பம் ஏற்படுகிறது. காங்கிரஸின் லட்சியங்களைப் பற்றியும் சட்டசபைக்குக் காங்கிரஸ் செல்லும் நோக்கத்தைப் பற்றியும் ஜனங்களிடையே காங்கிரஸ் அபேட்சகர்களும் காங்கிரஸ் ஊழியர்களும் படித்துப் படித்துக் கூறி வந்திருக்கின்றனர். காங்கிரஸ் தேர்தல் அறிக்கையையும், தேர்தல்களைப் பற்றியும் பிரஜாப் பிரதிநிதித்துவ சபையைப் பற்றியும் பெய்ஸ்பூர் காங்கிரஸ் செய்த தீர்மானம், விவசாயிகள் நன்மை திட்டம் இவைகளைப் பற்றியும் ஜனங்களுக்கு எடுத்துரைத்து வருகிறார்கள். காங்கிரஸ் நேரிடையாக இந்தத் தேர்தலில் கலந்து கொள்வதால் காங்கிரஸ் ஊழியர்களும் அனுதாபிகளும் தாங்களே அபேட்சகர்கள் போல பாவித்துக்கொண்டு தேர்தல் முடியும்வரை சலிப்பின்றி பிரசாரம் செய்ய வேண்டும்.

காங்கிரஸ் ஊழியர்கள் ஒற்றுமையுடன் வேலை செய்ய வேண்டும். முக்கியமாய்த் தாழ்த்தப்பட்ட தொகுதிகளிலும், தனித்தொகுதிகளிலும் வேலை செய்யவேண்டும். காங்கிரஸுக்கு எல்லா ஸ்தானங்களும் கிடைக்கும்படி வேலை செய்ய வேண்டும். ஒரு ஸ்தானத்தையும் [illegible] இழந்து விடக் கூடாது.

இந்த மாகாணத் தேர்தல்களைச் சர்க்கார் மற்ற மாகாணங்கள் எல்லாவற்றிற்கும் கடைசியாக வைத்திருந்த போதிலும் இந்த மாகாணம் மற்ற மாகாணங்களுக்கு வழி காட்டியாயிருக்கும் என்று நம்புகிறேன். நமக்கு எவ்வளவு எதிர்ப்பு இருந்த போதிலும் சென்னை நகர் உட்பட எல்லா இடங்களிலும் 100க்கு 100 பூரண வெற்றி கிடைக்கவேண்டும்.

சி. என். முத்துரங்க முதலியார்.

# ஜெய பாரதி

**ரா.அ. பத்மநாபன்**

## வணிக நோக்கமின்மை

மலிவான விலையில் பொருள்களை விற்பது வியாபாரத்தைப் பெருக்கும் உத்தியாக இருக்கலாம். ஆனால் 1933இல் தோன்றி, உத்தேசமாக 1938-இல் மறைந்த 'ஜெயபாரதி' என்ற பெயரில் சென்னையிலிருந்து வெளிவந்த தேசிய நாளேட்டுக்கும், 1936இல் தொடங்கி, ஒரே ஆண்டுக்குள் மறைந்த அதன் வாரப் பதிப்புக்கும் எவ் வித வியாபார, லாப நோக்கும் இருந்ததென்று சொல்லவே முடியாது. கிட்டத்தட்ட, தேசிய - சுதேசிய வெறியுடன், தர்ம கைங்கரியம் போல நடந்தது அப்பத்திரிகை என்றே சொல்லவேண்டும்.

முற்காலத்தில்கூட 'பைசா பத்திரிகை' என்று ஒரு பத்திரிகை, சென்ற 19ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் இருந்ததாம். பைசா என்பது ரூபாயில் 192இல் ஒரு பகுதி. (12 பைசா - ஒரு அணா; 16 அணா - 1 ரூபாய் என்பது பழங்கணக்கு. காலணா என்பது 3 பைசா).

ஆனால், 19ஆம் நூற்றாண்டில், தேசியப் பற்று முளைவிட்டுக் கொண்டிருந்ததே தவிர, காந்திய யுகத்தின் சிகரம் எனத்தக்க 1930-37 ஆண்டுக் காலகட்டத்தில் இயங்கியது போல வலுவாக இயங்க வில்லை. 1930-37 காலகட்டத்தில் உதித்த 'ஜெயபாரதி', காந்தியடி களின் அகிம்சை சார்ந்த சத்தியாக்கிரகப் போர் முறையிலும், சுதேசியப் பொருள்களையே ஆதரித்தல், அந்நியப் பொருள் களை ஆதரிக்கா திருத்தல் என்ற இருமுனைக் கொள்கையிலும், பொதுவாகத் தியாக மனப்பான்மையிலும் நல்ல பிடிப்பு ஜெய பாரதிக்கும் அதை நடத்திய

இளைஞர்கள் அறுவருக்கும் இருந் தது. இதுபற்றி விவரமாகப் பின்னர் பார்க்கலாம்.

## பெயர்க்காரணம்

'ஜெய பாரதி' என்ற பெயர், ஒரு தமிழ்ப் பத்திரிகைக்கு அமை வது அதிசயம் எனவே இருக்கும். ஆனால் ஜெயபாரதி தோன்றிய 1933ஆம் ஆண்டுக் காலத்தில், காந்தியடிகளின் உப்பு சத்தியாக் கிரகம் முடிந்து, சட்ட மறுப்பு இயக்கம் நடந்து கொண் டிருந்தது. அக் காலத்தில், பாரத தேசப்பற்று மிகுதியாக இருந்த தால், 'ஜய் பாரத்!' என்று கோஷமிடுவதும் உண்டு. 'ஜய் பாரத்!' திலிருந்து 'ஜய பாரதி' தோன்றியிருக்க வேண்டும். பாரதியாரின் தேசியப் பாடல்களில் ஒன்று, 'ஜய ஜய பாரத! ஜய ஜய பாரத!' என்று ஒலிக்கிறது. அதுவும் இப்பெயர் வரக் காரணமாயிருக்கலாம்.

தமிழ் மோகம் மிகுந்த தற்காலத்தவர் இந்த வடமொழிப் பெயரை ஒரு தமிழ் மொழி நாளேட்டுக்கு வைத்ததை அங்கீகரிக்காமலிருக் கலாம். ஆனால், 60 ஆண்டுகளுக்கும் முற்பட்ட அந்த நாளில், அதை எல்லாரும் வரவேற்றார்களே தவிர, எவரும் ஆட்சேபிக்கவில்லை.

ஒரு சிலர் மட்டும், 'ஜெய...' என்று இருக்கக் கூடாது. 'ஜய பாரதி' என்று இருப்பதே வடமொழிப்படி சரி' என்பர். எப்படியும் 'ஜெய பாரதி' 1933முதல் வீறுநடை போடலாயிற்று.

இந்த நாளேடு தோன்றியதே ஒரு சுவையான கதை. ஏற்கனவே 'சுதந்திரச் சங்கு' என்ற தீவிர காந்திய வாரமிருமுறை மும்முறைப் பத்திரி கை யைத் தொடங்கியவர்களே ஜெய பாரதியையும் தொடங்கினார்கள்.

## போராட்ட விளக்கங்கள்

முதலில், உப்பு சத்தியாக்கிரகக் காலத்தில் (1930), காங் கிரஸ் மேலிடத்திலிருந்து அன்றாடம் வந்து கொண்டிருந்த போராட்ட நடைமுறை விளக்கங்களைப் பரப்புவதே நோக்கமாக, சென்னையைச் சேர்ந்த ஆறு இளைஞர்கள் தலைக்குப் பத்து ரூபாய் போட்டு, காங் கிரஸ் ஆணைகளையும் நடைமுறை விளக்கங்களையும் அச்சிட்டுக் காலணா விலைக்கு விற்றார்கள்.

இவ்வாறு அச்சான தாள்களுக்கு, 'சுதந்திரச் சங்கு' என்ற பெயரும் தந்தார்கள். அக்காலத்திய சட்டப்படி, இதைப் பதிப்பித்து வெளியிடுபவராக கி. சடகோபன் என்ற திருவல்லிக்கேணி காங்கிரஸ் காரரும், ஆசிரியராக இராயப்பேட்டையைச் சேர்ந்த எஸ். வெங்கட்ட ராமன் என்பவரும், அச்சிடுபவராகத் திருவல்லிக்கேணி பைகிராப்ட்ஸ் ரோடு, 8-C எண்ணில் இயங்கிய 'கரண்ட்தட் பிரஸ்' சார்பில் எஸ். கணேசன் என்பவரும் அரசிடம் பதிவு செய்து கொண்டார்கள். (பைகி ராப்ட்ஸ் ரோடு - தற்சமயம் பாரதி சாலை)

## மக்களின் ஆர்வம்

இவ்வாறு அச்சான ஏட்டின் கட்டுக்கள் ஜார்ஜ் டவுன் பிராட்வே மூலையில் எப்போது வந்து இறங்கும் என்று பொதுமக்கள் ஆவலு டன் காத்திருப்பார்களாம். முக்கியமாக, வியாபாரஉத்தி நன்கு தெரிந்த எஸ். வெங்கட்டராமனே, கட்டுகளைப் பிரித்து, காலணா வீதம் நொடியில் விற்றுத் தீர்த்து விடுவாராம். இதை அவரே தெரிவித்துள்ளார். மக்களின் ஆர்வம் அவ்வளவு அதிகமாக இருந்தது!

ஆனால், இந்த தேசபக்தர்களில், வெங்கட்டராமனும், சடகோப னும் விரைவில் சத்தியாக்கிரக இயக்கத்தில் பங்கு கொண்டு சிறைச் சாலைவாசம் அனுபவிக்கப்போய் விட்டார்கள்.

அந்தச் சமயத்தில், அச்சிடுவோரான எஸ். கணேசன், எஸ். சுப்பிர மணியம் என்ற (சங்கு சுப்பிரமணியம்) தேசபக்தரை ஆசிரியராகக் கொண்டு, 'சுதந்திரச் சங்கு' வெளியீட்டைத் தொடர்ந்தார். இந்த வெளியீடு, ஒவ்வொன்றும் ஒரு லட்சம் பிரதிகளுக்கு மேல் விற்பனை யாகி, தமிழில் ஒரு லட்சம் விற்பனையைத் தாண்டிய முதல் ஏடு என்ற பெருமையும் பெற்றது.

ஆறேழு மாதங்களில் சிறையிலிருந்து திரும்பிய வெங்கட்ட ராமன், வெளியீட்டைத் தாமேநடத்தத் திருப்பிக் கேட்க, கணேசன் தருவதற்குத் தயங்கினார்; முடிவாக மறுத்தும் விட்டார்.

இதன்பேரில், புதிதாக ஒரு வெளியீடு, ஜெயபாரதி என்ற பெயரில் நாளிதழாகத் தொடங்கினார் எஸ். வெங்கட்டராமன். இதில் அவருக்கு உறுதுணையாக, கே.பி. மகாதேவ் என்ற வர்த்தக உத்திகளும் விளம் பரம் சேகரிக்கும் உத்திகளும் தெரிந்த ஒரு நண்பரும், வைத்தியத்

தொழிலுக்குப் படித்திருந்தும் காந்திய இயக்கங்களில் ஈடுபட்டுத் தொழிலைத் துறந்து பத்திரிகை உலகுக்கு வந்த டாக்டர் எஸ். ராமஸ்வாமி என்ற நண்பரும் ஒத்துழைக்கலானார்கள்.

## இதழ் அமைப்பு

'ஜெயபாரதி' வழக்கமான நாளேடுகளை விடப் பெரிய தாளில் அச்சாயிற்று. 'ராயல்' என்ற பெரிய அளவுத்தாளைப் பாதியாக மடித்தது; 'ராயல் ஃபோலியோ' (Royal Folio) அளவுகொண்ட பக்கங்கள் நான்கு நாள்தோறும் தரப்பட்டன. விலை காலே அணா! (அங்குலக் கணக்கில், 12 அங். அகலம்; 19 அங். உயரம். செ.மீ. கணக்கில், 30 செ.மீ. அகலம்; 48 செ.மீ. உயரம்.)

இதை அச்சடித்த அச்சு யந்திரம் பழம் புகழ் கொண்டது. ஆதியில், அன்னி பெஸண்ட் அம்மையார், 1917இல் தாம் நடத்திய 'ஹோம் ரூல்' இயக்கத்தின் ஆங்கில நாளேடான 'நியூ இந்தியா'வை அச்சிட்ட யந்திரம் இது! 'Drum Rotary' (ட்ரம் ரோட்டரி) என்ற வகை யந்திரம். 'ஜெயபாரதி' மறைந்து பல்லாண்டுகளுக்குப் பின், தெ.ச. சொக்கலிங்கம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு சில காலம் நடந்த 'நவசக்தி' என்ற காங்கிரஸ் நாளேட்டை அடிக்க இதே யந்திரம் பயன்பட்டது.

இதன் அச்சு வேகம், சாதாரண 'டிரெடில்' அச்சியந்திரங்களை விடச் சற்று அதிகம். மணிக்கு 3000 முதல் 4000 பிரதிகள் வரை அச்சடிக்க வல்லது. (முழு ரோட்டரிகளே தற்காலம் உபயோகத்தில் உள்ளன. இவை ஒரு முழு அளவு நாளேட்டில் மணிக்கு 30,000 பிரதிகள் அடித்து, மடித்து, எண்ணி வெளியே தள்ளவல்லன!)

ஜெயபாரதி அதிகபட்சமாக நாள்தோறும் 3,000 பிரதிகள் விற்பனையாயிற்று. அச்சு மிகச் சுத்தமாக இருக்கும்.

### காலணா விலை

ஜெயபாரதி காலணா விலையில் விற்றதால், அதற்கு விற்பனை மூலம் அதிக வருவாய்வரச் சந்தர்ப்பம் இல்லை. விற்பனையாளர்களுக்கு, பிரதி ஒன்றுக்கு ஒரு பைசாதான் கழிமானம். ஒரு ஏஜெண்டு 300 பிரதி விற்றால்கூட, 300 பைசா - அதாவது, இரண்டரை

ரூபாயும் 8 பைசாவுமே கிடைக்குமாதலால், விற்பனை யாளர்களுக்கு அதிக உற்சாகமிருக்க இடமில்லை. ஆனால், பத்திரிகையை நடத்தி யவர்களைப் போலவே ஆங்காங்கே வெளியூர்களில் இருந்த விற்பனை யாளர்கள் காங்கிரஸ்காரர்களாக, காந்தியடிகளின் தேசிய இயக்கங் களில் பங்கு கொண்டவர்களாக இருப்பார்கள். 'ஜெயபாரதி'யை விற்பது காந்திய, காங்கிரஸ் இயக்கத்தை வளர்ப்பதாகும் என்ற நன்னோக் கத்துடன் அதற்கு ஏஜண்டு ஆனவர்களே அதிகம். இனி, 'ஜெயபாரதி' நாளேட்டின் வேறுசில தனிச் சிறப்புக் களைக் கவனிப்போம்.

## விளம்பரம்

ஜெயபாரதி நடந்து வந்த காலத்தில், இந்தியக் கைத் தொழில் கள் அதிகம் வளர்ச்சி பெற்றிருக்கவில்லை. அங்கொன்றும் இங் கொன்றுமாக ஒரு சில சுதேசி நிறுவனங்கள் இருந்தன. டாட்டா கம்பெனி 501 சலவை சோப்புகள், பிற பொருள்கள், கேரளத்தில் தோன்றிய ஒரு சுதேசி சோப்பு, கல்கத்தாவிலிருந்து வந்து கொண்டி ருந்த 'மார்கோ' சோப்பு, கும்பகோணம் டி.எஸ்.ஆர். கம்பெனி சந்த னாதி தைலம் முதலிய வாசனைப் பொருள்கள், திருவாரூர் கே.டி.ஆர். வாசனை திரவியங்கள் 'அமிர்தாஞ்சனம்', 'ஓரியண்டல் பாம்' இவை முக்கியமான இந்திய விளம்பரப் பொருள்கள். இவை தவிர, 'மாய மோதிரம்', 'மூன்று ரூபாய்க்கு 400 பொருள்கள்', 'மோஹின் ப்ளூட் ஆர் மோனியம்' போன்ற பிற பொருள்களும் விளம்பரம் ஆகும். ஆனால், இந்த இந்தியச் சுதேசி நிறுவனங்களுக்குப் பொருளாதார வலு குறைவு. ஆகையால் அடிக்கொரு தடவை விளம்பரம் செய்யமாட்டார் கள். அது மட்டுமன்றி, நல்ல விற்பனையும் வியாபகமும் உள்ள பெரிய, நீண்டகாலப் பத்திரிகைகளுக்கே விளம்பரத்தில் முதல் மரியாதை கிடைக்கும். எல்லாவிதத்திலும் ஜெயபாரதி வரிசையில் கடைசியாக நிற்கநேரும்!

இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், பெயர் பெற்ற, லீவர் பிரதர்ஸ் என்ற வெள்ளையர் ஸ்தாபனத்திலிருந்து 'ஸன்லைட் சோப்பு' என்ற சலவை சோப்பும், மற்றொரு பிரிட்டிஷ் நிறுவனத்தின் 'பெப்ஸ்' இருமல் மாத்திரையும் எல்லாருக்கும் கிடைக்கும்; நிறையவும் கிடைக்கும்; விளம்பரப் பணமும் தவறாமல் கிடைத்துவிடும்; டி.டி. கிருஷ்ணமாச்சாரி என்ற காங்கிரஸ் அநுதாபிதான் 'ஸன்லைட்

சோப்பு' விளம்பரத்தைக் கொடுப்பார். அவர் வெள்ளையர் கம்பெனியில் இருந்தாலும், காங்கிரஸில் பற்றுள்ளவர் மட்டுமல்ல, 'ஜெய பாரதி'யை நடத்திய அத்தனை பேருக்கும் நெருங்கிய நண்பர்கூட.

'ஸன்லைட்' சோப்பு விளம்பரம் தருகிறேனென்பார் டி.டி.கே. வேண்டாம் என்று மறுத்துவிடுவார்கள் ஜெயபாரதி நிர்வாகிகள்! கஷ்டப்பட்டாலும்படுவார்கள், சிரமமான வாழ்க்கையானாலும் சரி ஏற்பார்கள், 'ஸன்லைட்' சோப்பு போன்ற அந்நியப் பொருள்களின் விளம்பரங்களை ஏற்கமாட்டார்கள். அந்நியப் பொருள்களை வாங்காதீர்கள், அவற்றைப் புறக்கணியுங்கள் என்பதுதானே காந்தியடிகளின் முக்கிய போதனைகளில் ஒன்று. அப்படியிருக்கத் தீவிர காந்தியவாதிகளான ஜெயபாரதி நிர்வாகிகள் அந்தக் கொள்கைக்கேற்பவே நடப்பார்கள். சொல்லும் செயலும் இயைந்த புண்ணியவான்கள்!

அப்படியென்றால், விளம்பரமே கிட்டத்தட்ட இல்லாமல் ஜெய பாரதி வாழமுடிந்ததா என்று கேட்கக் கூடும். முடியாதுதான். ஆகவே, அதை வேறொரு விதத்தில் ஜெயபாரதி சரிக் கட்டியது.

அதன் விளம்பர மானேஜராக இருந்த கே.பி. மகாதேவன், சென்னையில் தமிழ்நாட்டின் பிற நகரங்களிலும் 1926 காலகட்ட முதலாகவே தோன்றிய பல்வேறு சினிமா ஸ்டூடியோக்களில் நிறைய செல்வாக்குள்ளவராக இருந்தார். சினிமா ஸ்டூடியோக்களே நிறையப் படமெடுத்த காலம் 1930 காலம். ஆகையால் டைரக்டர் கே. சுப்பிரமணியம் சென்னையில் தொடங்கிய மோஷன் பிக்சர் புரொட்யூஸர்ஸ் கம்பைன் ஸ்டூடியோ, கீழ்ப்பாக்கத்தில் டைரக்டர் ஏ. நாராயணனது ஸ்டூடியோ, சேலத்தில் டி.ஆர். சுந்தரம் தொடங்கிய மாடர்ன் தியேட்டர்ஸ் போன்ற அமைப்புகளின் விளம்பரங்களை மகாதேவன் தவறாமல் பெற்றுவிடுவார்.

தவிர, கல்கத்தாவுக்கும் பம்பாய்க்கும் புனே நகருக்கும் சென்று தமிழ்ப் படங்கள் எடுப்பவர்களின் பட விளம்பரங்களும் மகாதேவன் சம்பாதித்து விடுவார். 'சிந்தாமணி', 'சீதா கல்யாணம்', 'பக்த அருணகிரி', 'கவிகாளிதாஸ்', 'சம்பூர்ண ராமாயணம்', 'திகம்பர சாமியார்', 'மேனகா', 'அதிர்ஷ்டம்' போன்ற புகழ்பெற்ற, நெடுங்காலம் ஓடிய படங்களின் விளம்பரங்கள் 'ஜெயபாரதி'யின் பக்கங்களை அலங்கரித்

தன. இப்படியாக, வளரும் பத்திரிகைத் துறைக்கு வளரும் படத் தொழில்துறை கைகொடுத்ததெனலாம்.

பத்திரிகையின் நிர்வாகப் பிரச்சனைகள் நிற்க, ஜெய பாரதியின் பக்கங்களில் வாசகர்களுக்குக் கிடைத்த விஷயங்கள் எத்தகைய தாக இருந்தன என்பதை இனி கவனிக்கலாம்.

## செய்திச் சுருக்கம்

ஜெயபாரதி நாளேட்டில், மற்ற பெரிய நாளேடுகளான 'சுதேச மித்திர'னிலும், 'தினமணி'யிலும் கிடைத்த செய்திகள் அநேகமாக எல்லாமே கிடைத்தன. மற்ற நாளேடுகளில் விவரமாகத் தரப்படும் செய்திகளை - இந்திய நாட்டுச் செய்திகளும் சரி, வெளிநாட்டுச் செய்திகளும் சரி, ஜெயபாரதி ரத்தினச் சுருக்கமாகத் தந்தது. மற்ற நாளேடுகள் போலவே அதுவும், இந்திய நாட்டுச் செய்திகளுக்காக அஸோஸியேட்டட் பிரஸ் என்ற செய்தி நிறுவனத்துக்கும், வெளி நாட்டுச் செய்திகளின் சுருக்கத்துக்காக ராயிட்டர் என்ற பிரிட்டிஷ் செய்தி நிறுவனத்துக்கும் சந்தா கட்டி, செய்திகளைப் பெற்றது. இந்த இரு செய்தி நிறுவனங்களுமே பிரிட்டிஷார் ஆதிக்கத்தில் இருந்த தால், பல சமயம் இந்திய தேசிய இயக்கம் சம்பந்தமான செய்திகள், காந்தியடிகளுக்கும் காங்கிரஸுக்கும் ஆதரவான செய்திகளை அவை இருட்டடிக்கவும் செய்யும்; அல்லது, அலட்சியமாக, இரண்டொரு வரிகளில் முடித்துவிடும்; அல்லது, சற்று நீளமாகத் தரவேண்டி வந் தால்கூட, பிரிட்டிஷ் அரசின் போக்குக்குச் சாதகமான செய்திகளுக்கு முதலிடம் கொடுத்து, காந்தியடிகள், ஜவஹர்லால் நேரு, ஸர்தார் படேல், ராஜேந்திர பிரஸாது, சுபாஷ் சந்திர போஸ், ராஜாஜி போன்ற வர்களின் பேச்சுக் கள், நடவடிக்கைகள் முதலியவற்றை வேகமற்ற உப்புசப்பில்லாத வகையில் தருவார்கள்.

ஆகவே, காங்கிரஸின் ஆண்டுப் பேரவைக் கூட்டங்களில் மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகளின் செயல்பாடுகள், மாவட்டந் தோறு முள்ள உள்ளூர் காங்கிரஸ்காரர்களின் நடவடிக்கைகள் முதலியவற் றின் செய்திகளுக்கு ஜெயபாரதி சொந்த ஏற்பாடு செய்து கொள்ளும். பல காங்கிரஸ் தலைவர்கள் ஆசிரியர் வெங்கட்ட ராமனின் நெருங் கிய நண்பர்களாகவுமிருப்பார்கள். ஆகையால் அடிக்கடி அவர்கள் கடிதமெழுதுவார்கள், செய்தி அனுப்புவார்கள்.

## தேர்தல் மலர்

ஜெயபாரதி காந்திய காங்கிரஸ் மகாசபையை ஆதரித்ததால், 1936-37இல் நடந்த தேர்தல்களின்போது, காங்கிரஸ் வேட்பாளர்கள் அனைவரது பெயர், விலாசம், இதர விவரங்கள், காங்கிரஸில் அவர் வகித்துள்ள பதவிகள், அவரது பிற தொண்டுகள், அவர் நிற்கும் தொகுதி, அவரை எதிர்க்கும் பிற வேட்பாளர்கள் பெயர்கள் - முதலிய விவரங்கள் கொண்ட 4 பக்க சிறப்புத் தேர்தல் மலர் வெளியிட்டுதவியது. காங்கிரஸ் வேட்பாளர்களுக்கு இது மிகவும் உதவியாக இருந்ததென்று பலர் பாராட்டினார்கள்.

## வண்ணப்பெட்டி

1937இல், வாக்காளர்களுக்குக் கட்சி வாரியாக வண்ணப் பெட்டிகள் அளிக்கப்பட்டிருந்தன. காங்கிரஸுக்கு மஞ்சள் பெட்டி கிடைத்தது. காங்கிரஸ் சார்பில் தேர்தல் வேலைகளை மேற்பார்வை செய்துவந்த ராஜாஜி, 'மஞ்சள் பெட்டிக்கு ஜே!' என்ற கோஷத்தை அளித்தார். 'மஞ்சள் பெட்டிக்கு ஜே!' என்ற கோஷம் தென்னாடெங்கும் ஒலித்தது. பொதுக்கூட்டங்களின் முடிவில், 'வந்தே மாதரம்! மகாத்மா காந்திக்கு ஜே!', போன்ற தேசிய முழக்கங்களுடன் 'மஞ்சள் பெட்டிக்கு ஜே!'யும் ஒலித்தது. நாட்டு மக்கள் காங்கிரஸ் வேட்பாளர்களை அபரிமிதமான பெரும்பான்மையுடன் அமோக வெற்றி பெறச் செய்தார்கள். இது பின்னர் சென்னை ராஜதானியில் ராஜாஜி தலைமையில் காங்கிரஸ் மந்திரிசபை அமைவதற்கு வழிவகுத்தது.

## ஜெயபாரதி வாரப் பதிப்பு

இதே 1937 பொதுத்தேர்தலின்போதுதான், மஞ்சள் அட்டையுடன் 'ஜெயபாரதி' வாரப் பதிப்பு தோன்றியது. ஜெயபாரதி வாரப் பதிப்பு ஓராண்டுகூட நடக்கவில்லை. இத்தாலிய சர்வாதிகாரி முஸோலினி ஆப்பிரிக்காவில் எதியோப்பியா என்ற புராதனமான நாட்டின்மீது படையெடுத்துச் சென்று, வெடிகுண்டுகளால் படுநாசம் விளைவித்து, ஆயுதபலமற்ற அந்த நாட்டைப் பிடித்துக் கொண்டான். பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா, ரஷ்யா முதலிய வல்லரசுகள் அப்போதிருந்த சர்வதேச சங்கத்தில் பேசிப் பேசி மாய்ந்தனவே தவிர இத்தாலியின் ஆக்கிரமிப்பை ஒழிக்கவோ அது வாபஸ் வாங்கிச்

செல்லும்படி செய்யவோ முடியவில்லை. சர்வாதிகாரக் கும்பலில் மூத்தவர் முஸ்ஸோலினி; இளையவர் ஜெர்மனியில் ஹிட்லர். ஸ்பெயி னின் தலைவர் பிராங்கோ, ஜப்பான் சக்கரவர்த்திகளை ஆட்டி வைத்த தளபதி டோஜோ - இன்னும் பல ஜனநாயக விரோதிகளும் இருந்த னர். இவர்கள் மகிழ்ந்தனர்; இரண்டாவது உலக மகா யுத்தமும் நெருங்கியது!

## சிறுகதை

ஜெயபாரதியும் சரி, ஜெயபாரதி வாரப் பதிப்பும் சரி, அரசியல் மட்டும் தரவில்லை. சிறுகதைகள் நாளேட்டிலும் வெளிவந்தன; சிறந்த கதாசிரியர்கள் எழுதினார்கள். கு.ப.ரா., ந. பிச்சமூர்த்தி, பி.ஆர்.எஸ். கோபால் முதலியவர்களது கதைகள் வந்தன.

## கவிதை

கவிதையில் புதுத் தடம் நாட்டிய ந. பிச்சமூர்த்தி முதலியவர் களது புதுக் கவிதை (அக்காலத்தில் அவற்றை 'வசன கவிதை' என்று அழைத்தார்கள்) ஜெயபாரதி வாரப் பதிப்பில் வெளியிட்ட பெருமை எனக்கிருந்தது. 'மார்கழிப் பெருமை' என்ற புகழ் பெற்ற பிச்சமூர்த்தி வசன கவிதை ஜெயபாரதி வாரப் பதிப்பில் 1936இல் வெளிவந்தது. ஆதிகால வசன கவிதைகளில் இது ஒன்று.

ஜெயபாரதி வாரப் பதிப்பில், 1936 இல் வ.உ.சியின் மறை வையும், அவரது வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரையையும் வெளியிட் டோம். வாரப்பதிப்பின் முதல் மூன்று இதழ்களுக்கு தி.ஜ.ர. (திங்க ளூர் ஜகத்ரக்ஷக ஐயங்கார் குமாரர் ரங்கநாதன்) பொறுப்பாசிரியராக இருந்தார். அதன்பின், அவர் டாக்டர் வரதராஜுலு நாயுடுவின் 'தமிழ்நாடு' நாளேட்டில் ஆசிரியராகச் சேர்ந்த திங்களூர் வ.ரா. (வராக ஐயங்கார் குமாரர் ராமஸ்வாமி)யின் கீழ் பணி செய்யப் போய் விட்டார். ஏற்கெனவே 1933முதல் 36 வரை, ஆனந்த விகடன் வாரப் பதிப்பில் உதவியாசிரியனாகப் பணி புரிந்துள்ள நான், ஜெயபாரதி வாரப் பதிப்பின் பொறுப்பாசிரியர் ஆனேன். என் பங்குக்கு, நிறைய கதைகள், கட்டுரைகள் நகைச்சுவைக் கட்டுரைகள் கொண்ட நல்ல குடும்பப் பத்திரிகையாக ஜெயபாரதி வாரப் பதிப்பு விளங்கியது.

## நகைச்சுவைக் கட்டுரைகள்

ஆரம்பத்தில் ஆங்கிலத்தில் மட்டும் நகைச்சுவைக் கட்டுரைகளை எழுதிவந்த எஸ்.வி.வி. (எஸ்.வி. விஜயராகவாச்சாரியார்; திருவண்ணாமலையில் வசித்த வக்கீல்), பிறகு 1933 முதல், ஆனந்த விகடன் ஆசிரியர் 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தியின் தூண்டுதலின் பேரில், தமிழிலேயே கதை, கட்டுரைகள் எழுதித் தமிழகத்தைச் சிரிக்க வைத்துக் கொண்டிருந்தார். எஸ்.வி.வி.யின் ஆரம்பகால ஆங்கிலக் கட்டுரைகளும் நமது அன்றாட வாழ்க்கையின் நகைச்சுவை மிக்க சம்பவங்களை வர்ணித்து மகிழ்வித்தபடியால், அவருடைய அனுமதி பெற்று, அவருடைய ஆங்கிலக் கட்டுரைகள் சிலவற்றைத் தமிழாக்கம் செய்து ஜெயபாரதி வாரப் பதிப்பில் வெளியிட்டேன். தமிழாக்கமும் நான் செய்ததுதான். இது எஸ்.வி.வி.யின் பாராட்டையும் பெற்றது தனி மகிழ்ச்சி.

உதாரணமாக, சென்னை கோட்டையில் பணிபுரியும் குமாஸ்தாக்கள் தங்கள் வீடுகளிலிருந்து கோட்டும் வேட்டியும் உப்புமாப் பொட்டலங்களுமாகக் கிளம்பி அலுவலகம் செல்லுவதை எஸ்.வி.வி. மிக்க ரசனையுடன் விவரித்துள்ளார். அலுவலகத்தில் பிற்பகலில் சிற்றுண்டி நேரத்தில், பலர்கூடி அவரவர் பொட்டலங்களைத் திறக்கும் காட்சியும், அப்போது, உப்புமாவின் எண்ணெயெல்லாம், அது கட்டப்பட்டு வந்த நாளேட்டுக் காகிதத்தில் ஊறி, உப்புமாவே நாளேட்டின் அச்சு மைவாடையுடன் இருக்குமென்று ஓரிடத்தில் குறிப்பிடுகிறார்.

## விமோசனம்

மற்றொரு புகழ் பெற்ற பிரமுகரது சிறுகதைகள் சிலவற்றை, அனுமதியுடன் வெளியிடும் பெருமையும் ஜெயபாரதி வாரப் பதிப்புக்கு இருந்தது. சேலம் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் இருந்து கொண்டு, மது விலக்குப் பிரசாரக் கதைகளை 'விமோசனம்' என்ற தமது மாத இதழில் ராஜாஜி எழுதி வந்தார். 1936 இல் ராஜாஜியின் சிறுகதைகள் தொகுக்கப்பட்டு ஒரு நூலாக வெளிவந்தன.

'ராஜாஜி சிறுகதைகள்' என்ற இந்த நூலிலிருந்து, 'முகுந்தன் பறையனான கதை' என்ற சிறந்த சிறுகதையை ஜெயபாரதி வாரப் பதிப்பில் வெளியிட்டேன், அனுமதி பெற்றுத்தான்.

## வேணுகானம்

அந்த சிறுகதைத் தொகுதியின் நீண்ட விமர்சனமும் ஜெயபாரதி நாளேட்டில் வெளிவந்தது. ராஜாஜியின் சிறுகதைகள் நயமிக்கவை. அவைகளைப் பாராட்டியெழுதியதோடு நில்லாமல், அந்தச் சிறுகதைத் தொகுதியில், ராஜாஜி கன்னடத்தில் மாஸ்தி வெங்கடேச ஐயங்காரது 'வேணுகானம்' என்ற அற்புதமான கதையையும் பாராட்டியிருந்தேன். ஆனால் வாசகம் என்னையறியாமல் பின்வருமாறு இருந்தது. 'இந்தச் சிறுகதைத் தொகுதியிலுள்ள சிறுகதைகள் அனைத்திலும் சிறந்தது 'வேணுகானம்' என்ற கதை. ஆனால் இது ராஜாஜி எழுதியதல்ல. கன்னடத்திலிருந்து அவர் மொழி பெயர்த்தது'.

இது அனாவசியமான வம்பு; இளவட்டமான எனக்கு அப்போது ஏதும் தப்பாகத் தோன்றவில்லை. ஆனால், தமது சிறுகதைத் தொகுப்பின் விமர்சனத்தைப் படித்த ராஜாஜி, பாராட்டுகளையெல்லாம் விட்டுவிட்டு, 'விமர்சனத்தை எழுதியது யார்? 'ப' என்று ஓரெழுத்தில் மறைந்திருக்கிறவர் யாரோ?' என்று ஆசிரியர் வெங்கட்ராமனிடம் விசாரித்தாராம்!

## சாரல்

சிறுகதைகள், எஸ்.வி.வி. நகைச்சுவைச் சித்திரங்கள் தவிர, மகாகவி பாரதியாரின் கட்டுரைகள் சிலவற்றையும் ஜெயபாரதி, பழைய சுதேசமித்திரனிலிருந்து தேடி வெளியிட்டது. அவ்வாறு வந்த கட்டுரைகளில் 'சாரல்' என்ற ஒரு அழகான கட்டுரை, வேறு எங்கும் வந்ததில்லை; எனது பிற்காலத்திய நூலான 'பாரதி புதையல் பெருந்திரட்'டில் இதைச் சேர்த்ததே அதன் முதல் நூல் வடிவப் பிரசுரமாகும்.

புத்தக விமர்சனங்கள் தவிர, சினிமா விமர்சனங்களும் ஜெயபாரதி நாளேட்டிலும் வாரப் பதிப்பிலும் வெளிவந்துள்ளன. ச.து.சு. யோகியார் எழுதித் தயாரித்த 'அதிர்ஷ்டம்', 'பக்த அருணகிரி' இரண்டிற்கும் நான் எழுதிய விமர்சனங்கள் இன்னும் மனநிறைவைத் தருபவையாக உள்ளன.

ஜெயபாரதியின் ஆசிரியர் வெங்கட்ராமன் திறன் மிக்க நிர்வாகி. அக்காலத்தில் நடந்த காங்கிரஸ் கைத்தொழில் கண் காட்சிகளின்

மானேஜராக அவர் சிறப்பான பணி புரிந்துள்ளார். டெல்லி ராஜ்ய சபையில் அங்கத்தினராகவும் அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் காமராஜரிடமும் வெங்கட்ராமன் தோளில் கை போட்டுக்கொண்டு பேசுமளவுக்கு நட்புரிமை கொண்டவர்.

ஜெயபாரதி அலுவலகத்திற்கு ஒரு நாள் பகலில் ராஜாஜி வந்தார், ஆசிரியரைப் பார்க்க. ஆசிரியர் வெங்கட்டராமன் எங்கோ வெளியே போயிருந்தார். அதனால், ஆசிரியரது நாற்காலியில் உட்கார்ந்து காத்திருந்தார். அப்போது அச்சகத்திலிருந்து ஒரு வாண்டுப் பயல், உள்ளே வந்து, 'சார், தலையங்கம் வரல்லையே வாங்கிவரச் சொன்னாங்க ஃபோர்மன்' என்று உரத்த குரலில் கேட்டான். அவன் ராஜாஜியை ஆசிரியரென நினைத்து விட்டான் போலும்.

ராஜாஜி உள்ளூரச் சிரித்துக் கொண்டிருப்பார். ஆனால், துளியும் விட்டுக் கொடுக்காமல், 'இன்னும் பத்து நிமிஷத்தில் வா, தருகிறேன்' என்றார். பத்து நிமிஷம் கழித்துப் பையன் வந்தான். அன்றைய செய்திகளைக் கொண்டு தாம் எழுதி வைத்திருந்த தலையங்கத்தை அவனிடம் கொடுத்தார் ராஜாஜி. அவன் எடுத்துச் சென்றான். அன்று மாலை வந்த ஜெயபாரதி நாளேடு ராஜாஜி எழுதிய தலையங்கத்துடன் வெளிவந்தது!

## நிதி நெருக்கடி

'நித்திய கண்டம் பூர்ணாயுசாகத் தீராத பண நெருக்கடியுடன் நடந்து வந்த ஜெயபாரதி நாளேடு தினம் தினம் பல சோதனைகளைச் சந்திக்க நேரிடும். தினம் காலையில் வெளியூர் ஏஜெண்டுகளிடமிருந்து மணியார்டர்கள் வரும். பல ஏஜெண்டுகள் தாங்கள் அனுப்ப வேண்டிய முழுத்தொகை, அது அதிகமில்லையென்றபோதிலும் அனுப்ப மாட்டார்கள்.

ஒரு பிரதி விற்றால் ஏஜெண்டுகளுக்கு கிடைப்பது ஒரு பைசா. ரூபாய்க்கு 192 பைசா இருந்த காலம். ஏஜெண்டு நாள்தோறும் 300 பிரதி விற்றால் கூட, அவரது வருமானம் நாளைக்கு ஒன்றரை ரூபாய் தானே இருக்கும். இந்தக் குறைந்த தொகைக்காக, ஏஜெண்டு வீடு வீடாகப் பத்திரிகையைப் போட்டு வரவும், மாத முடிவில் சந்தா வசூல் செய்யவும் செலவிடும் தொகை கணிசமாக இருக்கும். சைக்கிள்

பையன் சம்பளம், சைக்கிள் செலவு, இவைகளை நினைக்கும் போது, ஜெயபாரதி வருவாய் ஏஜெண்டுக்கும் பெரியதாகத் தோன்றாது. ஆகவே, அதனிடம் அந்த அளவு அலட்சியமும் இருக்கும்!

அலுவலகத்தில், மணியார்டர்கள் வரும் சமயம், வருகின்ற தொகையைப் பகிர்ந்து கொள்ள நாங்கள் காத்திருப்போம். சம்பளத்தை முழுத் தொகையாக வாங்கியறியோம். கிடைத்ததை, ஐந்தோ பத்தோ வாங்கிக் கொள்வோம். திருமணமாகாமல் ஹோட்டல்களை நம்பி வாழும் ஜெயபாரதியின் மானேஜரான டாக்டர் ராமஸ்வாமி என்பவர் அனுதாபத்துடனேயே இருப்பார்; முடிந்த அளவு பெரிய தொகையாகவே தருவார். ஆனால், மாலை வேளை வரும்போது, அதற்கும் ஆபத்து வந்து விடும். நான்கு மணிக்குப் பத்திரிகையின் பிரதிகள் வரும். அதைப் பார்த்துவிட்டுப்போக ஆசிரியக் குழுவினரான நாங்கள் காத்திருப்போம்.

அந்தச் சமயம், தமது மங்காத முறுவலுடன் வருவார் டாக்டர் ராமஸ்வாமி. 'உன்னிடம் தந்த பணத்தைச் செலவு செய்து விட்டாயா? இன்றைக்குப் பத்திரிகைப் பார்ஸல்களை ரயிலில் அனுப்பப் பணம் போதவில்லை. உன்னிடம் இருப்பதைக் கொடு. நாளை நிச்சயம் வாங்கிக் கொள்ளலாம்!' என்பார்.

ஒரு பக்கம் அழுகை வரும்; ஒரு பக்கம் சிரிப்பாக இருக்கும். ஆனால், பத்திரிகை ஏஜெண்டுகளுக்குப் போவதன் முக்கியத்தைக் கருதி, அவரவரிடம் பாக்கியுள்ள பணத்தில் முடிந்ததைக் கொடுப்போம்.

நான் ஜெயபாரதியில் வேலை பார்த்த காலத்தில் நானும் என் தமையனார் 'குண்டூசி' பி.ஆர்.எஸ். கோபாலும், கோமளீசுவரன் பேட்டையில் ஒரு வீட்டில் அறை வைத்துக் கொண்டிருந்தோம். எங்கள் சாப்பாட்டுக்கு ஒரு ஏற்பாடு செய்வோமென்று, அலுவலகத்துக்கு ஒரு யோசனை சொன்னோம்.

ஜெயபாரதியில் விளம்பரம் செய்தவர்களில் ராஜேந்திர பவன் என்ற ஹோட்டல் முதலாளி ஒருவர். அவரிடம் காப்பி டிபனும் சாப்பாடும் இருந்தது. அலுவலகத்திலோ, அவசர நெருக்கடிகளுக்காக, சாப்பாடு எடுத்துவர ஒரு பெரிய 'டிபன் காரியெர்' இருந்தது. அதில்

சாப்பாடு அனுப்பச் சொல்லி ராஜேந்திர பவன் முதலாளிக்குச் சொல்லி விட்டால், விளம்பரச் செலவுக்கு சரியாகுமே. இதை நாங்கள் தெரி வித்தபடி ஏற்றுக் கொண்டார்கள்.

நான் ஜெயபாரதியில் இருந்த காலம் குறைவு. சுமார் எட்டு மாதமே. சம்பளம் மாதம் 32½ ரூபாய். ஆனால், சாப்பாட்டுக்கு ஆன செலவு போக மிச்சம் பணம் பாக்கி இருந்தது. அது வசூலே ஆக வில்லை! ஆனால், இன்றளவும் அதைப் பற்றி வருத்தமில்லை! கொள் கைப் பிடிமானம் உள்ள ஒரு நிறுவனத்தின் நஷ்டத்தில் நமக்கும் பங்கு கிடைத்தது என்றே மகிழ்கிறேன்.

இந்த டிபன் காரியர் சாப்பாட்டில் இன்னொரு சுவையான அம்ச மும் இருந்தது. காரியரில் வரும் சாப்பாடு தாராளமாக இருக்கும்; மூன்று நான்கு ரூபாய்க்குப் போதுமானதாக இருக்கும். ஆகவே, பிறரையும் சாப்பிட அழைப்போம். அக்காலத்தில்தான் விருதுநகரி லிருந்து சென்னை வந்திருந்தவரும், எளிய நிலையில் இருந்தவரும், ஜெயபாரதி அலுவலகத்துக்கு நாள்தோறும் வருபவருமான கு. காம ராஜ் பல தினங்கள் எங்கள் விருந்தினராக உணவு உண்டிருக்கிறார்.

ஜெயபாரதியில் பணிபுரிந்த ஆசிரியக் குழுவினரில் பலர் பிற் காலத்தில் புகழ் மிக்கவர்களாக விளங்கி யிருக்கிறார்கள். ஏ.ஜி. வெங்கடாச்சாரி, பி.எஸ். ராமையா, புதுமைப் பித்தன், வெ. சந்தானம், சி.சு. செல்லப்பா, எனது தமையனார் பி. ஆர். எஸ். கோபால், ராலி (எம்.ஜே. ராமலிங்கம்) முதலியவர்கள் இவர்களில் சிலர். இன்னொ ருவர், பழம்பெரும் பத்திரிகையாளரான காஞ்சிபுரம் வேங்கட ஆர்யா என்பவர்.

நான் ஜெயபாரதியில் 1936ஆம் ஆண்டு சேர்ந்தபோது தோற் றத்தில் முற்காலத்து ரிஷிகள் போல விளங்கிய வேங்கட ஆரியா என்ற முதியவரும் உதவியாசிரியர்களில் ஒருவராக இருந்தார். சின் னாட்களில், உடல் நலமில்லையென விடுப்பில் சென்றார். நீண்ட தாடியுடன், ஷர்ட் அணியாமல், பூப்போட்ட கதர் அங்கவஸ்திரத்தை மேலே போர்த்திக் கொண்டு விளங்கிய அவர் பல வாரங்களாகியும் திரும்பி வரவில்லை.

ஒரு நாள் இரவு மழை பெய்தபோது, சில காகிதக் கட்டுகள் நனையக் கண்டு அவற்றை நகர்த்தி வைத்தோம். அப்போது, 'வேங்கட

ஆரியர்' என்ற பெயர் மேலே எழுதியிருந்த ஒரு காகிதக் கட்டு தென் பட்டது. பத்திரமாக எடுத்து வைத்திருந்தேன்.

ஒரு நாள், ஆர்யா காலமாகி விட்டார் என்ற செய்தி கிடைத்தது. அப்போதுகூட, அவருடைய உறவினர் யாரேனும் வந்தால் தரலாமென்று, அந்தக் கட்டை வைத்திருந்தேன். யாரும் வரவில்லை.

முடிவில் ஒரு நாள் கட்டைப் பிரித்துப் பார்த்தால், புதுவையில் இருந்து வெளிவந்த 'இந்தியா' பத்திரிகையின் ஒரு தொகுதியாக இருக்கக் கண்டு வியந்தேன்.

புதுவையில் மண்டபம் ஸ்ரீநிவாஸாச்சாரியார் நடத்தி வந்த 'இந்தியா' வாரப் பதிப்பில், பாரதியார் பெயரில்லாமல் பொறுப்பாசி ரியரராக வேலை பார்த்தார். அச்சமயம், வேங்கட ஆர்யாவும் அப் பத்திரிகையில் உதவியாசிரியராக இருந்தார்.

மேலும் விசாரித்தபோது, இந்தக் குறிப்பிட்ட 'இந்தியா' தொகுதி, அந்த அலுவலகத்தில் இருந்த தொகுதி என்று தெரிந்தது. அப்படி யென்றால், அது மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியைச் சேர்ந்தது. ஆகவே அவரிடம் கொடுத்து விடுவோம் என்று அவரை அணுகியபோது, அவர் பெருந்தன்மையுடன், 'நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்; பாரதி வாழ்க்கைச் சுவடுகளைத் தேடிவரும் உங்களிடம் இது இருப் பதே சரி!' என்று அத்தொகுதியை என்னிடமே தந்துவிட்டார்!

இந்தத் தொகுதி, தற்சமயம் புதுவையில் பாரதியார் இல்லத் தின் பொறுப்பில் பத்திரமாக உள்ளது. தனி நபரான என்னைவிட, ஒரு பொது நிறுவனமான புதுவை மியூசியம் இதை, காலாகாலம் காக்கும் என்ற நம்பிக்கையில் தந்துள்ளேன். பாரதி வாழ்க்கை வரலாற்றில் என்னைத் தீவிரமாக ஈடுபடச் செய்த பழம் பொருள்களில் இத் தொகுதி முக்கியமானது.

ஜெயபாரதி ஒரு தலை சிறந்த காந்திய தேசிய ஏடு மட்டுமல்ல; உலகச் செய்திகள் அனைத்தையும் சுருக்கமாகத் தந்த நாளேடு மாகும்.

அதன் முக்கிய இலட்சியம் தேசத் தொண்டு ஒன்றே. ஆகவே, எளிமையாக வாழ்ந்து, தன் காலம் முடிந்ததும் மறைந்து போயிற்று. தமிழ் இதழியல் வரலாற்றில் அதற்கு என்றும் தனி இடம் உண்டு.

# ஜோதி

சுடர் 1 மார்ச் 1938 கதிர் 8





## காங்கிரஸ்

ஹரிபுரா காங்கிரஸ் ஒரு பெரிய ஏமாற்றத்தை உண்டுபண்ணிவிட்டது. நமக்கல்ல; ஏகாதிபத்திய தாசர்களுக்கு. இவர்கள் எதிர்பார்த்தார்கள்,

1. ஹரிபுராவில், காங்கிரஸின் 'பழைய நம்பர்'களாகிய காந்தி, பட்டேல் முதலியவர்களுக்கும் அபேதவாதிகளுக்கும் பெரிய 'ரகளை' நடக்குமென்று;

2. காந்தியடிகளின் ஆன்மசக்தி என்கிற உலைக்களத்திலே வார்க்கப்பட்ட சம்மட்டியாக இருந்ததனால்தான் ஜவஹர், அரசியல் பிரச்னைகளைப் பதம் பார்த்து உடைக்கத் தெரிந்து கொண்டார்; ஆனால் போஸோ, வார்ப்படத்திற்குள் சென்று பக்குவப்படாத சம்மட்டி; சிறை வாசமும் அஞ்ஞாத வாசமும் சேர்ந்து இவருக்கும் இந்திய அரசியல் வாழ்வுக்கும் இடையே ஒரு திரையைப் போட்டுவிட்டன. அப்படியிருக்க, அநுபவ சாத்தியமான அரசியல் பிரச்னைகளைச்சொல்லி, இவர் என்ன வழி காட்டப் போகிறாரென்று;

3. பீஹார்—ஐக்கிய மாகாண மந்திரிச் சபைகள் ராஜீநாமா செய்துவிட வேண்டுமா, வேண்டாமா வென்பதைப்பற்றி அபிப்பிராய வேற்றுமை ஏற்பட்டு, காங்கிரஸ் இரண்டு கட்சிகளாகப்பிரிந்து விடுமென்று;

4. காந்தியடிகள் ரத்தக்கொதிப்பினால் தேக நலங் கெட்டிருப்பது காரணமாக அவர் காங்கிரஸுக்கு வந்தாலும், அவர் 'கைவரிசை' அங்கே காண முடியாது. ஆகவே மற்றத் தலைவர்களாகிய சூத்திர பொம்மைகள், சுபாஷ் போஸ் என்கிற சின்ன பொம்மைக்கு முன்னர் எப்படி சும்மா யிருக்கப் போகிறார்களென்று.

ஆனால் ஹரிபுராவில் இந்த ஏகாதிபத்திய உபாசகர்களுடைய எண்ணத்திற்கு மாறாகவே எல்லாம் நடைபெற்றன. 'பழைய பசலி'களுக்கும் 'புதிய வருஷங்க'ளுக்கும் எவ்வித தகராறும் உண்டாகவில்லை. ஒன்றிலே மற்றொன்று—தற்காலிகமாகவாவது—ஐக்கியமாகிவிட்டது. ராஜீநாமா நெருக்கடி, காங்கிரஸை ஒன்று சேர்த்து இழுத்துச் செல்லும் ஒரு வடக் கயிறு மாதிரியாகி விட்டது. ஸ்ரீ போஸ், விசுவ திருஷ்டியில் இந்தியாவை வைத்துக் காட்டி, நமது கடமைகளை நினைவூட்டி, தேசத்தை வருங்காலத்

# ஜோதி

## பெ. சிவசக்தி

### இதழியல் பணி

சாமிநாத சர்மாவின் தமிழ்த் தொண்டுகளுள் முதன்மையாகக் குறிப்பிடத்தக்கது அவருடைய இதழியல் தொண்டாகும். இதழியலின் பல்வேறு நுட்பங்கள் புலனாகும் வண்ணம் அவர் வெளியிட்ட இதழ்கள் அமைந்துள்ளன. ஆசிரியராகவும், உதவியாசிரியராகவும் இருந்து அவர் பெற்ற அனுபவங்களை இதழியல் துறைக்கு அளித்து வளம் பெறச்செய்தார்.

'தேசபக்தன்', 'நவசக்தி', 'குமரிமலர்', 'சக்தி' போன்ற இதழ்களில் பல புனைபெயர்களில் பல அரிய கட்டுரைகளை எழுதியுள்ளார். 'ஜோதி'யில் ஐம்பதிற்கும் மேற்பட்ட புனைபெயர்களில் நூற்றுக்கணக்கான கட்டுரைகளை எழுதியுள்ளார்.

அவர் இதழாசிரியராகப் பணிபுரிந்த விபரம் வருமாறு:

| எண் | இதழின் பெயர் | பணியாற்றிய காலம் | பொறுப்பு |
|---|---|---|---|
| 1. | தேசபக்தன் (நாளிதழ்) | டிசம்பர் 1917 முதல் 1920 அக்டோபர் வரை | உதவி ஆசிரியர் |
| 2. | நவசக்தி (நாளிதழ்) | அக்டோபர் 1920 முதல் பிப்ரவரி 1932 | உதவி ஆசிரியர் |
| 3. | சுயராஜ்யா | 1924 முதல் 1926 வரை | உதவி ஆசிரியர் |
| 4. | ஜோதி (மாத இதழ்) | 1937 ஆகஸ்டு முதல் 1942 பிப்ரவரி வரை | ஆசிரியர் |

5. குமரி மலர் (மாத இதழ்) 1945 முதல் 1946 வரை பதிப்பாசிரியர்

இந்தியாவில் பிறந்த அனைவரும் இந்தியரே என்ற ஒருமைப் பாட்டு உணர்வை வளர்க்கவேண்டும் என்ற நல்லெண்ணம் திரு.வி.க. வுக்குத் தோன்றியது. சுப்பராய சாமத் என்பவர் திரு.வி.க.வின் எண்ணத்தை வளர்த்தார். அன்னிபெசன்ட் அம்மையாரின் உதவியுடன் தமிழ் நாளிதழ் ஒன்று தொடங்க அவர் துணையானார். 7.12.1917 இல் 'தேசபக்தன்' இதழாசிரியரானார். அன்றையிலிருந்து சர்மாவும் தேசபக்தனில் உதவியாசிரியராகப் பணிபுரிந்தார். தேசபக்தனில் இரு வேறு காலகட்டங்களில் பணியாற்றியுள்ளார். திரு.வி.க., வ.வே.சு. ஆகிய இருவரின் காலத்திலும் பணியாற்றியுள்ளது குறிப்பிடத் தக்கது. 1920 அக்டோபர் முதல் 1932 பிப்ரவரி வரை 'நவசக்தி' இதழில் உதவியாசிரியராக இருந்தார். இவ்விரண்டு நாளிதழ்களிலும் பல புனைபெயர்களில் கட்டுரைகளையும் கதைகளையும் எழுதியிருக்கிறார்.

பல்வேறுபட்ட நாளிதழ்களில் பணியாற்றிய சர்மா பண்டித ஜவஹர்லால் நேருவின் வாழ்த்துக்களுடன் 'ஜோதி' என்ற மாத இதழை 1937இல் தொடங்கினார். இந்த இதழ் பர்மாவிலிருந்து வெளிவந்தது என்பதும் குறிப்பிடத்தக்கது. இதில் பல புனைபெயர்களில் பல்வேறு துறைகளில் சிறந்த கட்டுரைகளைப் படைத்துள்ளது சிறப்புடைத்து. அந்தந்தத் துறைக்கேற்றவாறு தன்னுடைய புனைபெயரை அமைத்துக் கொண்டது எண்ணுதற்குரியது. காட்டாக அறிவியல் செய்திகளை 'விஞ்ஞான போதகர்' என்ற புனை பெயரிலும் அரசியல் கட்டுரைகளை 'அரசியல் மாணாக்கன்' என்ற பெயரிலும், வரலாற்று நிகழ்ச்சிகளை 'சரித்திரக்காரன்' என்ற பெயரிலும் எழுதி உள்ளார்.

மற்ற இதழ்களில் துணை ஆசிரியராக இருந்த சர்மா தானே முழுப் பொறுப்பேற்று ஜோதியை நடத்தினார். இருபத்தைந்து துறைகளில் இவருடைய கட்டுரைகள் காணப்படுகின்றன. மேலும் பல நுட்பமான தெரியாத செய்திகளைக் குறிப்புக்களாகக் கொடுத்துள்ளார். அன்றைய அரசியல் நிலையைத் தெளிவாகப் பல கட்டுரைகள் மூலமாகவும் விளக்கி உள்ளார். வெளியில் நடக்கும் அரசியல் செய்திகளைப் படித்தவர்களும், மற்றவர்களும் புரிந்து கொள்ளும் வண்ணம் 'உலகத்திலே என்ன நடக்கிறது' என்ற தலைப்பில் நகைச்சுவைச் சித்திரங்க

ளாகவும் கருத்துப் படங்களாகவும் வரைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இன்றைக்கு, படித்த படிப்பினால் பயன் இல்லாமல் பணி தேடி அலையும் இளைஞர்களை மனத்தில் கொண்டு அன்றே ஆசிரியர் சித்திரம் தீட்டியுள்ளது சிந்தித்தற்குரியது. கல்வி என்பது வாழ்க்கையோடு தொடர்புடையதாய், பயன்படுவதாய் இருக்க வேண்டுமென்பது சர்மாவின் எண்ணம். இதையெல்லாம் நினைவில் கொண்டு இளைஞர்களுக்கு ஜோதியில் பல சிறந்த கட்டுரைகளை எழுதி உள்ளார்.

## ஜோதி

1937 ஆகஸ்டில் சாமிந த சர்மாவை ஆசிரியராகக் கொண்டு ஜோதி தொடங்கப்பட்டது. ஒவ்வொரு இதழும் நூறு பக்கங்களுக்கு குறையாமல் உள்ளது. அனைத்துக் கட்டுரைகளும் தமிழில்தான் உருவம் பெற்றுள்ளன. இதழ்கள் 1, 2, 3 என்ற வரிசையில் உள்ளன. பக்க எண்கள் ஒவ்வொரு இதழுக்கும் தனியாக உள்ளன. முதற் பக்கத்தில் தலையங்கமும் அதனோடு தொடர்புடைய செய்திகளும் தொடர்ந்து காணப்படுகின்றன. ஆசிரியர் ஐம்பதிற்கும் மேற்பட்ட புனைபெயர்களில் கட்டுரைகள் எழுதி உள்ளார்.

## ஜோதியின் குறிக்கோளும் பணியும்

அறிவியல் ஆராய்ச்சியின் விளைவாகக் காலத்தாலும், இடத்தாலும் சுருங்கிக் கொண்டு வருகின்ற உ லகத்தோடு தமிழர்கள் ஒட்டி வாழவும், அவர்களுக்கு வீழ்ச்சி வராமல் தடுப்பதுமே ஜோதியின் பணியாகும்.

பல நாட்டுக் காவியங்களையும் தமிழர்களுக்கு அறிமுகப் படுத்துகின்றார். அறிவியல் துறைகளிலும் தமிழர்கள் ஆழ்ந்து ஈடுபடல் வேண்டும் என்ற எண்ணத்தினர். தமிழர்கள் பல்வேறு துறைகளிலும் உள்ள நல்லனவற்றையெல்லாம் திரட்டி தமிழ்த்தாயின் திருவடிகளில் வைக்க வேண்டும். பிறர்க்கு வழிகாட்ட வேண்டும் என்பன ஆசிரியரின் கனவும் மாறாத குறிக்கோளுமாகும்.

ஜோதிக்கு நிற, சமூக, சமய வேற்றுமை கிடையாது, உலக சகோதரத்துவத்திலே அதற்கு முழுமையான நம்பிக்கை உண்டு. சகோதரத்துவத்தைத் தேசீயக் கண்கொண்டு தான் பார்க்கும் இத்

தகைய குறிக்கோளுடன் ஜோதியை அன்னையின் பாதக் கமலங் களில் ஏற்றி வைக்கிறோம் என்றும் கூறுகிறார்.

ஜோதியின் தலையங்கத்தில் இதழ் ஏற்பட்டதன் நோக்கத்தை விரித்துரைப்பார். இதைத் தெளிவான முறையில் எளியநடையில் பின்வருமாறு எடுத்துரைப்பர் :

> 'ஜோதி' இறந்த காலத்தோடு நிகழ்கால ்‌ ்தப் பிணைக்குஞ் சங்கிலி; நிகழ்காலத்திலிருந்து வருங்காலத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும் ஏணி; உலக வீரர்களின் யுத்த மேடை; காவிய ரசிகர்களின் உத்தியான வனம்; உலகத்தாரேரோடு நம்மை ஒப்பிட்டுக் காட்டும் தராசு: முன்னேற்ற வழிகளையெல்லாம் சுட்டிக் காட்டும் கலங்கரை விளக்கம்.

என்று சர்மா கூறுவது எண்ணுதற்குரியது.

## தலையங்கம்

'தலையங்கம்' என்பது இதழின் உடலும் உயிரும் ஆகும். இதழில் உள்ள செய்திகளில் பிழிவான கருத்துக்கள் இடம் பெறும் பகுதி அது. இதழாசிரியர் பிரச்சினைகளை ஆராய்வதுடன் நில்லாமல் தெளிவாக, துணிவாகப் பயன் விளையும் வகையில் தமது கருத்தினை வெளியிடல் வேண்டும். தலையங்கம் என்பது செய்தி ஒன்றினைப் பற்றி எழுதப் படும் கருத்துக் கோவை. வாசகர்களுக்கு அது பற்றித் தெளிவான போக்கு ஏற்படும்படி எழுதப்படுவது. அது உண்மைகளையொட்டி ஆசிரியரின் கருத்தைக் கொண்டு அமைவது. ஆசிரியர் கருத்து சில நாட்களிலோ அல்லது சிறிது காலம் கழித்தோ நடைமுறைக்கு உகந்ததாக இருப்பதை வாசகர்கள் உணரச் செய்வது. நாட்டினை ஆளுவோர் அல்லது நிறுவனங்களோடு தொடர்புடையவர்கள், பத்திரிகையின் கருத்து என்ன என்று ஆர்வத்தோடும் கவலையோ டும் எதிர்பார்க்கும் பகுதி.

## ஜோதியில் தலையங்க முகப்பு

சில இதழ்கள் அதனுடைய குறிக்கோளைக் கவிதையாகவோ, உரைநடையாகவோ முகப்பில் தருகின்றனர். இத்தலையங்க முகப்பு அவ்விதழ்களின் கொள்கைகளைக் கூறுவதாகவோ, எதிர்காலப்

பணியினைப் பற்றிக் கூறுவதாகவோ அமைகின்றது. ஒரு சில இதழ்கள் முன்னோர் மொழிந்த பொன்மொழிகளையோ உள்ளத்தைத் தொடும் கவிதை வரிகளையோ தலையங்க முகப்பாகத் தருகின்றன.

ஜோதியின் தலையங்க முகப்பே அதன் சிறந்த பண்பினைச் சுட்டுகின்றது. தலையங்கப் பகுதியில் பாரதமாதா உலக உருண்டையின் மீது அமர்ந்திருக்கின்றாள். கையிலுள்ள கொடியில் 'நமது நியாய சபை' என்று எழுதப்பட்டுள்ளது. இதிலிருந்தே ஜோதியின் பணி எப்படி இருக்கும் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது. தலையங்கத்தைச் சர்மா 'நமது நியாய சபை' என்று குறிப்பிட்டிருப்பது அவருடைய நடுநிலை இதழியல் அற உணர்வைக் காட்டும்.

## தலையங்கமும் தலையங்கப் படைப்பாளனும்

தலையங்கம் என்பது சமுதாயத்தில் நடைபெற்ற அல்லது நடைபெறுகின்ற நிகழ்ச்சியைப் பற்றியோ செய்தியினைப் பற்றியோ, இதழாசிரியராலோ அவர்தம் பொறுப்பில் உள்ளவராலோ எழுதப்படும் ஒரு பகுதி.

தலையங்கத்தை மூன்று பகுதியாகப் பிரிக்கலாம். முதல் பகுதி தலையங்கப் பொருள் என்பதாம். இப்பகுதியில் தலையங்கக் கரு என்னவென்பது மிகச் சுருக்கமாக அமையும். இரண்டாம் பகுதியாகிய ஆய்வுப்பகுதி அல்லது விளக்கப்பகுதியில் கருப் பொருளைப் பற்றிய விரிவான திறனாய்வு இடம் பெறும். கருப்பொருளின் நன்மை தீமைகளை நடுநிலை நின்று ஒட்டியும் விளக்கியும் விருப்பு வெறுப்பின்றி ஆராய்வார் ஆசிரியர். இப்பகுதியில் ஆய்வுப் பகுதியின் திறனாய்வு அடிப்படையில் ஆசிரியர் தமது எண்ணத்தையோ மக்களின் எண்ணத்தையோ எழுதுவார்.

சர்மாவும் இவ்வரையறைகளைப் பின்பற்றி 'ஜோதி' இதழில் பல சிறந்த தலையங்கங்களைத் தீட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது. சில சான்றுகள் வருமாறு :

## தேசிய கீதம்

இஸ்லாமியர்கள் தேசீய கீதத்தைப் பாட மறுத்து விட்டனர். இதைக் கண்டித்து 1937 நவம்பர் இதழில் தேசீய கீதத்தைப் பற்றித் தலையங்கம் எழுதுவது குறிப்பிடத்தக்கது.

முதலில் தேசீய கீதத்தின் பொருளையும் சிறப்பையும் விளக்க, ஒவ்வொரு நாட்டின் தேசீய கீதம் எப்போது உண்டானது? அதன் பொருள் யாது? என்பனவற்றை விளக்கி நம்முடைய தேசீய கீதத்தின் சிறப்பைக் கூறியுள்ளார். இந்தச் சிக்கலான நிலையை நல்ல முறையில் தெளிவாக விளக்கித் தலையங்கம் எழுதி உள்ளார். இந்தத் தலையங்கத்தில், தலையங்கத்தின் மூன்று நிலைகளும் பொருந்தி வருவதைக் காணமுடிகின்றது.

இப்படி ஒரு கருத்து பற்றித் தொடர்ந்து தலையங்கம் எழுதும் போது வாதத்திற்குரிய கருத்துக்களையெல்லாம் ஒரே தலையங்கத்தில் கொட்டி விடுவதும், மீண்டும் மீண்டும் எழுதும்போது சென்ற தலையங்கத்தில் குறிப்பிட்டிருந்தபடி என்று அத்தலையங்கத்தின் சில பகுதிகளை மீண்டும் எழுதுவதும், எழுதுவோரின் எண்ண வறுமையை வெளிப்படுத்திவிடும். அதனால், தேவையான அளவுக்குச் செய்திகளைத் துணையாக்கிக் கொண்டு அத்தலையங்கம் எவ்வாறு வரவேற்பினைப் பெறுகின்றது என்பதையும் கண்டு எழுதுவது அத்துறையில் வல்லாரது இயல்பாகும். சர்மா 'தேசீய கீதம்' குறித்தெழுந்த சிக்கலைப் பற்றித் தொடர்ந்து அடுத்த இதழிலும் (ஜோதியில்) தலையங்கம் எழுதியுள்ளார். படிப்பவர்களுக்கு வெறுப்பு ஏற்படாவண்ணம் முதலில் எதனால் இச்சிக்கல் எழுந்ததென்பதைக் கூறி, பின் ஒவ்வொரு நாட்டின் 'தேசீய கீதம்' உண்டான முறை, நாள், அவற்றில் காணப்படும் பொருள் குறித்து விளக்கிக்காட்டி இறுதியில் நம்நாட்டுத் தேசீய கீதத்தின் சிறப்பைக் கூறுவது சிறப்புடையது.

நாடு சுதந்திரம் அடையாதிருந்த நிலையில் நமக்குள் ஒற்றுமை அவசியம் வேண்டும் என்பதை வலியுறுத்துவர். நமக்கென்று ஒரு தேசீய கீதம் ஏற்படும் வரை பழைய கீதத்தின் முதலிரண்டடிகளைப் பாடுதல் நலம் என்று தலையங்கத்தை முடிப்பது எண்ணுதற்குரியது.

'இந்தியாவெங்கணும் ஒரே குரலில் இந்தக் கீதம் ஒலிக்க வேண்டுமென்பது நமது விருப்பம். சுயமரியாதை உடையவர்கள்தான் பிறரிடமிருந்து மரியாதை பெற முடியும். அதைப்போல நமது தேசீய கீதத்தை நாம் கௌரவித்தால்தான், பிறர் அதற்கு மரியாதை செலுத்துவர். இந்த முதல் இரண்டடிகளைத் தேசீய கீதமாக ஏற்றுக் கொள்வதில் நமது முஸ்லீம் சகோதரர்களுக்கு எவ்வித ஆட்சேபமும் இரா

தென்று நம்புகிறோம்' என்று தம்முடைய கருத்தினை எளிமையாக, ஆனால் ஏற்றுக் கொள்ளத்தக்க முறையில் கூறுவது சிறப்புடைய தாகும்.

## சுதந்திரம் பற்றிய சிந்தனைகள்

பெரும்பாலும் நாட்டின் சுதந்திரத்தினை அடிப்படையாக வைத்தே தலையங்கங்களை எழுதியுள்ளார். அப்படி எழுதும்போது சுதந்திரம் குறித்தும், அதில் கட்சிகளின் பங்கு என்ன என்பது குறித்தும் மக் களைச் சிந்திக்கச் செய்கிறார்.

சுதந்திரத்தைப் பற்றிச் சிந்திக்காமல் இருக்கும் மக்களுக்குச் சாட்டையடி கொடுத்து எழுப்புகிறார். எண்ணம் என்றால் என்ன? புரட்சி என்றால் என்ன? பலவித புரட்சிகள் உண்டான முறை, அதனால் ஏற் பட்ட மாற்றங்கள் ஆகியன குறித்து எழுதி நம்மை விழிப்படையச் செய்கிற ஆசிரியரின் தலையங்கங்கள் குறிப்பிடத்தக்கன.

இன்றைய இளைஞர்களின் எண்ணத்தினை எப்படியெல்லாம் உருவாக்கி வளப்படுத்த வேண்டும் என்பது குறித்துப் பல்வேறு அறிஞர்கள் இன்று எழுதி வருகின்றனர். அது பாடமாக வைக்கப் பட்டுள்ளது. இத்தகைய கருத்தினை ஏறத்தாழப் பல ஆண்டுகளுக்கு முன்னரேயே ஜோதி இதழில் சர்மா கூறியிருப்பது குறிப்பிடத் தக்கது.

நாடு விடுதலை பெற்று அனைத்து நிலைகளிலும் முன்னேற வேண்டும் என்பது சர்மாவின் எண்ணம். அந்த விடுதலையைப் பெற மக்கள் தங்களின் எண்ணத்தினை எப்படியெல்லாம் வளர்க்க வேண்டும் என்பது குறித்து விரிவாகவும், விளக்கமாகவும் எழுது கிறார்.

இத்தலையங்கம் எழுதக்காரணம் மாறுபட்ட தீர்மானங்கள்தான். அத்தீர்மானங்களைப் பற்றி ஆசிரியர் கூறுவதாவது :

'மகத்தான பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தோடு இருப்பதா, இறப் பதா என்று போராடிக் கொண்டிருக்கிற நாம், இன்று ஓரிடத்திலே தீர்மானங்களை நிறைவேற்றுகிறோம். ஆனால் நாம் இப்பொழுது போராட்டத்திற்குத் தயாராயில்லையென்று மற்றோரிடத்தில் கூறு கிறோம். இதனால் நமது நிலை இன்னதென்று தெரியாத ஒரு

திகைப்பு ஏற்படுகிறது. இதற்குக் காரணம், நமது மனப்பான்மையி லுள்ள கோளாறுதான். இதனாலேயே, இந்த மனப்பான்மை மாற வேண்டுமென்று கூறுகிறோம். எண்ணத்தில் புரட்சி ஏற்பட வேண்டு மென்று சொல்வதெல்லாம் இதுதான்' என்று எண்ணங்கள் பற்றி அவர் எடுத்துரைக்கும் கருத்து இன்றைக்கும் மட்டுமல்ல - என்றைக் கும் பொருந்துவதாக உள்ளது. எண்ணந்தான் மனித சக்திகளின் ஊற்று; காரிய சாதனையின் விளைநிலன்; லட்சியத்திலே நம்மைக் கொண்டு சேர்ப்பிக்கிற கைகாட்டி மரம். ஆகவே, முதலில் நாம் எண்ண வேண்டும்; அந்த எண்ணம் வலுவடைந்து அதில் நமக்கு நம்பிக்கை எழ வேண்டும். அந்த நம்பிக்கை, தானாகவே, நம்மை ஒரு காரியத் தில் இறங்குமாறு அழைத்துக் கொண்டு போகும். இறங்குகிற காரி யத்தில் வெற்றி ஏற்படுமா, தோல்வியுண்டாகுமாவென்ற கேள்வி அப்புறமிருக்கட்டும், காரியத்தைச் செய்ய வேண்டியதுதான் நமது கடமை. அதன் பலாபலனைப் பற்றிக் கவலைப்பட நமக்கு உரிமை யில்லை. கர்மக்ஷேத்திரத்திலே பிரவேசித்து அங்கு வெற்றி காண விரும்புகிற ஒரு தனி மனிதனுக்கே, சிந்தனா சக்தி மிகவும் அவசிய மாயிருக்கிறபோது. சுதந்திரமில்லாத ஒரு தேசத்திற்குச் சிந்தனா சக்தி எவ்வளவு அவசியமானது என்பதை நாம் சொல்லத் தேவை யில்லை.

நமக்கு இன்னும் சுயமாக எண்ணுந்திறனே ஏற்படவில்லையென் பதற்கு அத்தாட்சி, இன்னும் நாம் அந்நிய ஆதிக்கத்தின் கீழ் இருப் பதுதான். நாம் எண்ணுகிறோம்; நமக்குச் சிந்தனையில்லாமலில்லை. எண்ணுவதும் சிந்திப்பதும்தான் நமது பரம்பரைச் சொத்துக்களா யிற்றே. எண்ண வேண்டும் என்று சொன்னால் முற்போக்கான எண் ணங்களை எண்ண வேண்டுமென்பதுதான் பொருள். எதற்காக இவ் வளவு தூரம் கூறுகிறோம்? நமது எண்ணத்திலே புரட்சி ஏற்பட வேண்டுமென்பதற்குத்தான்.

## புரட்சி

புரட்சி என்று சொல்லக் கேட்டவுடன், சிலருக்கு ஆயுதமலை, ரத்த ஆறு, போல்ஷ்வெஸம் முதலிய கனவுகள் தோன்றி அவர்களை அலைக்கழிக்கின்றன; பாவம்; இப்படிப்பட்டவர்கள் நமது இரக்கத் துக்குத்தான் உரியவர்கள். ஒவ்வொரு நாளும், நமது தனிப்பட்ட வாழ்க்கையிலாகட்டும், நமது குடும்ப வாழ்க்கையிலாகட்டும்,

நமது சமுதாய வாழ்க்கையிலாகட்டும் எத்தனையோ புரட்சிகள் நடை பெற்றுக் கொண்டுதான் வருகின்றன. இவைகளை நாம் அனுபவித்து விடுகிறோம். கண்ணால் காண்பதில்லை. இதனால் இவை நமக்குப் புரட்சிகளாகத் தோன்றுவதில்லை.

புரட்சி என்றால் என்ன? புரளுதல். ஒரு நிலையினின்று மற்றொரு நிலைக்கு மாறுதல் என்று அர்த்தம். அரசியலில் மாறுதல் வேண்டுகிறபோது புரட்சி என்று சொல்கிறோம். கலை வளர்ச்சி சம்பந்தப்பட்ட மாறுதலை மறுமலர்ச்சியென்கிறோம். விஞ்ஞானத்தைப் பொறுத்த மாற்றத்தை ஆராய்ச்சி என்றோம். ஆக எல்லாம் புரட்சிதான்.

மனிதர்களெல்லாரும் மனிதத் தன்மையோடு நடக்க வேண்டும் அப்படியானால் அந்த மனிதர்கள் வசிக்கும் சமுதாயமானது ஒழுங்காக இயங்குதல் வேண்டும். சமுதாய ஒழுங்குக்கு உதவிடச் சுதந்திரம் இன்றியமையாதது. எனவே அரசியல் சுதந்திரமே நமது இலட்சியமல்ல. இலட்சியத்தையடைவதற்குரிய மார்க்கங்கள் தான். ஒழுங்கான சமுதாயத்தை அமைத்துக் கொள்வதற்குத்தான் நாம் அரசியல் சுதந்திரம் வேண்டுகிறோம். பின்னதை அடையாவிட்டால் முன்னதை அடைய முடியாது.

தற்போதைய அரசியலைப் பற்றியும் சமுதாயத்தைப் பற்றியும் நாம் கொண்டிருக்கின்ற எண்ணத்தில் புரட்சி ஏற்பட வேண்டும். இருப்பதைச் சீர்திருத்த வேண்டுமென்ற எண்ணந்தான் இப்பொழுது இந்தியாவில் பெரும்பாலும் குடி கொண்டிருக்கிறதே தவிர இருப்பதை மாற்றியமைக்க வேண்டுமென்று எண்ணம் இன்னும் உண்டாகவில்லை.

## மதம்

இதே பகுதியில் தொடர்ந்து மதம் என்பது பற்றியும் எந்த வகையில் அது மனிதன் வளர்வதற்கும், அழிவதற்கும் காரணமாயிருந்ததென்பது குறித்தும் விளக்கியுள்ளார்.

அத்தோடு பிணைந்து இருக்கிற இந்த மனப்பான்மை இந்தியா மட்டிலுமல்ல, மற்ற நாடுகளிலும் உண்டு என்று கூறி, ஐரோப்பாவில் கி.பி.16ஆவது நூற்றாண்டு வரை மதம் பெற்றிருந்த செல்வாக்கினையும் எடுத்துரைத்துள்ள விதம் குறிப்பிடத்தக்கது.

மதமோ, சாதியோ நாட்டின் சுதந்திரத்திற்குத் தடையாயிருக்கக் கூடாதென்பது சர்மாவின் எண்ணமாகும். இக்கருத்தினை வலியுறுத் திச் சர்மா எழுதியதாவது :

> கடவுட் பக்தியோ, மதப்பற்றோ நமது பார்வையை மறைத்து விடக் கூடாதென்பதுதான் நமது கட்சி. மதம், மனிதனுடைய சொந்த விஷயம். ஆத்ம சாந்திக்காகவோ, மனத் திருப்திக்கா கவோ ஒருவன் மதம் சம்மந்தப்பட்டமட்டில் எப்படி வேண்டுமா னாலும் நடந்து கொள்ளட்டும். அதைப்பற்றி யாருக்கும் எந்த விதமான ஆட்சேபமும் இருக்க முடியாது. ஆனால் மதத்தை அரசியலிலே கொண்டு புகுத்தி, அதன் விளைவாகச் சமுதாய மானது பண்பட்ட பாதையில் செல்லவொட்டாதபடி தகைந்து விடக்கூடாதென்றுதான் நாம் கூறுகிறோம்.

என்று மதம் பற்றி ஆசிரியர் கூறும் கருத்தானது அனைவராலும் சிந்திக்கப்பட வேண்டியதாகும்.

'நானூறு வருடங்களுக்கு முன் ஐரோப்பா இருந்த நிலையில் இப்பொழுது இந்த இருபதாவது நூற்றாண்டில் நாம் இருக்கிறோம். அந்தோ! நாம் எவ்வளவு வேகமாக முன்னேற வேண்டியிருக்கிறது.

தெய்வத் திருவருள்தான், இந்தியாவையும், இங்கிலாந்தையும் ஒன்று கூட்டுவித்தது என்ற கொள்கையில் நமக்கு நம்பிக்கை யில்லை. அப்படியே, இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு அந்தத் தெய்வத்திருவருளின் துணைதான் தேவை என்ற நம்பிக்கையிலும் நமக்கு நம்பிக்கையில்லை. நமது முயற்சியிலேதான் நமது விடு தலை இருக்கிறது. அப்படி முயற்சி செய்வதற்கு முன்னர் சரியான அஸ்திவாரம் போடவேண்டும். அதுவே நமது எண்ணத்திலே மாற்றம் புரட்சி என உணர்த்துகிறது' என்று தலையங்கத்தினை முடிப்பது அவருடைய எண்ண ஓட்டத்தினைக் காட்டும்.

'சுதந்திரம் என்ற சங்கைத்தான் ஜோதி சதா ஊதிக் கொண்டி ருக்கும்' என்று கூறியவர், அந்தச் சுதந்திரம் பற்றி மக்களின் எண் ணம், சிந்தனை எப்படி இருக்க வேண்டும் என்று கூறி, புரட்சி குறித் துச் சிந்திக்கத் தூண்டுகிறார்.

## தலையங்கம் எழுதுவோரின் இயல்புகள்

பொதுவாகத் தலையங்கம் எழுதுவோருடைய இயல்புகளாகப் பின்வருவனவற்றைக் குறிக்கலாம்:

1. ஒரு கருத்தினை அல்லது அக்கருத்தினை வெளிப்படுத்திய ஒருவர்க்கு அல்லது அமைப்புக்கு அக்கருத்துக்குரிய அறிவுரைகளைக் கூறுதல்.
2. அதனை ஆதரித்தல், தேவையாயின் அதனைப் புகழ்தல்
3. அக்கருத்து ஏலாதாயினும் கண்டித்தல்; எழுதுகின்ற கருத்துக்களை நன்கு விளக்குதல்.
4. வருமுன் காப்பவர்போல எதிர்கால விளைவுகளைச் சுட்டிக்காட்டி எச்சரித்தல், பொது மக்களிடையே நிலவும் கருத்து வேறுபாடுகளை அன்பின் அடிப்படையில் அணுகி அறிவுரை கூறுதல்.

முதலியன தலையங்கத்தின் இயல்புகள். இவ்வியல்புகள் அனைத்தும் 'ஜோதி'யின் தலையங்கங்களில் பொருந்திச் சிறப்புற அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

'ஜோதி'யின் தலையங்கம் மூலமாகச் சர்மா அவர்கள் இந்திய நாட்டின் சமுதாய அரசியல் விழிப்புணர்வை ஊட்டுவதோடன்றி, நல்ல குடிமக்களுக்குரிய பண்புகளையும் மக்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பதைச் சுட்டுவார். மொத்தத்தில் ஆசிரியரின் நடுநிலைப்பண்பு, நாட்டுப்பற்று, நாகரிக உணர்வு, நேர்மை முதலாயன அவர்தம் தலையங்கங்களரால் புலனாவது தெளிவாகின்றது.

## வரலாற்று நிகழ்ச்சிகள்

பல வரலாற்று நிகழ்ச்சிகளைத் தெளிவாக 'ஜோதி'யில் விளக்கியுரைப்பது குறிப்பிடத்தக்கது. இத்துறை தொடர்பான கட்டுரைகளைச் 'சரித்திரக்காரன்' என்ற புனை பெயரில் சர்மா எழுதுவதும் எண்ணுவதற்குரியது. இக்கட்டுரைகள் மூலம் பல பழைய நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ள முடிகிறது.

### இராஜபக்தி

தில்லியை ஆண்ட பிருத்துவிராஜனிடத்தில் அவனுடைய படை வீரன் சம்யம்ராய் மிகவும் அன்பு கொண்டிருந்தான். ஒருமுறை போர்க்

களத்தில் தன் அரசன் பிழைக்க வேண்டுமென்பதற்காகத் தான் தன் சதையை அறுத்தெறிந்தான். இதை இராஜபக்தி என்று குறிப்பிட்டு இந்தியர்களின் இராஜ பக்தியைப் புகழ்ந்துரைப்பார். இந்தியர்கள் எப்பொழுதும் இராஜபக்தி வேறு, தேபக்தி வேறு என்று நினைக்கா மல் வீரச்செயலாற்றும் திறனைப் போற்றுகின்றனர்.

## தலைவர்களும் வாழ்க்கையும்

ஒரு காங்கிரஸ்வாதி என்ற பெயரில் சிறந்த அரசியல் தலைவர் களின் வாழ்க்கை வரலாறுகளையும், அவர்கள் நாட்டுக்குச் செய்த சேவைகளையும் படித்துப் பயன் பெறத்தக்க வகையில் எழுதியிருக் கிறார். நடுநிலையோடு நின்று அயல்நாட்டுத் தலைவர்களையும், இந்தியத் தலைவர்களையும் பற்றி அவர் ஜோதி இதழ்களில் எழுதி வந்த திறம் எண்ணி மகிழ்வதற்குரியதாகும்.

நாடு, இன, மொழி வேறுபாடின்றித் தலைவர்களின் தொண்டு ஒன்றனையே பெரிதும் போற்றி, அதனை இந்திய மக்கள் குறிப்பா கத் தமிழ்நாட்டு மக்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்னும் அவர் தம் ஆர்வம் அவருடைய பரந்த உள்ளத்தைக் காட்டுகின்றது. 'ஜோதி' இதழில் அவர் எழுதிய தலைவர்களைப் பற்றின விவரம் வருமாறு :

1. தாதாபாய் நௌரோஜி
2. பத்ருத்தின் தையாப்ஜி
3. ஆல்ப்ரெட் வெப்
4. சுரேந்திரநாத் பானர்ஜி
5. பண்டித மதன் மோகன் மாளவியா
6. கோபாலகிருஷ்ண கோகலே
7. இராஷ்பிஹாரி கோஷ்
8. அன்னி பெசன்ட்
9. பாலகங்காதர திலகர்
10. ஜோசப் மாஜினி
11. ஜவஹர்லால் நேரு
12. லட்சுமிநரசு செட்டியார்
13. அரங்கநாத முதலியார்
14. முத்துசாமி ஐயர்

இதுபோன்று தலைவர்கள் பலருடைய வாழ்க்கையினையும், அவர்கள் தம் நாட்டிற்குச் செய்த தொண்டினையும் பற்றி விரிவாக எழுதியுள்ளார். சுப்பிரமணிய சிவாவின் தியாகத்தையும் வீரச் செயல் களையும் குறித்து விளக்கமாக எழுதியுள்ளார்.

## சுபாஷ் சந்திரபோஸ்

போஸின் இளமைப் பருவம், கல்வி, தேசத்தொண்டு ஆகியவற்றை விரித்துரைப்பர். இதை எழுதுவதன் காரணத்தைக் குறிப்பிடுவர்.

'திரு சுபாஷ் சந்திரபோஸ் ஹரிபுரா காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது மகிழ்ச்சியை அளிக்கிறது. இந்தச் சந் தர்ப்பத்தில் இவருடைய ஜீவிய சரித்திரத்தைச் சுருக்கமாகத் தெரிந்து கொள்ள நண்பர்கள் விரும்புவது சகஜந்தான். திரு. போஸின் விரிவான சரித்திரம், இன்னும் தமிழில் எதுவும் வரவில்லை. இனி பலவரும்.

திரு போஸ் தமது வாழ்க்கையையும் இந்திய தேசீய இயக்கத் தையும் பிணைத்து ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதிக் கொண்டு வருகிறார். அதிலிருந்து புதிய செய்திகளைத் தெரிந்து கொள்வ தற்கு இந்தக் கட்டுரை உதவியாய் இருக்குமென்று நம்புகிறோம்' என்பர்.

சர்மா அவர்கள் சுபாஷ் சந்திரபோஸிடம் பெரிதும் ஈடுபாடு கொண்டவர் என்பது ஜோதியின் இதழ்களைக் காணும்போது புலனா கும். அக்காலத்திய விடுதலைப் போர்ச் சூழலில் போஸின் சக்தி ஒரு மாபெரும் இயக்கமாகவே விளங்கியது. மக்கட்கு இதனை நன்கு வலியுறுத்துவதற்கு ஆசிரியர் சர்மா சுபாஷ் சந்திரபோஸின் பல்வேறு படங்களையும் வாழ்க்கைக் குறிப்புகளையும் அவர் பங்கு பெற்ற நிகழ்ச்சிகளையும் குறிப்பிட்டுள்ளார். போஸின் பல அரிய படங்கள் இவ்விதழ்களில் காணக்கிடக்கின்றன.

## கருத்துப் படங்கள்

பருவ இதழ், நாளிதழ் ஆகியவற்றில் கட்டுரை, கவிதை, கதை என்பனவற்றை மட்டும் எழுதாமல் மனம் விட்டுச் சிரிப்பதற்கேற்ற

வாறு நகைச்சுவைத் துணுக்குகள் இருப்பதையும் காணலாம். இவற்றில் பல சிரிப்பதற்காக மட்டும் இருந்தாலும் அவற்றில் உள்ளார்ந்த பொருளும் இருக்கிறது. நகைச்சுவைத் துணுக்குகளைப் போல நகைச்சுவைக் கருத்தோவியங்களும் உண்டு. வரையப்பட்டிருக்கும் சித்திரங்களைக் கொண்டு அதன் உட்பொருளைப் புரிந்து கொள்ள வேண்டும். இதில் பல கருத்தோவியங்கள் அரசியல், சமூகம் முதலியவற்றைச் சாடுவதாக இருக்கும்.

சர்மாவும் ஜோதியில் இதுபோன்ற கருத்தோவியங்களைத் தீட்டியுள்ளார். உலகத்தில் நடப்பதென்ன என்ற தலைப்பின் கீழ் இக்கருத்தோவியங்கள் தீட்டப்பட்டுள்ளன.

## கூடார்த்தப்படம்

'பேனா மன்னர்' என்னும் பாராட்டைப் பெற்ற சிறந்த இதழாசிரியர் டி.எஸ். சொக்கலிங்கம், 'கார்ட்டூன்' என்பதற்குக் 'கூடார்த்தப் படம்' என்னும் பொருள் தருவார். இதழ்களின் உள்ளடக்கம் எதுவானாலும் கேலிச் சித்திரங்களை வெளியிடுவது என்பது நடைமுறைப் பழக்கமாகிவிட்டது.

## முதல் கேலிச் சித்திர இதழ்

1841 ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் 'பஞ்ச்' என்ற பெயரில் முதல் முதலாகக் கேலிச் சித்திர இதழ் வெளிவந்தது. டேவிட்லோ, பெர்னார்ட் பார்ட் ரிட்ஜ், பிராங்டைசன், மாக்ஸ்பீர்பாம், டாம்வெப்ஸ்டர் மற்றும் பல சிறந்த ஓவியர்களின் ஓவியங்களைக் கொண்டு 'பஞ்ச்' இதழ் மக்களிடையே செல்வாக்கினைப் பெற்றது.

## இந்தியாவில் கேலிச் சித்திர இதழ்

1851இல் இந்தியாவில் 'டெல்ஹிஸ்கெட்ச் புக்' என்னும் பெயரில் கேலிச் சித்திரங்களைக் கொண்ட மாத இதழ் முதன் முதலாக வெளிவந்தது. ஏழாண்டுகள் வரை லார்ட்ஹெசி, லார்ட் கானிங் ஆகியோர் ஆட்சிக் காலத்தில் இவ்விதழ் சிறப்புற நடை பெற்றது.

## தமிழ் இதழ்களில் கேலிச் சித்திரங்கள்

கேலிச் சித்திரங்களை வெளியிடும் முறை பாரதியாரின் 'இந்தியா' விலிருந்துதான் தொடங்குகிறது என்று கூறுவர். ஆனால் பத்தொன்ப

தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளிவந்த தமிழ் இதழ்கள் சில இம்முயற்சியை மேற்கொண்டுள்ளன. அவை சமுதாயம், சீர்திருத்தம் பற்றிய சித்திரங்களாக அமைந்தன. அவற்றுள்ளும் பல மேலைநாட்டு இதழ்களில் வெளிவந்தவற்றின் மறுபதிப்பாகவும் இருந்தன.

## பாரதியார் படைத்தவை

அரசியல் துறையில் கேலிச் சித்திரங்களை வெளியிட்டு வாசகர் களைப் பெரிதும் ஈர்த்த பெருமை பாரதியாருக்கு உரியதாகும். 1906 இல் பாரதியார் 'இந்தியா' வார இதழில் கேலிச் சித்திரங்களைத் தொடர்ந்து வெளியிட்டார்.

தமிழ்த்தென்றல் திரு. வி.க.வை ஆசிரியராகக் கொண்டு வெளி வந்த 'தேசபக்தன்' நாளிதழுக்குத் திரு.வி.க.விற்குப் பின் ஆசிரியராய் வந்தவர் வ.வே.சு. ஐயர். இவர் வாரம் ஒருமுறை கேலிச்சித்திரம் வெளி யிடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். பின்னர் நின்றுவிட்டது. அதன் பிறகு கே.ஆர். சர்மா சகோதரர்கள் டி.என். நடராசப் பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு நடத்திய 'விநோதினி' என்னும் இதழில் கேலிச் சித்திரங்கள் மிகுதியாக வெளிவந்தன.

1920இல் வெளிவந்த 'தமிழ்நாடு' வார இதழில்தான் ஆசிரியர் வரதராசலு நாயுடு கேலிச் சித்திரங்களைத் தொடர்ந்து வெளியிட்டு இதழின் ஓர் அங்கமாக அதனைக் கருதுமாறு செய்தார். நாட்டு விடு தலைப் போராட்ட வரலாற்றையும் தேசிய உணர்வுடைய இயக்கங் களின் தொண்டுகளையும் எழுத அக்கால இதழ்களில் வெளிவந்த கேலிச் சித்திரங்கள் பெருந்துணை செய்தன.

## ஜோதியில் கருத்துப் படங்கள்

ஜோதியிலும் இத்தகைய கருத்துப் படங்களைச் சர்மா தீட்டி யுள்ளார். உலகத்தில் நடப்பதென்ன என்ற தலைப்பின்கீழ் இக்கருத் தோவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. இதனை 'அங்கத ஓவியங்கள்' எனவும் குறிக்கலாம். இவை அனைத்துக் கருத்துக்களையும் எதிரொலிக்கும் நோக்கில் இருந்தன. பல கருத்தோவியங்கள் முதல் இரண்டு உலகப் போர்களை அடிப்படையாக வைத்து வரையப்பட்டிருக்கின்றன.

## மக்களும் மதுவிலக்கும்

மதுவினால் பல குடும்பங்கள் மிகவும் பின்னோக்கிய நிலையில் சீரழிந்து வருகின்றன. விவசாயிகளின் வாழ்க்கை மிகவும் போராட்ட மாக அமைந்தது. மக்களை இந்தத் துன்பத்திலிருந்து மீட்க அரசு மதுவிலக்குச் சட்டத்தைச் சேலம் மாவட்டத்தில் வழக்கிற்குக் கொண்டு வந்தது.

வறுமை என்னும் சூழலில் சிக்கித் தவிக்கும் விவசாயிகளை மீட்க இந்தச் சட்டம் வருகிறது என்பதை இக்கருத்துப்படம் உணர்த்து கின்றது.

## உழவனும் மகிழ்ச்சியும்

கட்டுமரத்தில் அகப்பட்டு விவசாயி ஒருவன் தவிக்கிறான். எதிரில் ஒரு கப்பல் வருவதைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறான்.

அரசிடம் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க விவசாயிகள் அல்லல்படுகின்றனர். அந்த நேரத்தில் அரசு, கடன் நிவாரண சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டுவருகின்றது. இதை நினைத்து விவசாயி கள் அடையும் மகிழ்ச்சியைக் கருத்துப்படம் விளக்குகின்றது.

## வல்லரசுகளின் சதி

ஐரோப்பிய வல்லரசுகள் அனைத்தும் வெளிப்பக்கம் ஒன்றுக் கொன்று ஒற்றுமையாக இருப்பதாகப் பேசிக் கொண்டிருக்கின்றன. ஒன்றுக்கொன்று உதவியும் புரிந்து கொள்கின்றன. ஆனால் உள்ளுக்குள் ஒன்றை ஒன்று அழிக்கத் தீவிரமாகத் திட்டம் போடுகின்றன. இக்கருத் தினை உணர்த்துமாறு ஒரு கருத்துப்படம் உள்ளது.

ஒரு மரத்தின் ஒவ்வொரு கிளையிலும் ஒவ்வொரு வல்லரசுகள் அமர்ந்திருக்கின்றன. ஒன்றுக்கொன்று பார்த்துச் சிரித்துக் கொள் கின்றன. ஆனால் மரத்தின் மீதமர்ந்திருக்கும் ஒவ்வொரு வல்லரசு களின் கையும் மற்றவர் அமர்ந்திருக்கும் இடத்தை வாள் கொண்டு அடியோடு அறுப்பதாக அப்படம் அமைந்துள்ளது.

## சர்வாதிகாரமும் ஜனநாயகமும்

சர்வாதிகாரம் ஜனநாயகத்தை வீழ்த்திவிட்டு நடைபோடுகிறது. இந்தச் சர்வாதிகார ஆட்சியினால் மக்களுக்கு இன்னல்தான் அதிகம்.

சர்வாதிகாரம் உடல் பெருத்த கண்ணில்லாத மனிதனாகவும், அதன் அருகில் ஜனநாயகம் சிறிய மனிதனாகவும் வரையப்பட்டுள்ளது. ஜன நாயக மனிதனின் கண்ணிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டேயிருக் கிறது. அனைத்து உறுப்புக்களிலிருந்தும். சர்வாதி காரத்திற்கு கண் ணில்லை... எனவே தன் எண்ணப்படி சட்டங்களை இயற்றி மக்களை இன்னலுக்கு ஆளாக்குகிறது. ஓயாத துன்பத்தினால் ஜனநாயகத்தின் கண்களில் கண்ணீர் வழிந்துகொண்டே இருக்கிறது. கண்ணில்லாத சர்வாதிகாரம் தன்னாட்சிக்கு மக்களைப் பலியாக்குகின்றது. எதிர்த் தால் மக்கள் வீழ்த்தப்படுகிறார்கள். இந்தத் துயரத்திலிருந்து மீள்வ தெந்நாளோ என்று மக்கள் வருந்திக் கொண்டிருக்கின்றனர்.

சர்வாதிகாரத்தின் முறையற்ற ஆற்றலையும், ஜனநாயகத்தின் இரங்கத்தக்க நிலையையும் இந்தக் கருத்துப் படம் புலப்படுத்து கின்றது.

## வருங்காலத்து நிலை

'இப்படித்தான் நாகரிகம் வளர்ச்சியடையப் போகிறதா' என்ற தலைப் பின் கீழ் மூன்று கருத்துப்படங்கள் உள்ளன. இவற்றின் மூலம் வருங் காலத்தின் நிலையைத் தெளிவாக உணர்த்தியிருக் கிறார்.

1. இளைஞனின் கைகளிலும், தோளிலும் அவன் முகமே தெரியாத படி போர்க்கருவிகள் மறைந்துள்ளன. போர்க் கருவிகளைச் சுமந்த வண்ணம் இளைஞனின் படம் உள்ளது. சமாதான தேவதையும் கருவிகளுடன் போருக்குச் செல்கிறாள். இனி வரப்போகும் காலத் தில் நாட்டின் நிலை அமைதியின்றி எங்கும் போர், அரசியல் குழப் பங்கள் நிறைந்ததாக இருக்கும் என்பதை அப்போதே உணர்ந்து கருத்தோவியம் தீட்டியுள்ளது சிந்தனைக்குரியது.

2. இளைஞன் ஒருவன் கழுத்தில் பட்டத்தினை மாட்டிக் கொண்டு அலைவது போன்று படம் காணப்படுகின்றது. இக்காலத்தில் படித்த படிப்பினால் எவ்விதப் பயனுமின்றிப் பணிக்காக அலைந்து திரியும் இளைய சமுதாயத்தின் நிலையை உணர்ந்து அன்றே சர்மா கருத்தோவியம் வரைந்துள்ளது எண்ணுதற்குரியது.

## யூதர்களின் நிலை

2000 வருடங்களாக நாடோடிகளாக யூதர்கள் அலைந்து வருகின்றனர். இவர்களுக்கென்று நிலையான இடம் இல்லை. ஆங்காங்கு சிக்கி அல்லற்படுவதை உணர்த்தும் வண்ணம் கருத்தோவியம் காணப்படுகிறது.

யூதர் குலத்தைச் சேர்ந்தவனின் கை ஒடிக்கப்பட்டு, கட்டுகளுடன் காணப்படுகிறது. இனி செல்வதெங்கே என்று இரங்கத்தக்க நிலையில் இருக்கிறான். யூதர்களின் அன்றைய அவலச் சூழலை இக்கருத்துப்படம் மிக நுட்பமாகக் காட்டுகின்றது.

## சமாதான தெய்வமும் ஏக்கமும்

இனி போரே செய்வதில்லை என்று அனைத்து நாடுகளும் உறுதி பூண்டன. ஆனால் அது பொய்த்துவிட்டது. எல்லா நாடுகளும் போருக்குத் தயாரான நிலையில் இருக்கின்றன. உள்நாட்டு குழப்பங்களும் மிகுந்துவிட்டன. அமைதி என்பதே இல்லை. இதையெல்லாம் பார்த்துச் சமாதான தெய்வம் ஏங்குகின்றது.

'இந்த மனிதர்களுக்குள் உள்ள ஆட்சி வெறியால் மக்களையும் மற்ற உயிரினங்களையும் அழித்து வருகின்றனர். இந்த ஆசை ஒழிந்து அமைதி நிலை காண்பதெப்போது என்று சமாதான தெய்வம் ஏங்குகிறது. இதை இக்கருத்தோவியம் உணர்த்துகிறது.'

இங்ஙனம் உலக நடப்புகளை மிக உன்னிப்பாகக் கவனித்து அதனை மக்கள் தெளிவாக உணரும் பொருட்டு எளிய முறையில் நுட்பமான படங்களை ஜோதி இதழில் வெளியிட்டு வந்துள்ளார்.

'ஜோதி' இதழில் காணப்படும் கருத்துப் படங்கள் தரும் குறிப்புகளைத் தொகுத்துப் பார்க்கும்பொழுது பெரும்பாலும் சர்வாதிகாரம், போர், சமாதானம் ஆகியவற்றின் பின்னணியே பெரிதும் கூறப்பட்டுள்ளன. குறிப்பாக ஹிட்லர், முஸோலினி ஆகியோரின் சர்வாதிகாரப் போக்கினையும், அவர்தம் கொடுமையினையும் இக்கருத்துப்படங்கள் நன்கு புலப்படுத்துகின்றன.

சமாதானத்தைத் தெய்வமாகவும், குழந்தையாகவும், கோபுரமாகவும், உருவகிக்கப்பட்டமை முறையே சமாதானத்தின் மேன்மையையும் பெருமையையும் காட்டும்.

நம் நாட்டின் விடுதலைச் சூழலுக்கேற்ப ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடும் காங்கிரஸ் கட்சியின் பணிகளும் சில நாட்களில் கருத்துப் படங்களாக இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இங்ஙனம் ஜோதியில் அமைந்து விளங்கும் கருத்துப் படங்கள் கண்ணிற்கும் கருத்திற்கும் ஒருசேர விருந்தளிக்கின்றன. உலகச் செய்திகளையும் மக்கள் நன்கு புரிந்து கொள்ள வேண்டும் என்னும் இதழாசிரியரின் நோக்கமும் இவற்றால் நன்கு புலனாகும்.

## நமது அரசியல் டைரி

நமது நாட்டிலும், வெளிநாடுகளிலும் நடைபெற்ற நிகழ்ச்சிகளை நினைவில் வைத்துக் கொள்ளுதல் அரிது. வேண்டியபோது ஒரே தொகுப்பாகவும் எளிதில் கிடைப்பதரிது. இந்தக் குறைகளை நீக்க ஜோதி இதழில் இந்தப் பகுதியைச் சர்மா அமைத்துள்ளது குறிப்பிடத்தக்கது. பல அரிய செய்திகளைச் சிறப்பாகத் தொகுத்துக் கூறும் முறை சிறப்புடையதாக விளங்குகிறது. இந்திய விடுதலை வரலாற்றைத் தொகுத்து அறிந்து கொள்வதற்கு இத்தகு நாட்குறிப்புகள் பெரிதும் பயன்படும். காங்கிரசின் மாநாட்டுக் குறிப்புகளையும், காங்கிரஸ் கட்சியின் நடவடிக்கைக் குறிப்புகளையும் நமது அரசியல் டைரி என்னும் பகுதியின் கீழ் ஆசிரியர் தருகின்றார். சில இதழ்களில் பிற நாட்டு நடப்புகளையும் அரசியல் டைரியின் கீழ் குறித்துக் காட்டியுள்ளார்.

## அறிவுத் துறை

சர்மா அறிவியற் கட்டுரைகள் பலவற்றைப் புனைந்து மக்கட்குப் பொது அறிவு வளர வேண்டுமென்பதில் பேரார்வம் காட்டினார்.

விஞ்ஞான போதகர் என்ற புனைபெயரில் சிறந்த அறிவியற் கட்டுரைகள் எழுதி உள்ளது குறிப்பிடத்தக்கது. இதற்கு 'அறிவுத் துறை' என்று பெயரிட்டுள்ளார். பயனுள்ள பல செய்திகள் இதில் விளக்கப்பட்டுள்ளன. இவைகளைத் தக்க விளக்கப்படங்களுடன் விளக்கியிருப்பது சிறப்பாக உள்ளது.

1. சந்திரனில் உயிர் உண்டா இல்லையா? சூரிய கிரகங்கள் யாவை? பூமியில் வெப்பம் இல்லாது போகும் காலம் முதலியவற்றை ஆராய்ந்துரைப்பர்.

2. மின்சார சக்தி, மின்சார சக்தியை அறிந்த முறை, கம்பியில் ஓடும் மின்சாரத்தை அறிந்த முறை, மின்சாரத்தின் முக்கியத் தன்மைகள், மின்சாரத்தில் இருப்பது அணுக்களா, அலைகளா என்பனவற்றை ஒரு கட்டுரை விளக்குகின்றது.

3. போர்க்காலத்தில் எதிரிகள் மறைந்து வருவதை அறியும் முறை, குண்டு பாய்ந்தவரைக் குணப்படுத்தும் முறை, நச்சுப் புகையி னின்று தப்புவது எப்படி என்பதைக் குறிப்பிடுவர்.

4. இழுக்குஞ் சக்திகள், இழுக்குஞ் சக்திகள் விதி, கனம், நிறை என்பது என்ன என்பது பற்றி விளக்குகின்றார்.

அறிவுத்துறை என்னும் பகுதியில் காணப்பெறும் அறிவியல் செய்திகளைத் தமிழில் ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகட்கு முன்னரேயே தர ஆசிரியர் முனைந்திருப்பது பெரிதும் எண்ணுதற்குரியதாகும். இன்றி யமையாத அறிவியல் கலைச் சொல்லாக்கங்களையும் அக்காலத் திலேயே ஆசிரியர் தர முற்பட்டிருப்பது அவர் புதுமை வேட்கையைக் காட்டும்.

வாழ்வியல் நெறியில் நல்லனுபவம் பெற்ற ஆசிரியர் வாசகர் களுக்குச் சில அறிவுரைகளைத் தருகின்றார். சோர்வுள்ளம் கொண்டு வருந்துபவர்களுக்குச் 'சோர்வு கொள்ளாரே' என்ற தலைப்பில் பல நல்ல கருத்துக்களைக் கூறுவார்.

> யாரும் விரும்பிப் பிறப்பதில்லை. ஆனால் நடத்தும் வாழ்க்கை அவரவர் விருப்பத்தைப் பொறுத்திருக்கிறது. நன்மையும் தீமையும் கலந்திருக்கின்ற உலகத்தை எப்படி நோக்குகின்றோமோ அப்படித்தான் உலகம் காட்சியளிக்கும். சோர்வில்லாமல் உழைத் தால் வாழ்க்கை மகிழ்ச்சியாக இருக்கும்.

என்று உழைப்பின் அவசியத்தைச் சிறப்புடன் எடுத்துரைப்பர். உழைப்பு உலக வாழ்வில் வாழும் விருப்பத்தை ஏற்படுத்தும் என்னும் இவரு டைய கருத்து இங்கு குறிப்பிடத்தக்கது.

## பெண்மையைப் போற்றல்

பெண்மைக்கு உயர்ந்த இடத்தைக் கொடுத்து, பெண்மையைப் போற்றுபவர் சாமிநாத சர்மா. பெண்ணைத் தாயாகவும், சகோதரியாக

வும், தெய்வமாகவும் நினைத்துப் போற்றுவதைப் பல இடங்களில் காண முடிகின்றது. 'குயில்' என்ற புனைபெயரில் கட்டுரைகள் சில வற்றை எழுதியுள்ளார்:

> ஒழுக்கமுடைய பெண்ணின் குடும்பம் அமைதியாக இருக்கும். பெண்ணுலகம் எப்போதும் நிறைவளிக்கும் தன்மையுடையது. துன்ப நிலையிலும் இன்பத்தைப் பெண்களிடத்தில் காணலாம். தங்களுடைய கடமையை நிறைவேற்றும் நேரத்தில் பெண்கள் புதிய சக்தி கொண்டெழுவர். அவர்களுடைய தியாகமும் சகிப் புத் தன்மையும் மரணத்தையும் வென்று விடும்.

இவ்வாறு பெண்மையின் நிலையை உயர்த்திப் போற்றுவர்.

## பெண்களும் கல்வியும்

பெண்களுக்குக் கற்பிக்கப்படும் கல்வி எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றிச் சர்மா கூறுவது உளங்கொளத் தக்கது.

'இவர்களுக்குக் கற்பிக்கப்படும் கல்வியானது அமைதியுடைய தாய், ஆனால் அதிக மேன்மையுடையதாய் இருக்க வேண்டும். இசை, இந்திய நாட்டுச் சரித்திரம் இவைகளில் நல்ல பயிற்சி பெறும்படி செய்ய வேண்டும். தாய்மொழிக் கல்வியைக் கற்றுக் கொள்ளாத பெண் கள் சிறந்த தாய்மார்களாக இருக்க முடியாது' என்பர்.

பெண் மக்கள் கல்வி கற்றல் அவசியம். பெண்களுக்கு அளிக்கப் படும் கல்வி வாழ்க்கைக்குப் பயனுடையதாய் இருக்கவேண்டும். கல்வி யோடு கைத்தொழில் ஒன்றினையும் கற்றுக் கொள்ளுதல் நலம் பயக் கும் என்பது சர்மாவின் எண்ணமாகும்.

## முயற்சி

எந்தச் செயலையும் முயற்சியுடன் இடைவிடாமல் செய்வதால் வெற்றி கிட்டும் என்பதைக் கொலம்பசின் வரலாற்றின் மூலம் உணர்த் துவர். கல்வியினால் பயனின்றிப் பிற்பட்ட சமுதாயத்தில் இருக்கும் இளைஞர்களுக்குச் சில அறிவுரைகளையும் கூறுவர்.

1. வேலையில்லாத் திண்டாட்டம் எங்கும் இருக்கின்றது. நம் நாட் டில் அளிக்கப்படும் கல்வி வாழ்க்கைக்குப் பயன் அளிப்பதாக இல்லை. செல்வமுள்ளவன் இல்லாதவனை ஏளனமாகப் பார்க்

கின்றான். எல்லோரும் சமமாக இருக்கின்ற நிலைவேண்டும். எந்தத் துயரம் நம்மைத் தொடர்ந்தாலும் நம்பிக்கையை விடாமல் செயலாற்றினால் வெற்றி உறுதி என்பது சர்மாவின் எண்ணமாகும்.

'ஒழுக்கத்திற்கு உயர்வு கொடு' என்ற தலைப்பில் கட்டுரை ஒன்றினை எழுதியுள்ளார்.

உழைப்பு, கடமை, ஒழுக்கம், படிப்பு முதலியவற்றைப் பற்றி விரிவாகக் கூறியுள்ளார்.

வாழ்க்கையில் மனிதன் எப்படி வாழ்ந்தால் நல்லது என்பதை யும் இக்கட்டுரையில் கூறுகின்றார். ஒழுக்கமும், படிப்பும் குறித்து ஆசிரியர் தரும் விளக்கம் உளங்கொளத்தக்கது.

'நன்றாக எழுதவும், படிக்கவும் கற்றுக் கொண்டுவிடுவது அவ் வளவு முக்கியமல்ல. ஆனால் இந்தக் காலத்தில் பலர் படிப்புக்கு முக்கி யத்துவம் கொடுத்து, குணத்தைக் கை சோர விடுகின்றனர். படிப்புக்கும் ஒழுக்கத்திற்கும் சம்பந்தமேயில்லை. படித்தவரெல்லாரும் சந்தோஷத் தையும் பெறுகிறார்களில்லை. அதற்கு மாறாக, குணமில்லாத படிப்பு கர்வத்தைக் கொடுத்து விடுகிறது. ஒழுக்க ஹீனராயிருக்கப்பட்டவன், எவ்வளவு படித்திருந்தாலும், அவன் பாதி மனிதன்தான். மனிதத் தன்மை யில் அவன் போற்றப்படுவதேயில்லை. ஆகையால், மகனே ஒழுக்கத் திற்கு முதல் ஸ்தானமும், படிப்புக்கு இரண்டாவது ஸ்தானமும் கொடு,'

என்று இரண்டின் முக்கியத்துவத்தைக் கூறி, மனித வாழ்க்கை யில் அவ்விரண்டும் பெறும் இடத்தையும் சுட்டியிருப்பது சிறப்பு டைத்து என்று இளம் சமுதாயத்தினருக்கு வேண்டுகோள் விடுப்பது சிந்தித்தற்குரியது. சாதி, மதங்களற்ற ஒரு நல்ல சமுதாயம் உருவாக வேண்டுமென்பதில் சர்மா கொண்டுள்ள ஆர்வ நிலையும் இதனால் புலப்படுகின்றது.

## மனிதனும் வருங்காலமும்

'முனிசுவாமிப் பிள்ளை' என்ற பெயரில் வருங்காலம் எப்படி இருக்கு மென்பதைக் குறித்துக் கட்டுரை எழுதியுள்ளார். உலகம் தற்போது அடைந்துவரும் பலவித மாற்றங்களையும் மிக ஆழ்ந்து சிந்தனை செய்து கூறியுள்ளார். 'இனி வருகின்ற காலத்தில் சுறுசுறுப்புடன்

இயங்குவதற்கு ஆடைகள் செய்யப்படும் பயிர்களை மின்சக்தியின் ஆற்றலால் விரைவில் வளரச் செய்யலாம். உலகச் செய்திகளை அறிந்து கொள்ள நாளிதழ்கள் வேண்டாம். ஒரு குமிழியைச் சுற்றுவதால் உலகத்தில் எப்பாகத்தில் நடப்பதைக் காணவும் கேட்கவும் முடியும்' என்று கூறுவது மாற்றங்கள் நிறைந்த இன்றைய சூழ்நிலையில் எண் ணுதற்குரியதாகும்.

## அன்றாட உலகம்

ஒவ்வொரு நாட்டில் நடைபெறும் முக்கிய நிகழ்ச்சிகளை இத் தலைப்பில் கூறுவது குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு திங்களிலும் நடந்த முக்கிய நிகழ்ச்சிகள் பலவற்றை அறிந்து கொள்ள இக்குறிப் புக்கள் பேருதவி புரிகின்றன. நாளிதழில் வருகின்ற செய்திகள், பிற செய்திகள் ஆகியவற்றைத் தொகுத்து நாள் வாரியாக நாட்குறிப்புப் போல அமைத்துத் தருவது உலகச் செய்திகளை எளிமையாக அறிந்து கொள்ளத் துணை செய்யும். ஒவ்வொரு நாளிலும் உலக அரங்கில் நடை பெற்ற பல்வேறு செய்தித் துணுக்குகளையும் இப்பகுதியில் தந்திருப் பது வாசகர்கள் அனைவரும் அனைத்துச் செய்திகளையும் அறிந்து கொள்ள வேண்டும் என்னும் அவர்தம் ஆர்வத்தைப் புலப்படுத்தும் சான் றாக உள்ளது.

இப்பகுதியில் வரும் குறிப்புகளைப் பார்க்கும்போது, உலகப்புகழ் பெற்ற நிகழ்ச்சிகள், உலகத் தலைவர்களுடைய வாழ்வில் நிகழ்ந்த சிறு சிறு குறிப்புகள், உலக நாடுகளுக்கிடையே நடக்கும் போர்கள், சமா தானங்கள், மன்னர்களின் திருமணக் குறிப்புகள், பார்லிமெண்ட் நிகழ்ச் சிகள், காங்கிரஸ் கட்சியின் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள், இந்திய விடுதலை வேள்விக்காக உழைக்கும் தலைவர்கள், தொண்டர்கள் ஆகி யோரின் கைது மற்றும் விடுதலை விவரங்கள், சுபாஷ் சந்திர போஸ் பிறநாட்டுத் தலைவர்களோடு சந்திக்கும் சந்திப்புகள், தொழி லாளர் செய்திகள் என உலகத்தில் அன்றாடம் நிகழும் பல்வேறு நிகழ்ச்சிகளை யும் 'அன்றாட உலகம்' என்னும் தலைப்பின்கீழ் அமைத்துத் தந்திருப் பது வரலாற்று ஆய்வாளர்களுக்குப் பெரிதும் உதவும்.

## நமது நிருபர்களுடன்

இந்தப் பகுதியில் வாசகர்கள் கேட்கும் கேள்விகளுக்குத் தகுந் தாற்போல் ஆசிரியர் விடையளிக்கின்றார். இந்தப் பகுதியில் பலதுறைத்

தொடர்பான வினாக்களும் காணப்படுகின்றன. அனைத்திற்கும் உரிய முறையில் சர்மா விடையளிப்பது குறிப்பிடத்தக்கது.

இதில் பல நல்ல வினாக்களுக்குச் சுவையுடன் பதில் எழுதியுள்ளார். ஆசிரியருக்கு எழுதப்படும் கடிதங்களில் எழுதுவோர் தம் பெயரைக் குறிப்பிட்டும், பொதுவாகவும் எழுதும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர். இப்படிக்கு சுப. முத்துப் பழனியப்பன், ஒரு காலேஜ் ஆசிரியர், இருபத்தாறு வயது, மனமுடைந்த தேசபக்தன். தலைவரோடு சுற்றிய தொண்டன் என்றெல்லாம் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆங்கிலச் சொற்களை இடையிடையே கலந்து எழுதுவது குறித்து ஒருவர் ஆசிரியரிடம் இப்பகுதியில் வினவியுள்ளதும் அதற்கான ஆசிரியரின் மறுமொழியும் வருமாறு :

> ஆசிரியர் அவர்களே,
>
> இப்பொழுது நாம் தமிழில் புதிய புதிய வார்த்தைகளை உண்டாக்கிக் கொண்டிருக்கிறோம். ஆங்கில வார்த்தைகளை உருவாக்க முயன்று கொண்டிருக்கிறோம். அப்படியிருக்கச் சில பத்திரிகைக்காரர்களும், கட்டுரையாளர்களும் தமிழில் எழுதும் போது 'சில டயம்களில்', 'கிளியராக' என்பவை போன்ற அபூர்வ சங்கதிகளை அனாவசியமாக அதற்குத்தக்க தமிழ் வார்த்தைகள் இருக்கும் பொழுதே - உபயோகித்து வருகிறார்களே? இது ஏன்? இதற்கு என்ன செய்யலாம்.
>
> கல்யாணம்

**ஆசிரியரின் பதில்**

> ஏன் என்ற கேள்விக்கு நாம் எப்படிப் பதில் சொல்ல முடியும்? அவரவர்களுடைய இஷ்டம் என்றுதான் சமாதானப்படுத்திக் கொள்ள வேண்டும். பொதுவாக சரியான தமிழ்ப்பதங்கள் அகப்படுகிறபோது அவைகளுக்குப் பதிலாக ஆங்கிலப் பதங்களையோ மற்ற சொற்களையோ போடவேண்டியது அனாவசியம். மேனாடுகளில் அரசியல் சுதந்திரத்தை ஸ்தாபித்துக் கொள்வதற்கு முன்னோடித் தலைவர்கள் பாஷைச் சீர்த்திருத்தந்தான் செய்திருக்கிறார்கள். துருக்கி நாட்டில் கமால் அதாதுருக் பாஷைச் சீர்திருத்தம் செய்திருப்பது போல், தமிழ்நாட்டில் ஒரு சர்வாதிகாரி தோன்றித் தமிழ்ப் பிரயோகங்கள் விஷயத்தில் ஒரு 'நிர்ணயம்' ஏற்படுத்தினால் மிகவும் நல்லது.

ஒரு நாட்டின் விடுதலை உணர்வோடு மொழிச் சீர்திருத்தத்தை ஒப்புமையாக எடுத்துக்காட்டி உணர்த்துவது குறிப்பிடத்தக்கது. தமிழ் நாட்டிலும் மொழியின் சீர்திருத்தத்திற்காக ஒரு சர்வாதிகாரியையே நியமிக்கலாம் என்னும் அவருடைய கருத்தின் மூலம் மொழிச் சீர் திருத்தம் குறித்து ஆசிரியரின் எண்ணம் தெளிவாகிறது.

## விசுவ விசித்திரம்

உலகத்தில் காணப்படும் அற்புதமான செய்திகள் 'விசுவவிசித் திரம்' என்னும் தலைப்பின் கீழ்த் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. செய்தி களுக்குரிய படங்களும் காணப்படுகின்றன. இன்றைக்கு நடக்கும், இனி நடக்கப்போகும் செய்திகளை அப்போதே உணர்ந்து கூறியிருப் பது குறிப்பிடத்தக்கது. மனிதன் முதல் விலங்கினங்கள் வரை நடை பெறும் வியப்பான நிகழ்ச்சிகள் அனைத்தும் இப்பகுதியில் காணப் படுகின்றன.

1. இப்பொழுது நடைபெற்று வரும் அறுவைச் சிகிச்சையைப் பற்றி அப்போதே படம் வரைந்து விளக்கியிருப்பது குறிப்பிடத் தக்கது. வளைந்திருக்கும் அல்லது அதிகமாக இருக்கும் எந்தப் பகுதியையும் அறுவைச் சிகிச்சை மூலம் சரி செய்யும் முறையைப் பற்றி எழுதியுள்ளார்.

2. இனி வருங்காலத்தில் காபிக்குப் பதிலாக காபி பசை வரும் என்பதைச் சுட்டுவார்.

இங்ஙனம் உலக அற்புத நிகழ்ச்சிகள் பலவற்றையும் தொகுத் துப் படிப்போருக்கு விருந்தாகவும், அறிவு வளர்க்கும் மருந்தாகவும் ஜோதி இதழில் அமைந்திருப்பது அவர்தம் இதழியல் ஆளுமை நெறிகளுள் ஒன்றாக விளங்குகின்றது.

## ஞானக்களஞ்சியம்

'ஞானக்களஞ்சியம்' என்னும் இப்பகுதியில் படிப்போருக்காகப் பல அரிய அறக் கருத்துக்களைத் தொகுத்துத் தந்துள்ளார்.

ஞானக் களஞ்சியம் பகுதியில் உலகியல் நெறியோடு சில சான்று களைத் தந்து விளக்குவது படிப்போர் எளிமையாக அறிவதற்குத் துணை புரியும்.

## சினிமா பக்தர்களுக்கு

இக்கால நாளிதழ்கள், வார இதழ்கள், மாத இதழ்கள் பலவற்றிலும் திரைச் செய்திகளைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. ஒவ்வொரு இதழும் ஒவ்வொரு தலைப்பிட்டு இச்செய்திகளை வெளியிடுகின்றன. நாற்பதாண்டுகளுக்கு முன்னரே சர்மா 'ஜோதி'யில் சினிமா பக்தர்களுக்கு என்ற தலைப்பிட்டுத் திரைச் செய்திகளைப் பற்றிக் கூறுவது குறிப்பிடத்தக்கது.

உலகத்தின் பிறமொழிகளில் காணும் திரைப்படச் செய்திகள், இந்தியத் திரைப்பட நிலை முதலானவை குறித்து இப்பகுதியில் சிறுசிறு செய்திகள் வெளியிடப்பட்டுள்ளன.

## நாடகம்

ஜோதியில் சில நாடகங்களையும் சர்மா எழுதியிருக்கின்றார். 'மனோதர்மம்' என்ற மொழி பெயர்ப்பு நாடகமும் 'ஜூலியஸ் சீசர்' நாடகமும் தொடர்ந்து வந்துள்ளன.

## சிறுகதை

ஜோதி இதழில் பல்வேறு சிறுகதைகள் ஆசிரியராலும், பிறராலும் வெளியிடப்பட்டுள்ளன. பிற்காலத்தே படைப்பிலக்கிய உலகில் புகழ் பூத்து விளங்கிய புதுமைப்பித்தன் கு.ப.ரா. போன்றோர் பலரும் ஜோதி இதழில் சிறுகதைகள் எழுதியுள்ளது குறிப்பிடத்தக்கது.

## கவிதை

சர்மா ஜோதி இதழில் சில கவிதைகளையும் எழுதி உள்ளார். வாழ்வியல் நெறியில் அறங்கூறும் செய்திகளைப் பாடு பொருளாகக் கொண்ட கவிதைகள்தாம் அவருடைய படைப்புகளாக விளங்குகின்றன. 'கொடுக்கிறவனே வாழ்கிறான்' என்ற தலைப்பில் எந்த அளவுக்கு ஒருவன் கொடுக்கிறானோ அந்த அளவுக்கு அவன் வாழ்ந்தவனாகிறான் என்பார். கொடுக்காதவன் வாழ்ந்தவனாகக் கருதப்படுவ தில்லை. நம்முடைய எண்ணம், செயல் இவைகளை மற்றவர்களுக்குக் கொடுத்து வாழவேண்டும் என்பார். இதனை அவருடைய பின்வரும் கவிதை காட்டும்:

கொடு! மகனே! அனைவருக்கும் கொடு!
வலிமையை எண்ணத்தை செயலைக் கொடு;
அன்பை, கண்ணீரை, உன்னையே கொடு;
கொடு; எப்பொழுதும் கொடுத்துக் கொண்டிரு;
எவனொருவன் கொடுக்கவில்லையோ அவன் வாழவில்லை
எவ்வளவுக்கெவ்வளவு மகனே! கொடுக்கிறாயோ
அவ்வளவுக்கவ்வளவு வாழ்ந்தவனாகிறாய்

— வெங்கைக்கிழான்

மிக எளிய சொற்களில் பிறருக்கு அறிவுரை கூறும் வண்ணம் அமைந்துள்ள அவர் கவிதையில் 'சொல்லலங்காரம்' இல்லையெனினும் தாம் எண்ணிய கருத்தினை மிக எளிமையாகவும், தெளிவாகவும் உணர்த்துகின்றார்.

## மடலும் செய்தியும்

நேரு, பாரதி, மறைமலையடிகள், அண்ணா, கலைஞர் போன்றவர்கள் கடிதங்கள் மூலம் தங்களுடைய எண்ணங்களை, உணர்ச்சிகளையும் மக்களுக்கு எடுத்துரைத்தனர். சர்மாவும் தன்னுடைய கடிதங்கள் மூலம் விடுதலை உணர்வு, அற உணர்வு முதலானவற்றைப் புலப்படுத்தியுள்ளார். இவர் ஜோதியில் எழுதிய மடல்களின் விவரம் வருமாறு :

1. தமையனின் கடிதம்
2. கனகாவின் கடிதங்கள்
3. மகனே உனக்கு

## முடிவுரை

எந்தத் துறையை எடுத்துக் கொண்டாலும் அதை விளக்கமாகவும், நுட்பமாகவும் ஆராய்ந்து தன்னுடைய கருத்துக்களை வெளியிட்டுள்ளார்.

ஏறத்தாழ ஐம்பதாண்டுகளுக்கு முன்னரே அதுவும் அயலவரின் பிடியில் தவித்துக் கொண்டிருந்த நேரத்தில் சிறந்த இதழாக ஜோதியை நடத்திய சர்மாவின் பணியும் திறமையும் பாராட்டப்பட வேண்டிய

தாகும். அன்றைக்கு நம் நாட்டு மக்களுக்காக நல்ல உணர்வுகளையும், அரசியல் செய்திகளையும் வெளியிட ஜோதியைப் பயன்படுத்தி உள்ளார்.

இரண்டாம் உலகப்போரின்போது ஆள்பதுங்கு குழியில் அமர்ந்து கொண்டு ஜோதியின் தலையங்கத்தை எழுதிய சர்மாவின் துணிவு எண்ணுதற்குரியது.

# பாரத தேவி

நிர்வாக ஆசிரியர் வ. ரா. தனிப்பிரதி 2 அணா

| மலர் 1 | ஞாயிறு 23-7-'39 | இதழ் 3 |
|---|---|---|

## பொருள் அடக்கம்

# பாரத தேவி

வீ. அரசு

## பின்னணி

வ. ராமசாமி அய்யங்கார் வ.ரா. என்றே அறியப்படுகிறார். வ.ரா. தமிழ்ப் பத்திரிகையாளர்களில் குறிப்பிடத்தக்க ஒருவர். பாரதி, திரு.வி.க., தெ.ச. சொக்கலிங்கம், வ.ரா. என்று தமிழ்ப் பத்திரிகையாளர்கள் பட்டியல் தொடரும்... 9.7.39 முதல் 12.11.39 முடியப் 'பாரத தேவி' என்ற வார இதழை, வ.ரா. நிர்வாக ஆசிரியர் என்ற பொறுப்பில் இருந்து நடத்தியிருக்கிறார். இரண்டாம் உலகப் போர் தொடங்கிய சூழல், பிரித்தானியருக்கு எதிரான இருநிலை, தேசீய காங்கிரஸ் கட்சியின் மூன்றாவது கட்ட ஒத்துழையாமை இயக்கம் உருவான சூழல், பிரித்தானியர் நிர்வாகப் பொறுப்பை இந்தியாவில் உள்ள கட்சிகளிடம் பகிர்ந்து கொடுத்த நிலையில், அதனைப் பெறுவதற்கு இந்தியாவில் இருந்த கட்சிகள் தமக்குள் நிகழ்த்திய போர் போன்ற நிகழ்வுகளின் பின்னணியில் பாரததேவி இதழ் வெளிவந்தது. 58 ஆண்டுகளுக்கு முன்பு வந்த இந்த இதழை, இன்றைய (1997) சூழலில், நாம் மதிப்பீடு செய்ய முயலும்போது, பின்கண்ட அடிப்படைகளில் புரிந்து கொள்ளலாம்.

## தொடர்பு

அச்சு ஊடகம், இருபதாம் நூற்றாண்டில், மிக வேகமாக வளர்ந்து வந்த எழுத்துப் பயிற்சியால், வெகுசனங்களிடம் மிக முக்கியமான தொடர்பு ஊடகமாக வடிவம் பெற்றுவருகிறது. 1939இல் வெகுசனங்களுக்குத் தேவையான தொடர்பு ஊடகமாகப் 'பாரததேவி' எவ்விதம் செயல்பட்டது என்பதை அறிதல்.

எழுத்துப்பயிற்சி, வாசிப்புப் பழக்கத்தைக் கட்டமைக்கிறது. வாசிப்புப் பழக்கம், இதழியல் என்ற துறையை உருவாக்குகிறது. வாசிப்பவர்களின் பிறநுகர்வுப் பொருட்களை அறிமுகப்படுத்தும் பணியையும் இதழியல் செய்கிறது; இதனால் விளம்பரம் என்ற வணிகச் செயல்பாட்டுக்கு இதழியல், மிக ஆழமாக முகம்கொடுப்பது அவசியமாகிப் போகிறது. விளம்பரமே இதழ் வணிகத்தின் முக்கியமான அடிப்படையாக அமைவதால், வாசிப்பாளர்களைப் பெருக்குவதற்கு, இதழ்கள் வாசிப்புப் பழக்கம் சார்ந்த உத்திகளைக் கைக்கொள்கின்றன. இவைகளை இதழியல் போக்குகள் என்று அழைக்கிறோம். 'பாரததேவி' வெளிவந்த காலத்தில், மேற்குறித்த பின்புலத்தில் எவ்விதம் செயல்பட்டது என்பது குறித்து அறிதல்.

மனிதர்கள், புனைவுகளைப் பார்த்தல் (ஓவியம், சிற்பம், கட்டிடம் மற்றும் பிற வரைகலைகள்) என்ற தளத்தில் செயல்படுதல்; புனைவுகளைக் கேட்டல் (கதை கேட்டல்...) என்ற தளத்தில் செயல்படுதல் ஆகிய இரண்டின் இணைப்பாக, வாசித்தல் என்ற புதிய எழுத்துப் பயிற்சித் தளத்தில் செயல்படுதலே வாசிக்கும் புனைவு உருவானதன் அடிப்படையாகும். இவ்வகையான புனைவுகளை உருவாக்குதல் மற்றும் கட்டமைத்தல் ஆகியவற்றில் இதழ்கள் முக்கியப் பங்காற்றுகின்றன. இந்தப் பின்புலத்தில் 'பாரததேவி' எவ்வகையான புனைவுகளை உருவாக்கியது என்பதை அறிதல்.

வாசிப்புப் பழக்கம், இதழியலின் அடிப்படையாக அமைவதால், ஒவ்வொரு இதழும், வாசிப்பு நோக்கில் மொழியமைப்பு மற்றும் புனைவுகளின் வடிவ அமைப்பு ஆகியவற்றைப் புதிது புதிதாக உருவாக்குகின்றன. 'பாரததேவி' இவ்வகையில் எப்படிச் செயல்பட்டுள்ளது என்பதை அறிதல்.

மேற்குறிப்பிட்ட அடிப்படைகளில், பாரததேவி இதழ்ச் செயல்பாட்டினை, சில எடுத்துக்காட்டுக்களுடன் (இதழில் உள்ள) சுருக்கமாக விவாதிப்பதே இங்கு நமது நோக்கமாக அமைகிறது. மிகக் குறுகிய காலம் மட்டுமே இவ்விதழ் வெளிவந்ததால், மேற்குறிப்பிட்ட அடிப்படைகளில் விவாதிப்பதற்கும் வாய்ப்பாக அமைகிறது.

## எதிர்ப்புக் குரல்

தமிழ் அச்சு ஊடகம், தன்னளவில் வணிகத் தன்மையைப் பெறு வதற்கு முன்பு, பிரித்தானியருக்கு எதிரான இந்திய மக்களின் குரலா கவே பெரும்பகுதி செயல்பட்டது. தமிழ்ச் செய்தி இதழியல், பிரித் தானியருக்கு எதிரான செயல்பாடுகளின் வளர்ச்சியின் ஊடாகவே வளர்ந்து வந்தது. காங்கிரஸ் கட்சியின் செயல்பாடுகளுக்கும் அச்சு ஊடகத்திற்குமான உறவே தொடக்ககால இதழியலாக, இந்தியா வில் உருப்பெற்றதைக் காணமுடியும். தமிழில் பாரதி தொடங்கி, செய்தி இதழியல் பிரித்தானியருக்கு எதிரான கலகக் குரலாக இருந்து வந்தது. வ.ரா. தனது இதழியல் உறவு முழுவதையும் பிரித்தானிய ருக்கு எதிரான கலகத்திற்கே பயன்படுத்திவந்தார். பாரததேவியும் அவ் வகை யில்தான் செயல்பட்டது. வ.ரா. பாரததேவியில் எழுதியுள்ள தலையங்கங்கள் கூறும் செய்திகள் பின்வருமாறு அமைகின்றன.

காந்தியின் தலைமையை, தெய்வத் தலைமையாக ஏற்றுக் கொண்டு, அதற்கு எதிரான செயல்பாடுகளைக் கடுமையாகச் சாடுதல். காந்தியாரின் கோட்பாடுகளுக்கு உடன்படாத நிலையில் செயல்பட்ட நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ், எஸ். சீனிவாச அய்யங்கார் ஆகியோ ரையும், ஜின்னாவையும் தலையங்கங்கள் விமரிசனம் செய்துள்ளன. (9.7.39; 6.8.39; 20.8.39; 3.9.39; 17.9.39; 15.10.39) காந்தி தலைமைக்கு எதிராக நேதாஜி செயல்பாட்டில் வேகம் மிகுந்த காலம் இதுவாகும். எனவே அச்செய்தி தொடர்பாகவே அதிகமான தலை யங்கங்களை வ.ரா. எழுதியிருப்பதைக் காணமுடிகிறது.

இரண்டாம் உலகப்போர் தொடங்கிய காலத்தில் இவ்விதழ் வந்ததால், காங்கிரஸ் கட்சிக்கும் பிரித்தானிய நிர்வாகத்திற்கும், இப்போர் தொடர்பான நிலைப்பாடுகள் குறித்த தலையங்கங்கள் எழுதப்பட்டுள்ளன (20.8.39, 27.8.39, 10.9.39, 17.9.39, 24.9.39, 1.10.39, 8.10.39). இரண்டாம் உலகப்போரில், இந்தி யத் துருப்புகளைப் பயன்படுத்துதல், காங்கிரஸ் கட்சி போர் தொடர் பாகப் பிரிட்டனுடன் கொள்ள வேண்டிய நிலைப்பாடு போன்ற செய்தி களை வ.ரா. விவாதித்துள்ளார்.

## கோயில் நுழைவுப் போராட்டம்

இந்தக் காலத்தில், மதுரை மீனாட்சி அம்மன் கோயில் நுழைவுப் போராட்டம் நிகழ்ந்தது. இதில் ஈடுபட்ட வைத்தியநாத அய்யரைப்

பாராட்டித் தலையங்கம் எழுதியுள்ளார். ஆதிதிராவிட மக்களும் நாடார் இன மக்களும் கோவிலுக்குள் நுழையாமல் தடுக்கப்படுவதைக் கடுமையாக எதிர்த்துள்ளார் (16.7.39, 13.8.39).

பிரித்தானியர், பிரித்தாளும் சூழ்ச்சியை மேற்கொள்கின்றனர். இதற்கு ஜின்னாவும் சர். பன்னீர் செல்வமும் பலியாகக் கூடாது என்று தலையங்கங்களில் வ.ரா. எழுதியுள்ளார் (29.10.39, 5.11.39). சர். பன்னீர் செல்வம் பிரித்தானியரின் அடிமையாகச் செயல்படுகிறார் என்று இத்தலையங்கம் ஒன்று கூறுகிறது.

## காங்கிரஸ் இதழ்

1939களில் வெகுசனக் கட்சியாக காங்கிரஸ் இருந்தது. 14.9. 37இல் சென்னை இராஜதானியின் ஆட்சிப் பொறுப்பை, திரு. இராஜ கோபாலச்சாரியார் தலைமையில், காங்கிரஸ் ஆட்சி ஏற்றது. 28.10. 1939இல் ஆட்சிப் பொறுப்பைக் கைவிட்டது. இந்தக் காலச்சூழலில், இராஜாஜியின் தலைமையை ஏற்ற, காங்கிரஸ் பத்திரிகையாளராக வ.ரா. செயல்பட்டார். 'காங்கிரஸ் ஆட்சி' (1938), 'காங்கிரஸ் ஓராண்டு நிறைவு' (1938) ஆகிய சிறுவெளியீடுகளை வ.ரா. எழுதி வெளியிட் டார். இந்தக் காலச்சூழலில் 'தமிழ்நாடு' (1937) என்ற நாளிதழுக்கும் சில மாதங்கள் ஆசிரியராகச் செயல்பட்டார். எனவே, காங்கிரஸ் என்ற வெகுசனங்களின் கட்சியை, அம்மக்களிடம் தொடர்புபடுத்தும் ஊடக மாக, தமது இதழ்ப்பணியை வ.ரா. அமைத்துக் கொண்டார். காந்தியம் அவரால் முழுமையாக ஏற்றுக்கொள்ளப்பட்டு அது தொடர்பாகச் செயல்படும் இதழாகவே 'பாரததேவி'யை வ.ரா. வெளிப்படுத்தினார்.

" 'பாரததேவி'யில், காந்திஜியின் தத்துவமும் சொல்முறையும் விளக்கிச் சொல்லப்படும்'... எதையும் சத்தியாக்கிரகத் தராசில் நிறுத்து என்போரும் ஸயன்ஸைப் பற்றிச் சொல்லும். ஸினிமாவைப் பற்றியும் பேசும்; சுயராஜ்யம் அதன் மூச்சுக்காற்று". (முதல் இதழ் : 9.7.39, பக்கம். 9)

## காந்தியம்

காந்தியக் கருத்துக்களை வெளிப்படுத்தும் நோக்கில், பாரததேவி யில் சிறப்புத் தொடர்களையும் (Features) வ.ரா. எழுதியுள்ளார். 'ஆளுக்

குள் ஆளு; எத்தனை ஆளு', 'பெற்றோர் பள்ளி', 'பெரியோர் வாக்கு', 'பரதேசத் தபால்' போன்ற பகுதிகள் வ.ரா.வின் அரசியலை வெளிப் படுத்தும் பகுதியாக இதழில் தொடர்களாக அமைந்தன.

அச்சு ஊடகம், 'பாரததேவி' வெளிவந்த காலங்களில் எதனை முதன்மைப்படுத்த முனைந்ததோ, அதனைப் பாரததேவியும் அதனளவில் வெளிப்படுத்தியதைக் காணமுடிகிறது. அன்றைய நிகழ்வுகளின் பதிவுக்காக, இந்த இதழின் தலையங்கங்களை வ.ரா. பயன்படுத்தி யிருக்கிறார். 'மணிக்கொடி'யில் வ.ரா. செயல்பட்டதின் தொடர்ச்சியாகவே இது அமைகிறது.

## பரிசுப் போட்டிகள்

1930களில் 'ஆனந்த விகடன்' பாணியே, தமிழ் இதழியல் வாசிப் புப் பழக்கத்தைப் புரிந்து கொள்ள உதவும். அக்காலங்களில், ஆனந்த விகடன் இதழியல் செயல்பாடுகளை ஏற்றுக்கொள்ளல் அல்லது அதனை விமரிசனம் செய்தல் என்பதே இதழியல் செயல்பாடாக அமைந் திருந்தது. ஆனந்த விகடன், தமது வாசிப்பாளர்களைப் பெருக்கிக் கொள்ளப் பல போட்டிகளை நடத்தியது. பல குலுக்கல் பரிசுகளையும் வழங்கியது. இத்தன்மைகளை, வ.ரா. மணிக்கொடியில் ஆசிரியராக இருந்தபோது கடுமையாக விமரிசனம் செய்தார். ஆனால் கொழும்பில் 'வீரகேசரி'யில் பணியாற்றியபோது, போட்டிப் பரிசுகளை நடைமுறைப் படுத்தியதாக, புதுமைப்பித்தனும் பி.எஸ். இராமையாவும் வ.ரா.வை, விமரிசனம் செய்து தினமணி (21.9.1935) 'ஆராய்ச்சி மணி' என்னும் பகுதியில் எழுதியுள்ளனர். பாரததேவி இதழில் வ.ரா. ஜோதிடப் பகுதி களுக்கு மிக அதிகமான இடங்களை ஒதுக்கியுள்ளார் (10 பக்கங்கள்). வ.ரா. தமது எழுத்துக்களில் ஜோதிடத்தை ஏற்றுக்கொண்டவராக அறிய முடியவில்லை. ஆனால், இந்த இதழில் இப்பகுதி மிக விரிவாக இடம் பெற்றிருப்பதற்கான காரணம், வாசிப்பாளர்களின் நுகர்வுத் தேவை நோக்கியதா? என்று வினா எழுப்பும்போது, அவ்வகையிலும் கூற இயலாத நிலை உள்ளது. ஏனெனில் இக்காலத்தில் வெளிவந்த ஆனந்த விகடனில் ஜோதிடக் குறிப்புகள் இடம்பெறவில்லை. பாரத தேவி யில், வ.ரா.வோடு பணியாற்றிய சி.சு. செல்லப்பாவைச் சந்தித்துக் கேட்ட போது (11.12.97) அவர் கூறிய விவரங்கள், இதழியல் தொடர்பான சில கூறுகளைப் புரிந்துகொள்ள உதவும்.

'பாரததேவி' இதழை முதலீடு போட்டு நடத்தியவர் திரு. சதானந்தன் அவர்கள். 'தமிழ்நாடு' நாளிதழுக்கும் இவரே முதலீடு போட்டவர். இவருக்கு ஜோதிடத்தில் மிகுந்த ஈடுபாடு உண்டாம். எனவே அதனைப் 'பாரததேவி'யில் நடைமுறைப்படுத்தியுள்ளார்.

வாசிப்போர் தேவை, பத்திரிகையின் ஆசிரியர் நிலைப்பாடு ஆகியவற்றையும் மீறி, முதலீடு செய்வோரின் நிலைப்பாடு இங்கு செயல்பட்டிருப்பதை அறியமுடிகிறது. இதனால்தானோ என்னவோ, வணிகரீதியில் இவ்விதழ் வெற்றிபெறாமல் போனது என்றும் கருதலாம்.

## சித்திர விளக்கம்

ஆனந்தவிகடன் அட்டையில் போடும் படங்கள் தொடர்பாகச் 'சித்திர விளக்கம்' என்ற பகுதியை இதழின் உள்ளே அமைத்து வந்தது. பாரததேவியும் முதல் 11 இதழில் தொடர்ச்சியாக, ஆர்யா என்ற ஓவியரால் வரையப்பட்ட புராணக்கதை ஒன்றின் படங்களை வரைந்து வெளியிட்டது. 'கலைஞானாக வரலாறு' என்ற தொடர், இதழின் உள்ளே எழுதப்பட்டது. இதுவும் வாசிப்புத் தேவை கருதியதாக அமையவில்லை. ஆனந்த விகடன் வாசிப்பை, தவறாக நகல் செய்வதாக இத்தன்மை அமைந்ததாகக் கூறலாம். எனவே 1930களில் உருவான வாசிப்புப் பழக்கத்தை நோக்கிய இதழாக வ.ரா.வின் 'பாரததேவி'யும் பல கூறுகளில் கட்டமைக்க முயன்றிருப்பதைக் காணமுடிகிறது. ஆனால், வணிக அளவில் வாசிப்பாளர்களைப் பெருக்கவில்லை. மேலும் வாசிப்பாளர் பெருகாத நிலையில் வணிக விளம்பரங்களும் பெறமுடியாத நிலை ஏற்படுவது தவிர்க்கமுடியாதது. 'பாரததேவி'க்கு விளம்பரங்கள் கிடைக்கவில்லை. எனவே பல புனைபெயர்களில் நாங்கள் (வ.ரா., சி.சு.செ., கு.ப.ரா. மற்றும் இருவர்) பக்கங்களை நிரப்பவேண்டிய அவசியம் நேரிட்டது" என்றார் சி.சு. செல்லப்பா (சந்திப்பு 11.12.97). ஆனந்த விகடன் வாசிப்பாளர்களை நோக்கிய பயணத்தில் 'பாரததேவி' முயன்று, வெற்றிபெற இயலாத சூழல் ஏற்பட்டதை நாம் அறியமுடிகிறது. ஏனெனில், 'மணிக்கொடி'யில் செயல்பட்ட வ.ரா., 'பாரததேவி'யில் ஆனந்த விகடனை நோக்கிச் செயல்பட்டதால் ஏற்பட்ட நிகழ்வாகவே இதனை நாம் புரிந்து கொள்ளலாம். வ.ரா. என்ற பத்திரிகையாளர் - வாசிப்புப் பழக்க வளர்ச்சி - இதழியல் செயல்பாடுகள் என்ற பல கூறுகளின் தன்மைகளைப் புரிந்துகொள்ளப் 'பாரததேவி' இதழ் உதவக்கூடும்.

## பேசும்படம்

1930 தமிழ் பேசும்படம், வெகுசனங்களிடம் மிகுந்த செல்வாக்குப் பெற்ற காலமாகும். அச்சு ஊடகம், பேசும் படம் பற்றி எழுதுவதில் அக்கறை செலுத்தியது. ஆனந்த விகடனில் கல்கி அப்பணியை விரிவாகச் செய்து வந்தார். 'தியாக பூமி' என்ற கல்கியின் கதை பேசும் படத்திற்கு எழுதப்பட்டு, பேசும் படமாக்கப்பட்ட பின்னரே அச்சு வடிவில் வந்தது. பேசும் படத்தில் உள்ள நிழற்படங்கள் புத்தகத்திலும், இதழ்த் தொடரிலும் அச்சிடப்பட்டன. அன்றைய படைப்பாளர்கள் பலரும் பேசும் படத் துறையில் தமது கவனத்தைச் செலுத்தினர். இந்தக் காலத்தில் வ.ரா. இராமனுசர் என்ற படத்திற்குக் கதை, வசனம் எழுதினார். பாரத தேவியில் பேசும்படத்திற்கு நிறைய பக்கங்களை வ.ரா. ஒதுக்கினார். நிழற்படங்கள் முழுப்பக்க அளவில் ஒவ்வொரு இதழிலும் (குறைந்தது 4 பக்கங்கள்) அச்சிடப்பட்டன. பேசும்படம் தயாரிப்பது தொடர்பான செய்திகள் இவ்விதழில் வெளியிடப்பட்டன. 'தியாகபூமி', 'அதிஷ்ட்டம்', 'திருநீலகண்டர்' போன்ற பேசும் படங்கள் குறித்து விரிவாக விமரிசனங்கள் எழுதப்பட்டன.

வாசிப்பு ஊடகம், வாசிப்பாளர்களின் அன்றைய பிற ஊடகத் தொடர்புகளையும் கவனத்தில் கொண்டு செயல்பட்டதைக் காணமுடிகிறது. ஆனந்த விகடன் தொடங்கி, அன்றைய இதழ்கள் அனைத்திலும் மிகுதியான பக்கங்களை எடுத்துக்கொண்ட பேசும்படம் தொடர்பான செய்திகள், 1950களில், அத்தன்மையை மட்டும் முதன்மைப் படுத்தி உருவான வாசிப்பு ஊடகமாய் 'குமுதம்' வடிவம் பெற்றதை நாம் அறிய முடிகிறது. ஆனந்த விகடனிலிருந்து குமுதம் உருப்பெற, பேசும்படங்களே முக்கிய பங்காற்றின என்று கருதலாம். எனவே பாரததேவியில் பேசும்படம் தொடர்பான செய்திகள் இடம்பெற்றமை அன்றைய வாசிப்பாளர் நேர்த்தியாகவே நாம் புரிந்துகொள்ள முடிகிறது.

அச்சு ஊடகத்திற்கும் பிறஊடகங்களுக்கும் உள்ள தொடர்பை மேற்குறித்த 'ஆனந்த விகடன் பாணி', 'குமுதம் பாணி' என்ற கட்டமைப்புகளில் புரிந்து கொள்ளலாம். தமிழக அச்சு ஊடகம், பேசும்பட ஊடகம், தமிழகக் கட்சி அரசியல், திராவிட இயக்கக் கட்சிகள் என்று அனைத்து நிலைகளிலும் ஊடகத்தின் செயல்பாடுகளை, அவை தமக்குள் கொண்டுள்ள உறவுகளை நாம் புரிந்துகொள்ள முடிகிறது.

வாசிப்புப் பழக்கத்தில் உருவான, அச்சு வழிப்பட்ட புனைவுகள் உருவாவதில் இதழ்கள் மிக முக்கிய இடத்தைப் பெறுகின்றன. 'பாரததேவி' இதழ் வழி தமிழ்ப் புனைகதை உருவாக்கச் செயல் பாட்டையும் புரிந்துகொள்ள முயலலாம்.

## புனைகதை

1930 - 40 ஆண்டுக் காலத்தில் என்பது தமிழ்ப் புனைகதை உருவாக்கத்தின் இரண்டாம் கட்டமாகும். பிரித்தானியர் எதிர்ப்புப் பணிக்கென உருவாக்கப்பட்ட இதழ்கள் இப்பணியையும் செய்தன. சுதந்திரச் சங்கு (1930 - 34), காந்தி (1931), தனவைசிய ஊழியன் (1920 - 1939), குமரன் (1925), தினமணி (1934), கலைமகள் (1932), மணிக்கொடி (1933 - 38), ஹனுமான் (1938), ஜோதி (1938), பாரதமணி (1938), சூறாவளி (1938), ஆனந்த விகடன் (1928), சக்தி (1939) போன்ற 1930களில் வெளிவந்த இதழ்கள், அன்றைய புனைகதைப் படைப்பாளர்கள் அனைவரையும் தமிழுக்கு அறிமுகப்படுத்தியதை நாம் அறிவோம். பாரததேவியும் இப்பணியில் குறிப்பிடத்தக்க பங்காற்றியிருப்பதை அறியமுடிகிறது.

வ.ரா., கு.ப.ரா., சி.சு. செல்லப்பா, அ.கி. ஜெயராமன், பு.வே. சுப்பிரமணியன் ஆகியோர் தொடர்ச்சியாகப் (ஏறக்குறைய அனைத்து இதழ்களிலும்) பல புனைபெயர்களில் பாரததேவியில் எழுதியுள்ளனர். 1930களின் புனைகதை உருவாக்கத்தில், வ.ரா., கு.ப.ரா., சி.சு.செ. ஆகியோர் பங்களிப்பிற்கும் பாரததேவி இதழுக்குமான உறவை அறி தல் இயலும். இந்தப் பின்புலத்தில் படைப்பாளர்களுக்கும் இதழுக்கு மான உறவுநிலைகளைப் புரிந்துகொள்ள இயலும்.

வ.ரா. 'காந்தி'யில் எழுதிய 'தமிழ்ப் பெரியார்கள்', 'சுப்பிரமணிய பாரதியார் சரித்திரம்' ஆகிய தொடர்கள், அவரது பத்திரிகைச் சிறப்புத் தொடருக்கான 'மொழி'யைப் பெற்றிருப்பதை அறிய முடிந்தது. அந்த மொழி, மணிக்கொடியில் விரிவாக வெளிப்பட்டது. தமிழ்ச் சிறியார் களை வ.ரா. மணிக்கொடியில் அறிமுகப்படுத்தினார். சமூகத்தின் உதிரிப் பாட்டாளி மக்கள், வாசிப்பாளர்களின் சுவையான விஷயமாக அறியப்பட்டது. அதனை 'நடைச்சித்திரம்', 'வாழ்க்கைச் சித்திரம்', 'வாழ்க்கை விநோதம்' என்று தமிழ்ப் புனைவுலகம் பெயரிட்டது. வ.ரா. வின் இவ்வகைப் புனைவு இதழியல்வழி தமிழுக்குக் கிடைத்த

ஒன்றே. 'காந்தி', 'மணிக்கொடி'யில் வெளிப்பட்ட வ.ரா.வின் புனைவு களைப் 'பாரதேவி'யில் காணமுடியவில்லை.

## உரையாடல் வடிவம்

மனிதர்களைப் புனைவுகள் இன்றி, சித்திரிக்க முற்பட்ட மணிக் கொடி வ.ரா.; பாரததேவியில் எல்லாவற்றிலும் காந்தியத்தைப் புனைய முயலுவதைக் காண முடிகிறது. மேலும், ஆனந்த விகடன் வழிப்பட்ட உரையாடல் வடிவம், 1939களில் இதழ்களில் ஏற்படுத்திய தாக்கம் 'பாரததேவி'யிலும் காண முடிகிறது. அவ்வகை மொழியையும் வ.ரா. பாரததேவியில் மிகுதியாகக் கைக் கொண்டுள்ளார் (சாந்தாவின் சுயம்வரம் - 9.7.39). இவ்வகை உரையாடல் வடிவமே பின்னர் அவர், 'சொர்க்கத்தில் சம்பாஷணை' தொகுப்பில் உள்ள படைப்புகளை உருவாக்க வழிகண்டது. இன்றைய காலச்சூழலில் உருவான வானொ லியும் இவ்வகை மொழி உருவாக்கத்திற்கான காரணமாக அமைய வாய்ப்புண்டு. 'பாரததேவி'யில் வானொலியில் வெளியான பல ஆக்கங் கள் வெளியிடப்பட்டுள்ளன. வ.ரா.வின் நடைச்சித்திரச் செல்வாக் குக்கு உட்பட்ட, அவரது தம்பி 'வரதன்' என்ற புனைபெயரில் பாரத தேவியில் பல புனைவுகளை உருவாக்கியிருப்பதைக் காணமுடிகிறது (வெட்டிவீரன், 9.7.39). புனைவு உருவாக்கத்தில் வ.ரா. வின் செழுமை யைப் 'பாரததேவி'யில் காணமுடியவில்லை.

தமிழ்ச் சிறுகதை உருவாக்கப் பாரம்பரியத்தில் புதுமைப்பித்தன் அளவிற்கு, வேறொரு வகையில் மொழியாளுமை உடையவர் கு.ப. ரா. இவரது சிறுகதை ஆக்கத்தில் 'பாரததேவி' குறிப்பிடத்தக்க இடத் தைப் பெறுகிறது. 'சுதந்திரச் சங்கு', 'தினமணி', 'மணிக்கொடி' ஆகிய இதழ்களில் சுமார் 12 கதைகளை எழுதியிருந்த கு.ப.ரா., பாரததேவி யில் மட்டும் சுமார் 15 சிறுகதைகளை எழுதியுள்ளார். மன்னிப்பு, படுத்த படுக்கையிலே, சதைப்பற்றற்ற காதல், குற்றவாளி, என்ன அத்தாட்சி, வைர மோதிரம், குரலும் பதிலும், மின்னக்கலை போன்ற கதைகளைக் கு.ப.ரா. பாரததேவியில் எழுதியுள்ளார்.

சதயம், பரத்வாஜன், கரிச்சான், ராஜம் ஆகிய புனைபெயர்களில் பாரததேவியில் கு.ப.ரா. எழுதினார். கு.ப.ரா. பாரததேவியில் முழுநேரப் பணியில் இருந்த சூழல், அவர் மிகுதியாக எழுதுவதற்கான வாய்ப்பை உருவாக்கியுள்ளது. ஓரங்க நாடகம், உரையாடல் வடிவம், கட்டுரைக்

தமிழகத்தில் வெளிவந்த செல்வாக்குமிக்க குறிப்பிடத்தக்க வார இதழ்களுள் ஒன்று ஊழியன் எனலாம். ஊழியன் பின்னாளில் - முப்பது களில் சென்னையிலிருந்து வெளிவந்தது. அந்தக் காலகட்டமே ஊழி 'யன் இதழ் மக்களிடையே செல்வாக்கின் உச்சத்தில் இருந்த காலம் எனத் தெரிகிறது. வண்ணப் படங்கள் - ஆப்டோன் படங்கள், கீற்று வரை படங்கள், கேலிச் சித்திரங்கள் ஆகியவற்றை அதிக எண்ணிக்கையில் தாங்கியதாகக் 'கால் டிம்மி' அளவில் நாற்பத்தாறு பக்கங்களைக் கொண்டதாகத் 'தேசிய சித்திர வாரப் பத்திரிகை' என்னும் பெயர் தாங்கியதாக வெளிவந்தது.

நாட்டு விடுதலை - சமுதாய விடுதலை - அறிவியல் முன்னேற் றம் - வணிகம் தொடர்பான செய்திகள் - காந்தியக் கருத்துக்கள் - காங்கிரஸ் இயக்கச் செய்திகள் - இலக்கியப் பகுதிகள், உலக நாடுகளின் வளர்ச்சி பற்றிய கட்டுரைகள் - தொழிலாளர் நலம் - தொழில் முன்னேற்றம் - விளையாட்டு - கலைத்துறைச் செய்திகள் - திரையுலகச் செய்திகள் ஆகியவற்றை உள்ளடக்கியதாக ஊழியன் வடிவம் கொண்டுலவியது. முதியோர், இளைஞர், ஆடவர், பெண்டிர் எனச் சமுதாயத்தின் எல்லாப் பிரிவு மக்களுக்கும் உரிய இதழாக ஊழியன் தன்னை வடிவமைத்துக் கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

ஒவ்வொரு இதழிலும் விளம்பரப் பகுதிகளும் ஏராளமாக இடம் பெற்றுள்ளன. வணிக நிறுவனங்கள் ஊழியன் இதழில் போட்டிபோட்டு விளம்பரம் செய்தனவோ என எண்ணத் தோன்றுகிறது. ஆதலின், இதழ் களை நடத்துவதில் எல்லா இதழாசிரியருக்கும் வழக்கமாக நேர்ந்து விடும் பொருளாதார நெருக்கடி சிறிதும் ஊழியன் இதழுக்கோ அதன் ஆசிரியருக்கோ இருந்திருக்க வாய்ப்பில்லை என்றே தோன்றுகிறது. இதழின் செய்தி வெளிப்பாட்டு நிலையிலும் இதழின் வெளியீட்டுப் பின்னணி நிலையிலும் வளமையும் செல்வாக்கும் பெற்ற இதழாக ஊழியன் திகழ்ந்துள்ளது.

ஊழியன் இதழின் வாசகர்களும் சந்தாதாரர்களும் தமிழகத் தில் மட்டும் அல்லாது, கடல் கடந்து தமிழர்கள் வாழும் அயல் நாடு களான சிங்கப்பூர், மலேசியா, சைகோன், இலங்கை, பர்மா ஆகிய வற்றிலும் இருந்துள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

டி.எம். ஜம்புநாதன், வி.எஸ். சுந்தரராமன், எம். கல்யாணராமன் போன்ற பலரின் படைப்புக்களும் பாரததேவியில் இடம்பெற்றுள்ளன. இந்தி, மராத்தி, கன்னடம் போன்ற மொழிகளின் சிறுகதைகள் 'பாரததேவி'யில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளன.

1930ஆம் ஆண்டுகளில் உருவான புனைகதைகளில் 'பாரததேவி' யில் வெளிவந்த கதைகளுக்கும் உரிய இடமுண்டு. 'மணிக்கொடி' வழியாகவே தமிழ்ச் சிறுகதை உருவாக்க மரபை அறிமுகப்படுத்தி யிருக்கும் தமிழ்ச்சூழல், மறுபரிசீலனைக்கு உட்படுத்துவது அவசிய மாகும். இந்தப் பின்புலத்தில் கு.ப.ரா., சி.சு.செ. ஆகியோரின் சிறு கதை உருவாக்க வரலாற்றில் பாரததேவியின் இடம் கணிக்கப்படுவது அவசியமாகும். குறுகிய காலத்தில், வேறு இதழியல் ஆக்கங்களை விட, புனைகதை ஆக்கம், குறிப்பாகச் சிறுகதையில் பாரததேவியின் இடம் குறிப்பிடத்தக்கது.

1930களில், வாசிப்பாளர்க்குரிய மொழி உருவாக்கத்தில், ஆனந்த விகடன் பாணி பெரிதும் செல்வாக்குடையதாக உருவானது. அது அடிப்படையில் பேச்சு வடிவமும் பேச்சு மொழியும் முதன்மைப்பட்ட மொழியாக அமைந்தது. எந்தச் செய்தியையும் கதை வடிவத்தில் சொல் வது என்பதும் இதழ் வாசிப்பாளருக்கான மொழியாகவும் அறியப் பட்டது. இந்தப் பின்புலத்தில், 'துக்கடா', 'பொழுதுபோக்கு', 'சிரிக் காதே', 'சின்னஞ்சிறுகதை', 'அப்பளக் கச்சேரி' போன்ற பகுதிகள் ஆனந்த விகடனில் தொடர்களாக அமைந்திருந்தன. இத்தன்மை படிப் படியாகத் தமிழ் இதழியலில் உருவாகி, ஆனந்த விகடனில் முழுமை பெற்றுவிட்டது என்று கூறலாம். 'பஞ்சாமிர்தம்', 'ஆனந்தபோதினி' என்ற இதழ்களிலும் இவ்வகைக் கூறுகளைக் காணமுடியும். இந்தப் பின் புலத்தில் பாரததேவி, தமது வாசிப்பாளர்களுக்காக உருவாக்கிக் கொண்ட இரண்டு வடிவக்கூறுகளை இங்கு விவாதிக்கலாம்.

'பாரததேவி'யின் அனைத்து இதழ்களிலும் 'உரையாடல் வடிவத்' தில் ஒன்று அல்லது இரண்டு ஆக்கங்கள் இடம்பெற்றிருப்பதைக் காணலாம். பாரததேவியில் மிகுதியாக எழுதியுள்ள அனைவரும் இவ் வடிவத்தைக் கையாண்டுள்ளனர். ஆனந்தவிகடனில் கூட, இவ்வளவு தொடர்ச்சியாக இவ்வடிவம் காணப்படவில்லை. பாரததேவி தமிழ்

இதழியலில், வாசிப்பாளருக்கான ஒரு வடிவமாக, உரையாடல் வடிவத்தைத் தெரிவு செய்திருப்பதைக் காணமுடிகிறது. முதல் இதழில் வ.ரா. தொடங்கி வைத்துள்ள இவ்வடிவம் கு.ப.ரா.வால் விரிவாகக் கைக்கொள்ளப் பெற்றுள்ளது. ஓரங்க நாடக வடிவத்திற்குரிய தன்மைகளைப் பெற்ற இவ்வடிவம், ஓரங்க நாடகமாக அமையாது, இருவர் பேசும் பேச்சாகவே அமைந்துள்ளது. வாசிப்பாளனுக்கு விறுவிறுப்பையும், பேச்சு ஒலியை வாசிப்பில் பெறும் அநுபவத்தையும் இவ்வடிவம் உருவாக்குகிறது என்று கருதமுடியும்.

## கட்டுரைக் கதை

பாரததேவியில் இடம்பெற்றுள்ள பிறிதொரு வடிவம் கட்டுரையும் கதையும் கலந்த கட்டுரைக் கதை. ஒரு குறிப்பிட்ட செய்தியைச் சொல்லுவதற்கு (கட்டுரைக்குரிய பண்பு இதுவாகும்) கதை வடிவத்தைப் பயன்படுத்தும் முறை இதுவாகும். வ.ரா.வின் ஆக்கங்களில் இத்தன்மை தொடக்கம் முதல் காணப்படுகிறது; எனவேதான் அவருடைய சிறுகதை என்று கூறப்படுவதில், கதைக்கான பண்புகள் குறைந்து கட்டுரைத் தன்மைகள் இடம் பெறுவதைக் காணமுடியும். பாரத தேவியில் அனைத்து இதழ்களிலும், அனைத்துப் படைப்பாளிகளும் இவ்வடிவத்தைப் பயன்படுத்தியுள்ளனர். சிறுகதை வடிவம் உருவாகி வந்த சூழலில், இவ்வகை வடிவமும் இதழ்களில் இடம் பெறத் தொடங்கின. இதன் வளர்ச்சி பின் பல இதழ்களில் அதிகமாகியிருப்பதைக் காணலாம்.

பாரததேவி என்ற அச்சு ஊடகம், தமது வாசிப்பாளர்களுக்கென உருவாக்கிய உரையாடல் வடிவம், கட்டுரைக்கதை ஆகியவை அச்சு ஊடகம் - வாசிப்புப் பழக்கம் - வடிவ உருவாக்கம் என்ற கூறுகளில் புரிந்து கொள்ளவேண்டிய ஒன்றாகும்.

வ.ரா.வின் பாரததேவி என்ற வார இதழ் (19 இதழ்கள்) தமிழ் இதழியல் வரலாற்றில் கீழ்க்குறித்த அடிப்படைகளில் கவனத்துக்கு உரிய ஒன்றாகும்.

அரசியல் இதழியல் கூறுகளையும் வணிக இதழியல் கூறுகளையும் ஒருங்கே வெளிப்படுத்த முயன்றமை.

கு.ப.ரா. போன்ற படைப்பாளிகள் செயல்பட வழிகண்டமை.

வ.ரா.வின் புதிய பரிமாணத்தைக் காண உதவியமை.

உரையாடல் வடிவம், கட்டுரைக் கதை போன்ற இதழியல் வடிவங்களை கண்டெடுத்தமை.

## முதன்மை ஆதாரங்கள்

பாரததேவி இதழ்கள் (9.7.39 முதல் 12.11.39 முடிய)

ஆனந்த விகடன் இதழ்கள் (1939)

## துணை ஆதாரங்கள்

1. கரிச்சான் குஞ்சு, கு.ப.ரா., வானதி பதிப்பகம், சென்னை, 1990
2. செல்லப்பா, சி.சு., என் சிறுகதைப் பாணி, விளக்கு வெளியீடு, சென்னை, 1995
3. மதிவாணன், பா., தெ.ச. சொக்கலிங்கத்தின் 'காந்தி' இதழ் - ஓர் ஆய்வு (அச்சிடப்படாத ஆய்வேடு) - தஞ்சை 1989
4. ராமையா, பி.எஸ்., மணிக்கொடி காலம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1980
5. Irschick Eugene. F. Tamil revivalism in the 1930s, Cre-4, Chennai, 1986.

## மலர்கள்

1. டி.எஸ். சொக்கலிங்கம் மணிமலர், சென்னை, 1959
2. வ.ரா. மணிமலர், சென்னை, 1948
3. மணிக்கொடி பொன்விழா மலர் (முனைவன்) குடந்தை, 1985
4. 'வைகை', கு.ப.ரா. நினைவுமலர், மதுரை, 1979 (இதழ் 21)

# சக்தி

மலர் : ௫ இதழ் ௩ — விஷு—புரட்டாசி


## தமிழனும் தமிழ்ப் பாட்டும்

சங்கீதமென்பது ஒருகாலத்திலே 'தேவலோகத்துக் கன்னிகை'யாக இருந்திருக்கலாம்; மனிதர்களிலே மேல் தளத்துக் கெழுந்ததொரு சிறு கோஷ்டியின் ஏகதேச இன்ப சாதனமாகவும் இருந்திருக்கலாம். காலம் மாறி வருகிறது. சர்வ கலைகளும் போக சாதனங்களும், 'ஜனநாயக'ப் பாதையில் சென்று கொண்டிருக்கின்றன. ஞானக் கலைகள் வேறே; போகக் கலைகள் வேறே. ஞானக் கலைகளை வேண்டுமானால், சகல ஜனங்களுக்கும் எட்டாமல் ஒதுக்கி வைத்திருக்க, அவசியம் ஏற்படலாம். போகக் கலைகளை இனி அப்படிச் செய்ய முடியாது. இன்று, கர்நாடக சங்கீதம் சம்பந்தமாக, தமிழ்ப் பாட்டு விவாதம் நடக்கிறதே அதை, இந்த முக்கியக் கொள்கையை உரை கல்லாகக் கொண்டுதான் ஆராயவேண்டும்.

தமிழ் மக்களின் முன்னிலையிலே, தமிழ்ப் பாடகர்கள், தமிழிலே பாடவேண்டும் என்று ஒரு யோசனையைச் சில தமிழன்பர்கள் கூறுகிறார்கள். இதைச் சிலர் எதிர்க்கிறார்கள். பிரமாத வாதப் பிரதிவாதங்கள் நடக்கின்றன. இங்கே நாம் மூன்று விஷயங்களைக் கவனிக்கவேண்டும்: (1) தமிழர் தமிழ்ப்பாட்டுப் பாடவேண்டும் என்ற யோசனை வந்ததற்குக் காரணம் என்ன? அது சரியா, தவறா? (2) இந்த யோசனையை உடனே நிறைவேற்ற முடியுமா? முடியாதென்றால், என்ன கஷ்டங்கள் உண்டு? (3) தமிழ்ப்பாட்டு வேண்டுமென்ற யோசனை சரியென்றால், அதை நிறைவேற்றுவதில் உள்ள கஷ்டங்களை எப்படியாவது சமாளித்துத் தானே ஆகவேண்டும்? அதற்கு வழியுண்டா?

இந்த மூன்று கேள்விகளையும் தனித் தனியாகக் கவனிப்போம்:

(1) இன்று தமிழ்ப் பாட்டுக் கச்சேரிகளிலே, முழுக்க முழுக்க வேறு பாஷைப் பாடல்களையே பாடுகிறார்கள். அடிப்படையாய் நோக்கும்போது, இது தமிழுக்கு இழுக்காகும்; தமிழனின் தன்மதிப்புக்குப் பங்கமாகும். இந்த ஒரே காரணம் போதும், தமிழிலே தமிழ்ப் பாட்டு வேண்டும் என்று வற்புறுத்துவதற்கு. ஆனால், இதற்குச் சில எதிர் வாதங்கள் சொல்லுகிறார்கள். சங்கீதத்துக்குப் பாஷைக் கட்டுப்பாடெல்லாம் கூடாது என்பது ஒரு வாதம். இது வாஸ்தவமானால், வேறு பாஷைகள் மட்டில் அதை ஏன் கட்டுப் படுத்திக் கொண்டிருக்க வேண்டும்? நமது பாஷை ஸாஹித்யங்கள் தான் வரட்டுமே? தமிழ் மொழி, சங்கீதத்துக்கு ஏற்றதல்ல என்று, முழு மோசமான, திடுக்கிடத்தக்க வாதத்தையும் சிலர் கூசாமல் சொல்லுகிறார்கள். அப்படியானால், தமிழுக்குப் பொருந்தாத ஒரு கலை, தமிழனுக்கு வேண்டவே வேண்டாம் என்றுதான் கூறத் தோன்றுகிறது. ஆனால் உண்மை அது அல்ல. தமிழ் மிக இனிமையான பாஷை. தமிழனின் செவி, சங்கீதத்தைப் பருகத் தக்க பக்குவம் பெற்றதென்றால், அந்தப் பக்குவம் அவனது பாஷைக்கும் சொந்தமாய்த்தா னிருக்க முடியும். பாஷை, ஜீவனுடையது. ஒரு ஜனங்களின் வாழ்க்கைக்கும் கலாசாரங்களுக்கும் மறைமுகமான தொரு வேர், பாஷைதான். ஒரு பாஷைக்கு ஒவ்வாத தொரு கலை, அந்த ஜனங்களுக்கும் பொருந்தாதென்று கண்டிப்பாய்ச் சொல்லிவிடலாம். அதிலும், சங்கீதம் போன்ற கலையில், நாதசுவை மட்டிலும் அல்ல, மொழி யின்பமும் உணர்ச்சிகளைக் கிளறுகிறது; உயர்தரமான நாதசுகத்தை மட்டிலும் பருகுவது, மிகுந்த சங்கீதப் பயிற்சி நிறைந்த சிலருக்கு மட்டில் சாத்தியமாக இருக்கலாம். மொழி இன்பத்தையும் கலக்கும் போதுதான், சங்கீதப் பயிற்சியற்ற சாமான்யரும் கூட, அதை அநுபவிக்க இயல்கிறது.

(2) ஆனால், தமிழ்ப் பாட்டு யோசனையை உடனே பரிபூர்ணமாய் நிறைவேற்றுவதில் சில சிரமங்கள் இருப்பதை, நாம் ஒப்புக் கொள்கிறோம். கர்நாடக சங்கீதம், தற்பொழுதுள்ள நிலையில், தெலுங்கு பாஷையைச் சுற்றியே பெரும்பாலும் வளர்ந்திருக்கிறது. பதங்களும் மற்றுமுள்ள பாடல்களுமாக, ஆயிரக்கணக்கான பாட்டுக்கள் தமிழிலே இருப்பது வாஸ்தவம். ஆனால், சங்கீதக் கலையையே ஜீவனாய்க் கருதி, முறையே கீதங்கள், வர்ணங்கள், கிருதிகள் முதலிய வற்றை, பல்வேறு ராக ஸ்வரூபங்களையும் தாளக் கட்டுக்களையும் உள் அடக்கித் தயாரித்த ஸாஹித்யங்கள் தமிழிலே இல்லையென்று ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். எந்தக் கலைக்கும் அதன் ஐதிகம் ஒரு மூலதனமாகும். புதிய மாறுதல்களைச் செய்யும் போது, அந்த ஐதிகத்தைப் பாழ்

# சக்தி

---

## பழ. அதியமான்

### இந்திய விடுதலைச் சூழல்

இந்திய விடுதலைப் போராட்டத்தில் உப்புச் சத்யாக்கிரகம் (1930) ஒரு முக்கிய நிகழ்வு. இது நிகழ்வுற்றபோது, ஆங்கில அரசாங்கம் கடுமையான நடவடிக்கை எடுத்தது. பெரிய அளவில் மக்கள் இதற்கு அணி திரளக் கூடும் என்று எதிர்பார்த்த ஆங்கில அரசாங்கம், போராட்டத்தை ஒடுக்க, கடும் நடவடிக்கையாக எதிர்ப் பாளர்களையெல்லாம் சிறையில் அடைத்தது. இதனால் நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் தொய்வு ஏற்பட்டது. இத்தொய்வைப் பயன்படுத்தி மக்கள் உள்ளங்களில் விடுதலை உணர்ச்சியை ஏற் படுத்தச் சிலர் முனைந்தனர். பத்திரிகைகள் இதில் பெரிதும் ஈடுபட முடியும் என அவர்கள் நினைத்தனர். அதன் விளைவே, முப்பதுகளில் தமிழ்ச்சூழலில் காந்தி, சுதந்திரச் சங்கு, மணிக்கொடி, தினமணி போன்ற இதழ்களின் தோற்றம். பெயர் நிலையிலும், வெளிவந்த கால அளவிலும், ஆசிரியர் பெயரிலும் வேறு வேறாக இருப்பினும், அரசியல் கோட்பாட்டில் பேரளவில் இவை ஒரே பாடலை வெவ்வேறு இராகங் களில் பாடின. ஆம் எல்லாம் காந்தியின் பாடல்தாம். இந்தக் கோஷ்டி கானத்தில் சேர்ந்தது இன்னொரு புதிய குரல். அது வை. கோவிந்தன் (1913 - 1966) என்கிற (மலேயாவில் தான் செய்த வட்டித் தொழில் பிடிக்காமல் சொந்த நாட்டுக்குத் தொழில் செய்ய வந்தவரின்) 'சக்தி'க் குரல்.

பத்திரிகைத் தொழிலில், அச்சுத் தொழிலில் எந்தவித முன் அனுபவமும் இல்லாமல் தன் பாரம்பரிய வியாபார அறிவு ஒன்றையே

முதலீடாகக் கொண்டு 'சக்தி' என்ற பெயரில் 1939 ஆகஸ்ட்டில் தொடங்கினார் வை.கோ.

## இதழ் வெளிவந்த காலம்

1939ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் தொடங்கப்பட்ட இவ் விதழில் ஆங்கில மாதங்களின் பெயர்களோ, ஆண்டுகளோ முன் அட்டை யில் குறிப்பிடப்படவில்லை. (பின் அட்டையில் ஆங்கில மாதத்தோடு ஆண்டும் குறிக்கப்பட்டிருக்கும்). தமிழ் ஆண்டு, தமிழ் மாதங்களின் பெயர்களுடனேயே வெளிவந்தன. பக்கங்களின் எண்கள் கூடத் தமிழி லேயே குறிப்பிடப்பட்டிருந்த சிறப்பும் இதற்கு உண்டு.

மாதம் ஒரு இதழாக இது வெளிவந்தது. தொடக்கத்தில் ஆறு இதழ்கள். ஒரு 'மலர்' என்றும் பின்னர் 12 இதழ்கள் ஒரு 'மலர்' என்றும் கணக்கிடப்பட்டுள்ளன. ஒரு மாத ஏடு 'இதழ்' என்று குறிக்கப்பட்டது. இடையில் சில இதழ்கள் வராமல் போனால், அடுத்து வந்த இதழ், இரண்டு மாதங்களுக்கு அல்லது மூன்று மாதங்களுக்கு இணைந்த ஒரே இதழாகக் கணக்கிடப்பட்டது.

1939 முதல் 1954 வரை கொஞ்சம் இடைவெளி விட்டு வெளி வந்த சக்தி மொத்தம் 141 இதழ்களை வெளியிட்டது. கொஞ்சம் இடை வெளி என்பது 1951 டிசம்பர் முதல் 1953 அக்டோபர் முடிய ஆகும். இக்காலத்தில் சக்தி வெளிவரவில்லை. பின்னர் 1953 நவம்பர் தொடங்கி 1954 ஏப்ரல் வரை மறுபடியும் வெளிவந்தது. 1950 மார்ச் சுக்குப் பிறகு, பத்திரிகைக் காகிதக் கட்டுப்பாட்டுச் சட்டம் வந்ததை யொட்டி, இதழாக (Journal) வெளிவராமல் புத்தகமாக (Book) சக்தி வெளிவந்தது. அவை மொத்தம் எட்டு ஆகும். இவை என் ஆராய்ச் சிக்கும், கண்ணிற்கும் புலப்பட்ட தகவல்கள். இதில் வை. கோவிந்தன் (ஆசிரியர்) அவர்களின் ஆதாரத்துடன் கூடிய வாக்குமூலமே இறுதி யானது. இப்படி ஒரு வாக்கு மூலம் இதுவரை கிடைக்கவில்லை.

## இதழின் உருவம்

சக்தி இதழ்கள், நேற்றைய 'சுப மங்களா'வின் அளவில் முதல் 35 இதழ்கள் வெளிவந்தன. பின்னர் வந்த 106 இதழ்களும் இன் றைய ஆனந்த விகடனைவிடச் சற்றுப் பெரிய அளவில் வந்தன. அச்சும் அமைப்பும் 'மஞ்சரி' இதழை நினைவுபடுத்துவன.

## விலை

1926களில் வெளிவந்த 'பஞ்சாமிர்தம்' (ஆசிரியர் அ. மாதவையா, மாத இதழ் - பக்கம் 88) இதழின் விலை 8 அணா ஆகும். ஏறக் குறைய 20 வருடம் கழித்து வெளிவந்த 'சக்தி' (மாத இதழ், பக்கம் 78 - 102 வரை) இதழின் விலை 4 அணா மட்டுமே. மக்களுக்குச் சென்று சேரவேண்டும், வியாபாரம் பெருக வேண்டும் என்ற நோக்கு டன் இதழ் வெளியிடப்பட்டதாகத் தெரிகிறது. இரண்டாவது உலகப் போர் நடந்த சமயத்தில் மட்டும், காகிதப் பற்றாக்குறை காரணமாக பக்கங்கள் குறைவாக வந்தன. இந்த நாலணா விலை நடுவில் ஆறு அணாவாக உயர்ந்து (சித்திரபானு - வைகாசி) பின் நாலணாவாக இறங்கிப் (சித்திரபானு - புரட்டாசி) பின் எட்டணாவாக (சி.பா. பங் குனி) ஆனது. அவ்விலையே பத்திரிகை நிற்கும் வரை தொடர்ந்தது.

## இதழின் அரசியற்கொள்கை

கட்டுரையின் தொடக்கத்திலேயே குறிப்பிட்டதுபோல, விடு தலை உணர்ச்சியை மக்களிடையே எழுப்புவதையே நோக்கமாகக் கொண்டே 'சக்தி'யும் பணிபுரிந்தது. இந்த விடுதலை உணர்ச்சியைப் பரப்பும் முறை பல விதங்களில் நடந்தது. காந்தியின் வழிகாட்டுதலி லும், சுபாஷின் வழிகாட்டுதலிலும் இப்பரப்பு முறை மிகப் பெரும் அளவில் மாறுபட்டு நின்றது வரலாற்றுண்மை. இம்மாறுபாட்டில், தமிழ்நாட்டின் பெரும்பான்மை பத்திரிகைகள் கைக்கொண்ட, காந்தி வழியில், விடுதலை உணர்ச்சியைப் பரப்பும் முறையையே சக்தி ஏற்றுக் கொண்டது.

> மஹாத்மா காந்தியின் அயராவுழைப்பினால் பாரத சமுதாயம் இன்று தலை நிமிர்ந்து நிற்கிறது. காங்கிரஸ் அரசியல் ஏற்று நாட்டிற்கு மகத்தான நன்மைகளைச் செய்து வருகிறது.
>
> மஹாத்மா வாழ்க! ராஜாஜி வாழ்க! காங்கிரஸ் வாழ்க! என்று தனது பணிவுள்ள வணக்கத்தைச் செலுத்துகிறது சக்தி.
>
> அவர் (மஹாத்மா) நில் என்றால் நிற்போம். செல் என்றால் செல்வோம். அதுவே நமது கடமையாம்...
>
> (சக்தி இதழ் 1) பிரமாதி - ஆவணி

என்று தெளிவாகத் தமது காங்கிரஸ் - காந்தி சார்பை (தனக்கென எது வும் வைத்துக் கொள்ளாத) அரசியல் கொள்கையாகப் பறை சாற்றி

விட்டே சக்தி தனது பணியைத் தொடங்கியது. தொடர்ந்து இறுதி வரை காந்தியின் கொள்கையில் மாறுபடாது சக்தி செயல்பட்டது. பாகிஸ்தான் பிரிவினையின் போது, இராஜாஜி பாகிஸ்தான் பிரி வினையை, காந்தியின் கருத்தை மீறி ஆதரித்தது நாம் அறிந்தது தான். மஹாத்மா வாழ்க! இராஜாஜி வாழ்க... என்று அரசியல் கொள் கையில் கூறி வந்த சக்தி, இப் பிரச்சினையில் காந்தியின் கருத்தையே வலியுறுத்தி, இராஜாஜியை எதிர்த்தது இங்கு நோக்கத்தக்கது.

முதல் இதழ் தொடங்கி, இறுதி இதழ் வரையிலும் காந்தியின் எழுத்தோ, பேச்சோ அல்லது அவர் பற்றிய செய்தியோ வராத இதழே இல்லையெனலாம். இதற்கிடையில் 'காந்தி மலர்' என்று சிறப்பு மலர் வெளியீடுகளும் உண்டு. ஒரு முழு மலரும், காந்தியை மாபெரும் தலைவராக, நிர்வாகியாக, சந்தியவந்தராக, அறிவாளியாகச் சித்தி ரித்து, சித்திரித்து மகிழ்ந்து, தெய்வமாக அவரைத் தமிழர்களிடையே உயர்த்திய பெருமை(!) சக்திக்கு உண்டு. காந்தி பற்றிய தொன்மக் குறியீட்டை(Myth) வளர்க்கசக்தி உதவியது என்றே சொல்லவேண்டும்.

## இலக்கியக் கொள்கை

சுத்தானந்த பாரதியாரின் மஹா சக்தி காவியம் தொடங்கி, வையா புரிப் பிள்ளையின் பாரத வெண்பா - ஆராய்ச்சி உள்ளிட்ட கட்டுரை உள்பட மு. அருணாசலம் அவர்களின் 'உரிமையுரை' வரை பலதரப் பட்ட இலக்கியக் கட்டுரைகளையும் வெளியிட்டது. தனக்கென்று எந்தக்கால வரையறையும் கொள்ளாது, தமிழ் இலக்கியப் பரப்பு முழுவதிலும் கவனம் செலுத்திய இதழாகவே சக்தி விளங் கியது.

இலக்கியம் குறித்து மிகுதியான கட்டுரை எழுதியவர்களாக, மு. அருணாசலம், ஆவுந்தன் மஞ்சேரி ஈஸ்வரன், வீ.ஆர்.எம். செட்டி யார், தி.ஜ.ர., வே. நாராயணன் ஆகியோரைக் குறிப்பிடலாம். மிகுதி யான சிறுகதை எழுதியவர்களாக கு. அழகிரிசாமி (6), லா.ச. ராமா மிருதம் (10), மஞ்சேரி ஈஸ்வரன் (14), சி.ஆர். சரோஜா (8) ஆகியோ ரைக் குறிப்பிடலாம். சக்தி இதழின் புனைகதை பங்களிப்புப் பற்றிய ஆய்வில், சா.பா. சீதாலட்சுமி சக்தியில் மொத்தம் 107 கதைகள் வெளி வந்ததாக கூறுகிறார் (பக்.14, பின்னிணைப்பு - தமிழ்ப் புனைகதை வரலாறு சக்தி இதழ்கள், செ.ப.க.).

## மொழிக்கொள்கை

சக்தி தோன்றி வளர்ந்து செழித்த காலகட்டத்தில்தான், மொழியை முதன்மைப்படுத்திய அரசியல், சமூக இயக்கமான திராவிட இயக்கம் கால் ஊன்றித் தளர்நடையிட்டுத் தமிழகம் முழுவதும் பெருகி வளர்ந்தது. மொழியை, செய்தி அறிவிக்கும் சாதனமாக மட்டும் கருதுகிற மனப்பக்குவத்தோடு பார்க்கிற நிலை மாற்றமும், சொந்த மொழி என்கிற பார்வையும் வரத் தொடங்கி, அதன் பெருமை விதந்தோதப்பட்ட காலம். இக்காலத்தில் சக்தி இதழ், எழுத்துச் சீர்திருத்தத்தில் ஒரு புதிய கொள்கையை முன்னிறுத்தப் பார்த்தது.

'ரோமன் எழுத்துகளில் தமிழை எழுதினால் நலம் என்று படுகிறது' என்று தமிழை ரோமன் லிபியில் எழுதும் முயற்சியைத் தொடங்கி வைத்தது சக்தி. இதை முன்மொழிவாக வைக்கும்போது சக்தி கீழ் வருமாறு எழுதியது:

'விடுதலை என்ற பத்திரிகை ஒரு நல்ல திருத்தத்தைக் கையாண்டது (லை-யை லைஎன்று எழுதிய திருத்தத்தையே - சக்தி குறிப்பிடுகிறது) அதை நம் நாடு ஏற்றுக் கொண்டதா? இல்லை. ஏன்? சுயமரியாதைக்காரர்கள் செய்த திருத்தம் என்பதற்காகவே அதனை ஒதுக்கினோம். இது முறையாகாது' என்று எழுத்துச் சீர்திருத்தத்தை நடைமுறைப்படுத்த சரியான பார்வையை முன்னிறுத்தியது. ஒரு முழுப் பக்கக் கட்டுரையை இந்த ரோமன் லிபியிலேயே எழுதி அச்சிட்டுக் காட்டியது. அடுத்து வந்த இதழ்களில், இம்முயற்சியைப் பாராட்டி வாசகர்கள் கடிதம் எழுதினர். வாசகர்களின் அத்தகைய பாராட்டுக் கடிதங்களும் அதே ரோமன் லிபியில் இருந்தது இங்கு குறிப்பிடத் தக்கது. எனினும் அம்முயற்சிகள் பின் விளைவுகள் ஏதும் இன்றி, வரலாற்றின் சாட்சியாக நின்று முடங்கிப்போயின.

எழுத்துச் சீர்திருத்தம் மட்டுமல்லாமல் மொழியைப் பிழையின்றிக் கையாளவேண்டும் என்பதிலும், நூல்கள், அச்சுப்பிழையின்றி வெளிவரவேண்டும் என்பதிலும் வை. கோவிந்தன் மிகுந்த கவனமாக இருந்தார் என்று தெரிகிறது.

> சில வியாபாரிகள் எங்கள் நூல்களிலிருந்து சில பகுதிகளைத் தமது நூல்களில் எடுத்தாளுகின்றனர். அவர்கள் அச்சிட்ட பகுதிகளில் ஏராளமான பிழைகளும் காண்கின்றன. அவ்வாறு வெளி

> யிடுவது நன்றாயில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். எமது உத்திரவு பெறாமல் அச்சுத் தாட்களை எங்களுக்கு அனுப்பிப் பிழை திருத்தம் செய்யாமல் எமது நூற்பகுதிகளை யாரும் வெளியிடுவது நேர்மையன்றெனத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

என்று ஓரிதழில் வை. கோவிந்தன் குறிப்பு வெளியிடுகிறார். அவரது நூல்களை மற்றவர்கள் வெளியிடுவது பற்றிய கவலையைவிடவும், பிழைகள் குறித்த கவலையே மிகுந்து தொனிப்பதைக் குறிப்பில் இருந்து உணர முடிகிறது.

## பத்திரிகையின் உள்ளடக்கம்

'மனித சமுதாயம் பூரணம் பெறுவதற்கு ஆத்ம ஞானமும் வேண்டும், லௌகீக ஞானமும் வேண்டும். அருளறிவு, பொருளறிவு, கடவுட் கலை, இயற்கலை ஆகியவற்றைச் சக்தி தூண்டுவாள். மடமை, வறுமை, அடிமைத்தனம் இம் மூன்றும் நமது நாட்டைத் துன்புறுத்தும் இடர்களாம். இவற்றை நீக்க அறிவு, தொழில் வீரசுதந்திரம் ஆகிய மூன்று சக்திகள் வேண்டும். நமக்கு இவ்வாறு எத்தனையோ அரும் பணிகள் உள்ளன. காலத்தின் தேவைக்கும், மாறுதலுக்கும் ஏற்றபடி, நாட்டின் புதிய முன்னேற்றத்தைக் கருதிச் சிறந்த அறிவாளிகளின் கூட்டுறவால் சக்தி பல துறைகளிலும் தன்னால் இயன்ற பணி செய்யவே தமிழர் முன் தோன்றுகிறாள்' என்று முதல் இதழிலேயே தன் கடமையைச் சக்தி வெளியிட்டது.

இந்த மேற்கண்ட அறிவிப்பையொட்டியே தமது இதழின் உள்ளடக்கத்தை வை. கோவிந்தன் உருவாக்கினார். அருளறிவுக்குச் சுவாமி சுத்தானந்த பாரதியாரின் ஆன்ம நேயக் கட்டுரைகளையும், மஹா சக்தி காவியத்தையும் வெளியிட்டார். பொருளறிவு வேண்டும் என்பதை நிலைநாட்ட, ல. காமேச்வரசர்மா, ஹாலாஸ்ய நாதன் ஆகியோரது கட்டுரைகளையும், பால்வளம், தொடர்பான கட்டுரைகளையும் வெளியிட்டார். இயற்கலையின் சிறப்பு விளங்க, பலவிதமான அறிவியல் கட்டுரைகளும் இதழில் வெளிவந்தன.

இலக்கியக்கலை, தொடர்பான கட்டுரைகள் பிரதானப் படுத்தப் படாமல், இதழியல் பாங்குகளுள் ஒன்றாகவே வந்தது சிறப்பான அம்சமாகும். நம் நாட்டு மக்களின் மடமையைப் போக்கக் கங்கணம் கட்டிக்

கொண்ட சக்தி, பிற நாட்டு அறிஞர்களின் கட்டுரைகளையும் நூல் களையும் வெளியிட்டு அறிவுத் துறையில் புரட்சியே செய்தது என்று சொல்லலாம். போர் நெருக்கடியைத் தீர்த்து வைக்கும் வழி, சீனாவில் நடப்பது என்ன? கிரீசில் தேர்தல் நாடகம் (ஏப்.1946), இந்தியாவில் பிரிட்டீஷ் ஆட்சி (கார்ல் மார்க்ஸ், சூலை 1947) போன்ற கட்டுரை களும் வெ. சாமிநாத சர்மா எழுதிய (20) அரசியல் கட்டுரைகள் அனைத்தும் இரா. ஹாலாஸ்ய நாதன் எழுதிய (10) மார்க்சீயம் பற்றிய கட்டுரைகள் அனைத்தும் 'சக்தி'யின் இத்துறைச் சாதனைகள் என்றே சொல்ல வேண்டும். உலக ஞானத்தைத் தமிழுக்கு இறக்குமதி செய்த செயற்கரிய செயலைச் செய்தது சக்தி என்று சொல்லலாம். 'ஸரஸி' எழுதிய கட்டுரைகளும் (10) வெளிநாட்டைத் தமிழர்களுக் குத் திறந்து காட்டிய ஜன்னல்கள் என்று குறிப்பிடலாம்.

## உள்ளடக்க மாறுதல்

சக்தி இதழை அது தோன்றி வெளிவந்த காலத்தை அடிப்படை யாகக் கொண்டு பாகுபாடு செய்து பார்க்கும்போது சில செய்திகள் புலனாகும். அதோடு, வை. கோவிந்தனோடு துணையாக இருந்த ஆசிரியர்களின் காலத்தையொட்டியும் செய்யப்படும் பாகுபாடும் சக்தி இதழைத் துலக்கமாக புரிந்துகொள்ள உதவும்.

சக்தி இதழின் தொடக்க காலம் (1939 - 1942), இடைக் காலம் (1943 - 1948), இறுதிக்காலம் (1949 - 1954) என்று பிரித்துப் பார்க்கலாம். இரண்டாம் உலகப் போரும், விடுதலைப் போராட்டமும், காந்தியின் மறைவும் இப்பாகுபாட்டைப் புரிந்து கொள்ள உதவின. நமது இந்தியச் சூழலை மட்டும் வைத்துப் பார்த்தால் விடுதலைக்கு முந்தையகாலம், விடுதலை பெற்ற காலம், விடுதலைக்குப் பிந்தைய காலம் எனப் புரிந்துகொள்ளலாம்.

நாம் முன்னரே குறிப்பிட்டது போல, காந்தியின் கருத்துகளைப் படிப் பதன் மூலம் விடுதலை உணர்ச்சியைப் பரப்புவதே தொடக்ககால இதழின் நோக்கமாக இருந்தது. சிறுகதைகளை விடவும் இக்காலத் தில் கட்டுரைகளே மிகுதியாக வந்ததாகத் தெரிகிறது.

இரண்டாவது கட்டம், விடுதலை பெற்ற காலம் (1942 - 1948) இந்தக் காலத்தில், வந்த கதைகளில் இரண்டாம் உலகப் போர் முடிந்த தால் ஏற்பட்ட விளைவுகள், அழிவுகள், வீரர்களின் எதிர்கால வாழ்வு

பற்றிய செய்திகள் மிகுதியாக வெளிவந்தன. நமது அடிமை வாழ்வுக் கான காரணத்தை வரலாற்றில் தேடும் பணியைச் செய்ததோடு, நமது கவர்னர்களாக இருந்தவர்களின் மோசமான பிழைகளையும் எடுத் துக்காட்டி, வரலாற்றைச் சரியாகப் பயன் கொண்ட காலமாக இதைக் குறிப்பிடலாம்.

மூன்றாவதும் இறுதியானதுமான காலகட்டம் 1949 - 1954. இக்கட்டத்தில் சிலகாலம் இதழ் வராமல் போனது. இக்கட்டத்தில் இலக்கியக் கட்டுரைகளும், கதைகளும் வந்ததாகத் தெரியவில்லை.

சக்தி இதழுக்கு அமைந்த துணையாசிரியர்கள் (அவ்விதழ்களில் குறிப்பிட்டிருந்தபடி) தி.ஜ.ர., கு. அழகிரிசாமி, சுப. நாராயணன் ஆகியோரே. சுத்தானந்த பாரதியார், ரகுநாதன், விஜய பாஸ்கரன் ஆகி யோர் இவ்விதழில் பணியாற்றியதாக மற்றவர் கூற்றிலிருந்து அறிய முடிகிறது. தமிழ்வாணன், சின்ன அண்ணாமலை ஆகியோரும் பணி யாற்றியதாக மா.சு. சம்பந்தம் கூறுகிறார்.

சுத்தானந்த பாரதியார் காலத்தில் (இதழின் தொடக்க காலம்: முதல் இதழில் சுத்தானந்த பாரதியார் எழுதியிருக்கிறார்) மதம், யோகம் தொடர்பான, அருளறிவு தொடர்பான செய்திகள் வலுப்பெற்றன.

திங்களூர் ஜகன்னாத ரங்கநாதன் காலத்தில், உள்ளடக்கம் மிகத் தெளிவான வகைப் பிரிப்புக்கு உள்ளாகியிருந்தது. கதை, கட்டுரை, வரலாறு, பாடல், குறிப்புகள் என அவை அமைந்தன.. கதையில் மொழிபெயர்ப்புக் கதைகளும், கட்டுரையில் சிறப்பான நேர்காணல் களும், சினிமா தொடர்பான அற்புதமான கட்டுரைகளும், வரலாற்றில் நம் அடிமைத்தனம், பெருமை தேடிய செய்திகளும் வெளிவந்தன. இதழியல், அச்சுக்கலை, சினிமா தி.ஜ.ர.வின் காலத்தில் முக்கிய இடம் பெற்றன.

கு. அழகிரிசாமியின் காலத்தில், 'இன்று தமிழ் நாட்டில் கிராமிய இலக்கியம் போதிய அளவுக்கு அச்சேறி வெளிவராதது ஒரு பெருங் குறையாக இருக்கிறது. ஆகவே, கிராமியக் கதைகள், நாட்டுப் பாடல் கள், தாலாட்டு' ஒப்பாரி, நலுங்கு, அச்சில் வெளிவராத பழம் புலவர் களின் சிறந்த பாடல்களை... நேயர்கள் எழுதி அனுப்பினால் சக்தி யில் பிரசுரிக்க ஏற்பாடு செய்கிறோம்' என்று (சர்வதாரி ஆடி 15/4)

சக்தி இதழில் அறிவிப்பே வெளிவருகிறது. அதையொட்டி, கிராமியக் கதை, பாடல்கள் கு. அழகிரிசாமியின் காலத்தில் வெளிவந்தன.

சுப. நாராயணன் காலத்தில் தமிழ்மொழி, எழுத்துச் சீர்திருத்தம் தொடர்பான செய்திகள் மிகுந்த கவனிப்புக்குள்ளாயின.

இப்படி ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு இலக்கிய வகை மிகுந்த கவனிப்புக்கு உள்ளரனாலும், மொத்தமாகப் பார்க்கும் போது, மொழிபெயர்ப்புக் கதைகளும், தழுவல் கதைகளும், பாலர் கதைகளும், அரசியல் அறிவு தொடர்பான கட்டுரைகளும், காந்தியம் தொடர்பான கட்டுரைகளும் சக்தியில் பிரதானமாக விளங்கின என்று சொல்ல முடியும்.

## சக்தியின் சாதனை

சக்தியின் சாதனைகளுள் குறிப்பிடத்தகுந்தது அயல்மொழி அறிஞர்களின் கதைகளைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தியது, அரசியல் சித்தாந்தங்களை எளிய தமிழில் அறிமுகப்படுத்தியது, சக்தி காரியலாயம், மலிவுப்பதிப்பில் தமிழின் பெருமையைப் பரப்பியது, டால்ஸ்டாய், பிளேட்டோ போன்றோரின் நூல்களை, கண்ணையும், கருத்தையும், காலத்தையும் கவர்வது மாதிரி வெளியிட்டது எனச் சுருக்கமாகச் சொல்லமுடியும். உண்மையில், சக்தியிடமிருந்து நாம் அறிந்துகொள்ள வேண்டியது இப்படிப் பல இருந்தாலும் மிக முக்கியமானது 'சக்தி' தன் இருப்பை நிலை நிறுத்திக்கொள்ளப் போராடியதும், இறுதியில் அதில் தோற்றதும்தான்.

பல பத்திரிகைகளுக்கு எதிரிகள் பளிச்செனத் தெரிவார்கள். சகோதர பத்திரிகைகளே எதிரிகளாவதும் நாம் பார்த்ததுதான். ஊழியனுக்குக் குமரனும், ஆனந்த விகடனுக்கு மணிக்கொடியும் (மாற்றியும் சொல்லவேண்டும்) இதற்குச் சான்றுகள்.

சென்னையில் இயங்கி வந்த சக்தி அச்சுக்கூடத்தை இரண்டாவது உலகப் போர் சமயத்தில் (சென்னைக்கு) அபாயம் நேருமென எதிர்பார்க்கப்பட்டு, காரைக்குடிக்கு மாற்றினர்.

'காரைக்குடிக்கு வந்தோம். பிரம்மாண்டமான ஓர் அச்சுக்கூடம் புதிய இடத்துக்கு வந்து வேலை தொடங்குவதென்றால், சுலபமான காரியமா? பல தொல்லைகள். எல்லாத் தொல்லைகளையும்விடப்

பெரிய தொல்லை 'டெக்ளரேஷன்' தொல்லை. டெக்ளரேஷன் கிடைக்கப் பலநாள் ஆகிவிட்டது... யுத்த காலமானதால், 'சக்தி'யைத் தயாரிக்கும் செலவு ஒரு பிரதிக்கு எட்டணா வரையில் ஆகிவிடுகிறது. அந்த நஷ்டத்தை ஈடுசெய்ய, விளம்பர வருமானம் போதுமானதல்ல. எனினும் 'சக்தி'யை நலிவுபடுத்த விருப்பமில்லை... ஆகவே தனிப்பிரதியின் விலையை இரண்டணா கூட்டி ஆறணாவாகவும் அதற்கேற்றபடி சந்தா விகிதங்களைச் சிறிது கூடுதலாகவும் உயர்த்தியிருக்கிறோம்.' (மலர் 6, இதழ் 5 சித்திரபானு வைகாசி).

இப்படியான இடமாற்றத் தொல்லைகளும், போர் நெருக்கடியால் ஏற்பட்ட விலை ஏற்றமும் சக்தியைச் சிரமத்திற்குள்ளாக்கின.

போர் நெருக்கடியை யொட்டி, மாத இதழாகச் சக்தியை நடத்த முடியாமல் போனதும், காகித தட்டுபாட்டுச் சட்டத்தை யொட்டி, சக்தியின் பக்கங்களை 54 ஆகக் குறைக்க நேர்ந்ததும், பத்திரிகைகளின் விளம்பர வருமானத்தின் மீது பத்து சதவிகித வரி விதிக்கும் உத்தேசத்துடன் வந்த புதிய மசோதாவும் (மே 1949) சக்திக்கு மிகுந்த சிரமத்தைத் தந்தன.

> சக்தி என்ற சிறந்த மாதப் பத்திரிகையைச் சுமார் 15 வருட காலம் நடத்தி, பெரும் தொகை நஷ்டப்பட்டவர் அவர் (வை.கோவிந்தன்)...
>
> கடந்த கால முற்போக்கு இதழ்கள்... யாவும் தொடர்ந்து நடை பெறாமல் போனதின் காரணம் என்ன? பத்திரிகை நடத்தும் திறமையற்றதாலா? தகுந்த விஷயதானம் செய்பவரில்லாமலா? அல்லவே அல்ல... வாசகர்களின் அசிரத்தை என்பதே என் துணிவு...

- இது (சரஸ்வதி காலம் நூலில் ப.113) மூத்த எழுத்தாளர் வல்லிக்கண்ணன் வாசகர் மு.ரா. சீனுவாசனின் கருத்தாகச் சொல்வது.

வாசிப்புப் பழக்கம் அறவே குறைந்து வருகிற சூழலில், வாசகர்களின் முயற்சியின்மையைக் குற்றம் சொல்லிவிட்டு ஒதுங்கி விடுவதே... ரொம்பவும் சுலபமான தீர்வாக நமக்குத் தெரிகிறது.

சரஸ்வதி தோற்றதும், சக்தி தோற்றதும் எப்படி? - நாம் யோசிக்கத்தான் வேண்டும்!

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் டாக்டர் மா. இராசமாணிக்கனார்
இதழியல் ஆய்வு மையமும் இணைந்து நடத்தும்

# இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்

## கருத்தரங்கம் – இரண்டு

## அழைப்பிதழ்

அன்புடையீர்,

வணக்கம்.

இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் என்னும் பொருள் பற்றிய இரண்டாம் கருத்தரங்கு, சென்னைப் பச்சையப்பன் கல்லூரி, திருவள்ளுவர் மன்றத்தில் 13-12-1997, 14-12-1997 ஆகிய இரு நாட்களில் நடைபெற உள்ளது.

அனைவரும் வருகைதந்து சிறப்பிக்குமாறு வேண்டுகிறோம்.

இயக்குநர்
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
இதழியல் ஆய்வு மையம்,
சென்னை.

இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.

---

பச்சையப்பன் கல்லூரி முதல்வர் பேராசிரியர்
முனைவர் **ஆர்.எஸ். இராகவன், எம்.எஸ்ஸி, பிஎச்.டி.,** (USA) அவர்கள்
தலைமையில்
13-121997 அன்று முற்பகல் 10.00 மணியளவில்

**திருமிகு. ரெ. பாலகிருஷ்ணன், இ.ஆ.ப.,** அவர்கள்
(இயக்குநர், ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினர் இயக்கு நரகம், மைய அரசு, சாஸ்திரி பவன், சென்னை - 6)

கருத்தரங்கைத் தொடங்கிவைப்பார்கள்

பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர்
முனைவர் **தெ. ஞானசுந்தரம், எம்.ஏ., பிஎச்.டி.,** அவர்கள்
தலைமையில் 14-12-1997 அன்று பிற்பகல் 5.00 மணியளவில்

**திருமிகு. வல்லிக்கண்ணன்** அவர்கள்

கருத்தரங்க நிறைவுரை நிகழ்த்துவார்கள்

முதல் அமர்வு

13-12-1997 முற்பகல் 11.00 - 1.00

*தலைமை :* **முனைவர் இ. சுந்தரமூர்த்தி**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| திரு. பெ.சு. மணி | ஞானபோதினி |
| முனைவர் ந. கடிகாசலம் | பஞ்சாமிர்தம் |

இரண்டாம் அமர்வு

13-12-1997 பிற்பகல் 2.00 - 5.00

*தலைமை :* **திரு. மா. சு. சம்பந்தன்**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| முனைவர் நா. செயப்பிரகாசு | ஞானசாகரம் |
| முனைவர் வீ. அரசு | பாரததேவி |
| முனைவர் ப. மகாலிங்கம் | ஊழியன் |

மூன்றாம் அமர்வு

14-12-1997 முற்பகல் 10.00 - 1.00

*தலைமை :* **முனைவர் பொற்கோ**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| திரு. ரா.அ. பத்மநாபன் | ஜெயபாரதி |
| திரு. மா.ரா. அரசு | விவேகபாநு |
| முனைவர் பழ. அதியமான் | சக்தி |

நான்காம் அமர்வு

14-12-1997 பிற்பகல் 2.00 - 5.00

*தலைமை :* **முனைவர் இரா. இளவரசு**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| முனைவர் (திருமதி) மா. ரா. சிவஅரசி | மாதர் மனோரஞ்சினி |
| முனைவர் (திருமதி)பெ. சிவசக்தி | ஜோதி |

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை – 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| பொருள் புதிது | 35. 00 |
| ஆளும் தமிழ் | 28. 00 |
| புதிய அமைச்சகம் புரிந்த பணிகள் | 10. 00 |
| தமிழின் பா வடிவங்கள் | 35. 00 |
| சங்க இலக்கியம் – கவிதையியல் நோக்கு | 110. 00 |
| நாடக மேடை நினைவுகள் | 160. 00 |
| சின்னணைஞ்சான் கதை | 65. 00 |
| தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள் | 110. 00 |
| நன்னூல் மூலமும் கூழங்கைத்தம்பிரான் உரையும் | 65. 00 |
| யாப்பருங்கலம் | 170. 00 |
| மண்டல புருடர் வழங்கிய சூடாமணி நிகண்டு | 65. 00 |
| தமிழ் நாடகமேடை முன்னோடிகள் | 40. 00 |
| காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் – ஓர் ஆய்வு | 60. 00 |
| திருக்குற்றாலநாத சுவாமி கோயில் வரலாறும் பண்பாடும் | 60. 00 |
| வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும் | 65. 00 |
| தமிழ்நாட்டு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள் | 100. 00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள், தொகுதி – 1 | 100. 00 |
| கதிர்வேற்பிள்ளை – தமிழ்ச் சொல்லகராதி, மூன்று பாகங்கள் | 600. 00 |
| தொல்காப்பியப் பொருளதிகாரம் – ஆங்கில மொழிபெயர்ப்பு | 40. 00 |
| சதாசிவப் பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள் | 40. 00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள், தொகுதி–1 | 50. 00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள், தொகுதி–2 | 40. 00 |
| நாட்டிய நன்னூல் | 25. 00 |
| கன்னடத்தில் காரைக்காலம்மையார் வரலாறு | 20. 00 |
| கபிலர் | 70. 00 |
| சங்கத் தமிழர் வாழ்வியல் | 75. 00 |
| வேதகிரியார் சூடாமணி நிகண்டு | 65. 00 |
| தமிழக மேடை நாடகப் பெண் கலைஞர்கள் – குறிப்பேடு | 25. 00 |
| Tamil India | 40. 00 |
| Studies in Tamil Prosody and Poetics | 45. 00 |
| Persona in Tolkapiyam | 50. 00 |
| A Grammar of Contemporary Literary Tamil | 80. 00 |
| Cilappatikaram (மொ.நூ.ம.ப) | 100. 00 |
| Tani pacura togai (மொ.நூ.ம.ப) | 30. 00 |
| Dedication (மொ.நூ.ம.ப) | 25. 00 |
| Temple chimes (மொ.நூ.ம.ப) | 20. 00 |
| Nala venba (மொ.நூ.ம.ப) | 45. 00 |
| Tamil Heroic Poems (மொ.நூ.ம.ப) | 40. 00 |